# THE MADRAS LEGISLATIVE ASSEMBLY

---

**Wednesday, 22nd March 1961.**

The House met in the Assembly Chamber, Fort St. George, at half past eight of the clock, the Deputy Speaker (SRI B. BHAKTAVATSALU NAIDU) in the Chair.

## I.—QUESTIONS AND ANSWERS.

## STARRED QUESTIONS.

* 981 *Q.*—

DEPUTY SPEAKER : Since the Hon. Minister for Industries has not yet come, we shall take up question No. 981 later.

*Orphans, deaf, etc. (census)*

982 *Q.*—SRI T. S. RAMASWAMY (on behalf of SRI T. T. DANIEL) : Will the Hon. the Minister for Finance be pleased to state the number of orphans, deaf, blind, lepers and lame in the State at present?

THE HON. SRI C. SUBRAMANIAM : According to the report received from the Director of Public Instruction, Madras in 1959, grants from that Department were given to 27,598 orphans in the orphanages in this State. Apart from this, there may be orphans in orphanages not receiving any grant from the Education Department and orphans under the care and maintenance of the Social Welfare Organizations or private persons. No information is available regarding their total number.

According to the 1951 Census, there were 47,472 lapers including doubtful cases in the entire Madras State excluding Kanyakumari district and Shencottah taluk of Tirunelveli district. Information is not available in regard to their present number.

As regards the deaf, blind and lame no information is available.

SRI A. A. RASHEED : Is the Hon. Minister aware of the fact that not a single deaf and dumb school is run by the Government for the handicapped? If so, will the Government consider the question of running a deaf and dumb school at district headquarters for the handicapped in the districts?

THE HON. SRI C. SUBRAMANIAM : There are deal and dumb schools. Government do extend assistance to these institutions.

SRI K. B. S. MANI : ஸார், இப்பேர்ப்பட்ட பிறவிக் குருடர்களுக்கும், நொண்டிகளுக்கும் அந்நிய நாட்டு உதவி கொடுக்கப்படுகின்றதா? அப்படி கிடைக்கும் அந்நிய உதவியிலிருந்து விஞ்ஞான ஆராய்ச்சி மூலம் அவர்களுக்கு உதவி செய்வதற்கு முயற்சி செய்யப்படுமா?

THE HON. SRI C. SUBRAMANIAM : அதைப் பற்றி எண்ணிடத்தில் இப்போது தகவல் இல்லை.

[22nd March 1961

SRI P. S. K. LAKSHMIPATHI RAJ : ஸார், இப்படிப்பட்ட செவிடு, குருடு ஆகிய அனுதைகளுக்கு பெரிய அளவிலே ஆஸ்ரமங்கள் வைத்து உதவி புரிவதற்கு தேவஸ்தானங்களுக்கு அரசாங்கம் பெரிய அளவில் உதவ முன்வருமா என்று அறிய விரும்புகிறேன்?

THE HON. SRI C. SUBRAMANIAM : தேவஸ்தானங்களிலுள்ள நிதியிலிருந்து இந்த ஏற்பாட்டைச் செய்தால் நல்லது என்பது என்னுடைய கருத்து.

SRI A. A. RASHEED : May I know whether steps have been taken for employment of these handicapped?

THE HON. SRI C. SUBRAMANIAM : Yes. Some steps have been taken. There is the question of unemployment of able-bodied persons also. Therefore we have to take a balanced view of these things.

SRI A. GOVINDASAMI : அனுதை இல்லங்களுக்கு சர்க்கார் எந்த அளவிலே உதவி செய்கிறது?

THE HON. SRI C. SUBRAMANIAM : இதுபற்றி தனிக் கேள்வி போட்டால் நல்லது.

SRI K. B. S. MANI : ஸார், இம்மாதிரி நொண்டிகளாக இருப்பவர்கள் சிலருக்கு சர்க்கார் தனிப்பட்ட சலுகைகள் கொடுத்து, படிப்புத் துறையிலே முன்னுக்கு கொண்டு வந்திருக்கிறது. ஆனுல் அவர்கள் உத்தியோகம் பெறுவதிலே சில கஷ்டங்கள் இருப்பதால், அப்படிப்பட்டவர்களுக்கு உத்தியோக விஷயத்திலும் தனிச் சலுகை கொடுத்து, அவர்கள் உத்தியோகம் பெறுவதற்கு சலுகை காட்ட அரசாங்கம் முன்வருமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இதிலே அவர்கள் எந்த வேலைக்குத் தகுதியோ அந்த வேலை கொடுப்பதற்கு முயற்சி செய்யப்படுகிறது. இதிலே தனிச் சலுகை ஒன்றும் கொடுப்பதற்கில்லை.

SRI N. MARUDACHALAM : ஸார், கோவையிலே திருப்பூரில் ஒரு ஆதி திராவிடர் கைத்தறித் தொழில் பயிற்சி பெற்று, சொல்லிக் கொடுத்துக்கொண்டு வந்த நேரத்திலே இரண்டு கண்களும் தெரியவில்லை என்பதற்காக அவர் உத்தியோகத்திலிருந்து நீக்கப்பட்டார். அவருக்கு ஏதாகிலும் உதவித் தொகை கொடுத்துதவ சர்க்காருக்கு உத்தேசம் உண்டா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இது தனிப் பிரச்னை. இந்தக் கேள்வியில் இது எழவில்லை.

*Milk and milk products*

* 983 *Q.*—SRI P. G. MANICKAM : கனம் உள்துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) பால் அல்லது பால் சம்பந்தப்பட்ட உணவுப் பொருள்கள் தயாரிப்பதற்கான திட்டங்கள் அரசாங்கத்தின் பரிசீலனையில் இருக்கிறதா ?

(இ) அவ்வாறிருப்பின், இத் திட்டங்களின் விவரங்கள் யாவை ?

(உ) இத் திட்டங்களுக்காக எவ்வளவு தொகை தேவைப்படும் என்று மதிப்பிடப்பட்டிருக்கிறது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) Yes, Sir.

(*b*) Loans will be granted to the Rural Milk Supply Co-operative Societies organized under the Madras Dairy and Milk Project and under the Co-operative Sector and also to the

22nd March 1961]

licensees in the Milk Colony at Madhavaram for the purchase of milch animals. Financial assistance will be granted for the purchase of machinery for the manufacture of by-products of milk. The questions of granting financial assistance to the Tirunelveli Co-operative Milk Supply Society for the purchase of machinery for the manufacture of by-products of milk and to the Kodaikanal Co-operative Milk Supply Union for the provision of additional equipments for cheese-making is under consideration.

(*c*) Rs. 22 lakhs.

**Sri P. G. MANICKAM** : ஸார், பால் அல்லது பால் சம்பந்தப்பட்ட உணவுப் பொருள்களிலிருந்து என்னென்ன விதமான பொருள்களைத் தயாரிப்பதற்கு இப்போது அரசாங்கம் திட்டமிட்டிருக்கிறது ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : பல பொருள்களைத் தயாரிக்கலாம். அதுவும், பாலை கெட்டுப் போகாத அளவில் தவிர்த்து அதிலே முக்கியமாக வெண்ணெய் போன்று இன்னும் பல பொருள்கள் தயாரிக்கலாம். இப்போது அதற்கான கவனம் செலுத்தப்பட்டு வருகிறது.

**Sri A. GOVINDASAMI** : மாதவரம் பண்ணையை பம்பாயிலே இருக்கும் பால் பண்ணை அளவிற்கு உயர்த்துவதற்கு அரசாங்கம் ஏதாவது திட்டமிட்டிருக்கிறதா என்று அறிய விரும்புகிறேன் ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : பம்பாயிலுள்ள அளவில் செய்தால் மாத்திரம் போதாது என்பதை கனம் அங்கத்தினர் அவர்களுக்குத் தெரிவித்துக் கொள்கிறேன். பம்பாயிலுள்ள ஆறே பால் பண்ணை ஒரு சிறிய அளவிலே ஒரு சிறு பகுதிக்குமட்டும் தான் உதவும் வகையில் இயங்கிக் கொண்டு வருகிறது. நாம் அதற்கு மேலும்கூட உயர்த்த வேண்டும். மாதவரம் பால் பண்ணையிலே இப்போது உள்ள அளவிலே மட்டுமல்லாமல், கனம் அங்கத்தினர் மாவட்டமாகிய தென் ஆற்காடு, செங்கல்பட்டு, வட ஆற்காடு ஆகிய மாவட்டங்களிலேகூட கடன் கொடுத்து, பால் மாடுகள் வாங்கிக் கொடுத்து, அவர்களிடமிருந்து பாலை வாங்கி அதையும் சேர்த்து பெரிய அளவில் செய்ய வேண்டுமென்பது தான் அரசாங்கத்தினுடைய உத்தேசம்.

**Sri P. S. K. LAKSHMIPATHI RAJ** : ஸார், ஆங்கிலேயர்கள் இந்த நாட்டை விட்டுச் சென்று விட்டதன் காரணமாக, கொடைக்கானலில் வேலையின்றி இருக்கும் தொழிலாளர்களுக்கு வேலை கிடைப்பதற்கு இப்படிப்பட்ட பால் பண்ணை ஒன்றை அங்கே அமைக்க அரசாங்கம் ஏற்பாடு செய்யுமா ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : இதைப் பற்றி தான் சற்று முன்பு கூட சொன்னேன். அதைப்பற்றி கூட உத்தேசம் இருக்கிறது.

**Sri S. NAGARAJA MONIGAR** : ஸார், பாலினுடைய அவசியத்தை நன்றாக உணர்ந்து அதற்கான ஏற்பாடுகளைச் செய்வதற்காக நகரங்களில் கோடிக்கணக்கான ரூபாய் அந்நிய உதவி கொண்டு செலவு செய்து, அதனுடைய குறையை ஓரளவு பூர்த்தி செய்து வருகின்ற காலத்திலே, மற்ற கிராமப் பகுதிகளிலே கூட்டுறவு சொஸைடிகளில் பாலுக்கு விற்பனை வரி போடுவதைக் குறைத்தால் அல்லது கடன் வசதிகள் செய்து கொடுத்தால் நல்லது. அந்த வசதியை அங்கெல்லாம் ஏற்பாடு செய்வதற்கு முடியுமா என்று கேட்டுக் கொள்கிறேன் ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : கிராமாந்திரங்களில் பல இடங்களில் கூட்டுறவு ஸ்தாபனங்கள் ஏற்படுத்தி, மற்ற ஸ்தாபனங்களை எப்படி உயர்த்துகிறோமோ அந்த அளவிலே வளர்த்து, அதன் மூலம் அவர்களுடைய வருமானத்தை உயரச் செய்ய வேண்டுமென்பதுதான்

அரசாங்கத்தினுடைய நோக்கம். இதற்கு விற்பனை வரி சம்பந்தமில்லை என்றாலும்கூட, கனம் நிதி அமைச்சர் அவர்கள் வரவு செலவு திட்டம் சமர்ப்பிக்கின்றபோது கூறியதுபோல், இதற்கெல்லாம் எவ்வளவு சலுகை கொடுக்கப்பட்டிருக்கின்றது என்பது கனம் அங்கத்தினர் அவர்களுக்குத் தெரியும். ஆகவே எந்தெந்த வகையிலே சவுகரியங்கள் அளித்து, பாலின் உற்பத்தியை கிராமாந்திரங்களிலே பெருக்கி, அதன் மூலம் அங்குள்ளவர்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதில் அதிக கவனம் செலுத்தப் பட்டு வருகின்றது.

SRI V. K. KOTHANDARAMAN : ஸார், பாலிலே இருக்கக்கூடிய சத்தைவிட பால் பவுடரிலே சத்து மிகமிகக் குறைவாக இருக்கிறது என்று சொல்லப்படுவது உண்மையா ? ஆகவே பாலை எந்த அளவு அதிகப்படி யாக பெருக்கவேண்டுமோ, அந்த அளவில் பெருக்குவதற்கு ஏற்பாடு செய்யப்படுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : கனம் அங்கத்தினர் களுடைய அரிய யோசனையே, அரசாங்கத்தின் உத்தேசமும் ஆகும்.

SRI A. VEDARATHNAM : ஸார், பால் பண்ணைகளை விருத்தி செய்ய வேண்டுமானால், அதற்கு முக்கியமாக மாடுகள் மேய்வதற்கு மேய்ச்சல் தரிசு நிலங்கள் நிரம்ப வேண்டும். இப்போது அந்த மேய்ச்சல் தரிசுகள் எல்லாம் எப்படியோ மறைந்து விட்டன. அதையெல்லாம் மீண் டும் கிடைக்கும்படி செய்ய அரசாங்கம் முன்வருமா ? அதோடு தீனி விலை அதிகமாக இருப்பதால் அதையும் குறைப்பதற்கு அரசாங்கம் முன்வருமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : மறைந்த மேய்ச்சல் தரையை மீண்டும் பெறுவது கஷ்டம்தான். இருந்தாலும், மேய்ச்சல் வசதிக்கும், தீனி பெருகுவதற்கும் என்னென்ன செய்யவேண்டுமோ, அரசாங்கம் அதிலே எல்லாம் கவனம் செலுத்திக் கொண்டுதான் வருகிறது.

### *Butter-cum-Milk Factory*

* 984 *Q.*—SRI P. G. MANICKAM : கனம் உள்துறை அமைச்சர் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) பாலைப் பால் பவுடராகவும், வெண்ணெயாகவும் மாற்றுவதற் கான தொழிற்சாலை ஒன்று நிறுவுவது பற்றி அரசாங்கத்தாரால் பரிசீலனை நடத்தப்பட்டு வருகிறதா ?

(இ) அப்படியாயின், இத்தொழிற்சாலை எந்த இடத்தில் நிறுவப் படும் ?

(உ) இத்தொழிற்சாலை நிறுவப்பட எவ்வளவு தொகை தேவைப் படும் ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) & (*b*) There is a proposal for establishment of butter-*cum*-milk powder factory included in the Third Five-Year Plan. The location of the factory and the time of implementation of the Scheme have yet to be finalised.

(*c*) The outlay for the scheme in the Third Five-Year Plan is Rs. 15 lakhs.

### *Textile workers (wages)*

* 985 *Q.*—SRI N. MARUDACHALAM : கனம் கைத்தொழில் அமைச்சர் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதில் அளிப்பாரா—

நெசவாலைகளிலிருந்து நீக்கப்பட்ட நெசவாலைத் தொழிலாளர்களின் வேலை நீக்குதலைத் தகுந்த நீதிமன்றம் ஊர்ஜிதம் செய்யும் வரை ஆலை முதலாளிகள் அவர்களுக்கு அரைச் சம்பளம் கொடுக்கும்படிச் செய்வதற் கான ஏற்பாடு செய்யும் உத்தேசம் உண்டா ?

THE HON. SRI R. VENKATARAMAN : No, Sir.

22nd March 1961]

SRI N. MARUDACHALAM : ஸார், தொழிலாளர் மில்லிலேயிருந்து வேலையிலிருந்து நீக்கப்பட்ட பிறகு, அட்ஜுடிகேஷன் மூலமாக தீர்ப்பளிக்கப் பட்டு அவர்கள் வேலைக்குச் சென்றால், முதலாளிகள் அவர்களை வேலைக்கு எடுத்துக் கொள்ளாமல், தொழில் கோர்ட்டை விட்டு ஹைகோர்டுக்குப் போகிறார்கள். அங்கு செல்வதால் காலதாமதம் ஏற்படுகிறது. அதனால் அந்த சமயத்தில் தொழிலாளர்கள் மிகவும் கஷ்டப்படுகிறார்கள். ஆகவே அந்த சமயத்தில் அவர்களுக்கு பாதிச் சம்பளமாவது கொடுப்பதற்கு சிபாரிசு செய்ய சர்க்காருக்கு உத்தேசம் உண்டா ?

THE HON. SRI R. VENKATARAMAN : அந்தவிதமான உத்தேசம் இப்போது இல்லை.

DEPUTY SPEAKER : Since the Hon. Minister for Industries has already come, we will take up question No. 981.

*Retired Deputy and Joint Registrars (Re-employment)*

* 981 *Q.*—SRI S. M. ANNAMALAI : கனம் கைத்தொழில் அமைச்சர் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) கூட்டுறவு இலாகாவில் **Deputy Registrars, Joint Registrars** பதவிகளில் ஓய்வுபெற்றவர்கள் எத்தனை பேர் இவ்வாண்டு நியமிக்கப் பட்டுள்ளனர் ?

(இ) அதற்கான காரணங்கள் யாவை ?

THE HON. SRI R. VENKATARAMAN : (அ) No retired Deputy Registrar or Joint Registrar of Co-operative Societies has been re-employed in the Co-operative Department during the current year.

(இ) Does not arise.

SRI S. M. ANNAMALAI : இப்படி பல பேர்கள் "ஸீனியர் ஹாண்ட்ஸ்" சர்வீஸில் உள்ளவர்கள் ப்ரமோஷனுக்குக் காத்துக்கொண்டிருக்கும்பொழுது ஓய்வு பெற்ற சில பேர்களை மறுபடியும் வேலையில் வைப்பது நியாயமா ? இதை சர்க்கார் பரிசீலித்தார்களா ?

THE HON. SRI R. VENKATARAMAN : அது மாதிரி வைக்கவில்லை என்று பதில் சொன்னேன்.

*S.S.L.C. Examination (failures)*

* 986 *Q.*—SRI A. A. RASHEED (on behalf of SRI S. PAKKIRISAMI PILLAI) : Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) the percentage of failures in the S.S.L.C. Examination in October 1960; and

(*b*) the reasons therefor?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) Among the candidates who appeared for the Examination, 76 per cent were not eligible for University Courses of study.

(*b*) No special reason can be assigned to the high percentage of failures, but generally, candidates appearing for the October Examinations do not fare as well as those appearing for the March Examinations.

[22nd March 1961

SRI A. A. RASHEED : May I know, Sir, what are the steps the Government have taken to prevent the colossal wastage of man-hours and money?

THE HON. SRI C. SUBRAMANIAM : I do not understand the question. Perhaps, the hon. Member, Sri A. A. Rasheed, means how more number of students will be enabled to pass the examination. We are trying to improve the quality of education.

SRI A. GOVINDASAMI : ஜில்லாவில் படிக்கக்கூடிய மாணவர்கள் எஸ்.எஸ்.எல்.ஸியில் குறிப்பாக விஞ்ஞான பரீட்சையிலும், ஆங்கிலப் பரீட்சையிலும் தேர்வு பெருமல் இருக்கிற நிலைமைக்குக் காரணம் போதுமான "எல்.டிக்கள்" கிடைக்கவில்லை என்று சொல்லப்படுகிறதே? அதைத் தடுப்பதற்கு அரசாங்கம் என்ன நடவடிக்கை எடுத்துக்கொண்டிருக்கிருர்கள்?

THE HON. SRI C. SUBRAMANIAM : அதைத் தவிர்ப்பதற்கு இப்பொழுது அவர்களுக்கு உயர்ந்த சம்பள விகிதம் கொடுக்கப்பட்டிருக்கிறது. இந்த ஆண்டிலே அதிகமான பேர்கள் பயிற்சி பெறுவதற்கு முன் வந்திருக்கிருர்கள்.

SRI K. SATTANATHA KARAYALAR : மூன்ருவதுபாரம் படிப்பு முடிந்தவுடனேயே சர்க்கார் ஒரு பரீட்சை வைத்தால் தரக்குறைவான மாணவர்கள் மேலே போகாமல் இருப்பதற்கு வாய்ப்பு இருக்குமே.

THE HON. SRI C. SUBRAMANIAM : எல்லோருக்கும் பொதுவாக "ஸெவென்த் ஸ்டாண்டர்டு" என்று ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. அப்பொழுது இதுபற்றி கவனிக்கப்படும்.

SRI A. VEDARATHNAM : மிகப் பெரும்பாலான மாணவர்கள் ஆங்கிலத்தில் சில மார்க்குகள் குறைவாக வாங்கிய காரணத்திஞல் பரீட்சையில் தவறியிருக்கிருர்களா? மற்ற பரீட்சைகளில் தேறியிருந்தால்கூட ஆங்கிலப் பரீட்சையில் தவறிய காரணத்திஞல், அந்த மொழிப் பரீட்சையில் தேருத காரணத்திஞல், அவர்களை தங்கவைப்பதன் மூலம் நமது தேசிய நஷ்டத்தை தவிர்க்க அரசாங்கம் ஏதாவது முயற்சி எடுத்துக்கொள்ளுவார்களா?

THE HON. SRI C. SUBRAMANIAM : அந்த மாதிரி மாணவர்களுக்கு பாஸ் கொடுப்பதஞல் தேசிய லாபம் ஒன்றும் வந்துவிடாது. அவர்களுக்கு போதுமான தகுதி இருந்தால்தான் தேசத்திற்கு நன்மை ஏற்படும். ஆங்கிலத்தில் பல விஷயங்களையும் தெரிந்துகொள்ள வேண்டியிருக்கிறது. ஆகவே, அதையும் கணக்கில் எடுத்துக்கொள்ளுவது அவசியமாக இருக்கிறது.

SRI S. RANGANATHA MUDALIAR : Sir, in most schools in our State, excursions and N.C.C. camps are arranged in the months of February and March and in that way they are interfering with the studies of the students resulting in failures. Would the Government take measures to see that these camps and tours are arranged in the early part of the year?

THE HON. SRI C. SUBRAMANIAM : I do not think the reason given by the hon. Member is correct for the failures that are taking place. The camps are arranged in such a way that they do not interfere with the curricular activities.

22n arch 1961]

**I A. GOVINDASAMI** : பல பள்ளிக்கூடங்களில் விஞ்ஞானக் ங்கள் இல்லாமல் இருப்பதினுலும், அதற்குத் தேவையான கருவிகள் ல்லாமல் இருப்பதினுலும், அந்த நிலைமையை தவிர்ப்பதற்கு அரசாங்கத் தால் தனியாக நிதி ஒதுக்க முடியுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : விஞ்ஞானக்கூடங்களுக்கு கட்டிடங்கள் கட்டுவதற்கும், அதற்கான கருவிகள் அமைப்பதற்கும் சிறப் பாக பள்ளிக்கூடங்களுக்கு உதவி வழங்கப்படுகிறது. பல பள்ளிக்கூடங்கள் இப்பொழுது கட்டிடங்களும், கருவிகளும் பெற்று வருகிருர்கள்.

SRI S. NAGARAJA MONIGAR : தமிழ் மொழி தாய் மொழி என்று ஆசைப்பட்டு இருக்கிற மொழியிலிருந்து மாறிக்கொண்டிருக்கும் நேரத்தில் இம்மாதிரியான கஷ்டங்கள் தவிர்க்க முடியாதது. இன்னும் சில வருஷங்களுக்கு நமது வருங்கால சந்ததிகளுக்கு இந்தக் கஷ்டம் இருக் கத்தான் செய்யும். படித்த பிறகும் கூட நமது மாகாணத்திற்குள்ளேயே அவர்களுக்கு வேலை வாய்ப்புகள் கிடைப்பதிலும் இம்மாதிரி கொஞ்சம் கஷ்டம் இருக்கும் என்பது சரியான எண்ணம் தானு ?

THE HON. SRI C. SUBRAMANIAM : கனம் அங்கத்தினர் பதில் சொன்னதற்காக அவர்களுக்கு என்னுடைய நன்றியை தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

SRIMATHI KAMALAMBUJA AMMAL : இம்மாதிரி பரீட்சையில் தவறியவர்களின் எண்ணிக்கை தொகையில் கிராமப் பகுதிகளிலுள்ள மாணவர்கள் அதிகமா ? அல்லது நகர்புறங்களிலுள்ள மாணவர்கள் அதிகமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இரண்டு பக்கத்திலும்தான் இருக்கும். நகரப் பகுதியிலே இருப்பவர்களுக்கு மற்றவிஷயங்களில் மனதை வேறு வழியிலே செலுத்தக்கூடிய சந்தர்ப்பங்கள் இருப்பதினுல் அவர்கள் தவறிவிடுகிருர்கள். கிராமப் பகுதிகளில் போது மான வசதிகள் இல்லாததினுல், அங்கே மாணவர்கள் தவறிவிடுகிருர்கள். ஒன்றுக்கு ஒன்று சரி செய்துவிடும் என்று நினைக்கிறேன்.

*Agricultural production programme (aid)*

* 987 *Q*.—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Chief Minister be pleased to state—

(*a*) whether there is any proposal to give special grants and technical aid to Panchayats and Panchayat Unions for implementing comprehensive agricultural production programme during the Third Five-Year Plan in the State; and

(*b*) if so, the details thereof?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) & (*b*) A total sum of Rs. 750 lakhs for a period of five years has been provided in the Panchayat Development Schematic Budget of this State for agricultural activities in all the Panchayats and Panchayat Unions.

The total provision of Rs. 750 lakhs will be allocated equally among all Panchayat Development Blocks at the rate of 2 lakhs per block for five years. Out of the total allotment of Rs. 2 lakhs, a sum of Rs. 1 lakh will be reserved for distribution as a specific percentage grant among Panchayats of the Block for being used on certain specific purposes prescribed by Government. In respect of the above one lakh, the grant will cover two-thirds of the expenditure incurred by the Panchayat.

The balance of Rs. 1 lakh per block for the five-year period will be made available as out-right grant to Panchayat Unions to be used on certain other specific purposes.

SRI N. K. PALANISAMI : Sir, in view of the fact that the present method of raising foodcrops in blocks and Panchayat Unions are in effective, whether there is any proposal to substitute the present method so that money allotted can be effectively spent and more foodcrops can be raised?

THE HON. SRI C. SUBRAMANIAM : The first presumption of the hon. Member that there has not been any increase in agricultural production, is wrong. I do agree that it would be more effective when the Panchayat Unions are brought into the picture.

SRI V. K. KOTHANDARAMAN : விவசாய உற்பத்தி திட்டத்தை நிறைவேற்றுவதற்கு விவசாய கருவிகள் அவசியமானது. எப்படி இரும்பு "கோட்டா" தனியார்களுக்கு கொடுக்கப்பட்டிருக்கிறதோ, எப்படி முதலில் உர விநியோகத்தை தனியார்களுக்கு கொடுத்துக்கொண்டு வந்து, பிறகு கூட்டுறவு சங்கங்களின் மூலம் உரம் விநியோகம் செய்யப்படுகிறதோ, அதேபோன்று விவசாய கருவிகளை உற்பத்தி செய்வதற்காக பஞ்சாயத்து யூனியன்களுக்கு "ஸ்டீல் கோட்டா" கொடுத்து உதவி செய்ய ஏற்பாடு செய்யப்படுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இந்தக் கேள்வி எழவில்லை.

SRI S. M. ANNAMALAI : கனம் அமைச்சர் அவர்கள் பதில் சொல்லுகிற பொழுது ஒவ்வொரு பிளாக்குக்கும் ரூ. 2 லட்சம் தரப்படும் என்று சொன்னார். ஒரு பிளாக் என்று சொன்னால், சில பிளாக்கில் 2 பிர்காக்கள் இருக்கின்றன, மக்கள் தொகை அதிகமாக இருக்கிறது. சில பிளாக்குகளில் ஒரு பிர்க்கா இருக்கிறது, ஜனத்தொகை குறைவாக இருக்கிறது. மக்கள் தொகை குறைவாக இருக்கும் பிளாக்குக்கும், அதிகமாக இருக்கும் பிளாக்குக்கும் ஒரே ரீதியாக ரூ. 2 லட்சம் கொடுப்பது நியாயமா ? மக்கள் ஜனத்தொகை அடிப்படையில் இதைப் பிரித்துக் கொடுப்பதற்கு சர்க்கார் முன்வருவார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : ஏறக்குறைய ஒரே அளவு ஜனத்தொகை இருக்கக்கூடிய அளவுக்குத் தான் ஏற்பாடு செய்திருக்கிறார்கள். மாறுதல் கொஞ்சம் தான் இருக்கும். சில இடங்களில் பரப்பு அளவு அதிகமாக இருக்கலாம். இதையெல்லாம் கவனத்தில் கொண்டு ஒரு கணக்குப் போட்டு இதைப் பிரித்துக் கொடுப்பது என்றால், மிகவும் கஷ்டமாக இருக்கும். ஆகையினால் ரூ. 2 லட்சம் என்று பிரித்துக் கொடுக்கப்பட்டிருக்கிறது.

SRI A. GOVINDASAMI : உற்பத்தி பெருக்கத்திற்காக ஒவ்வொரு பஞ்சாயத்திலும் விவசாய சங்கம் அமைப்பதற்கு அரசாங்கத்தில் ஏதாவது திட்டம் இருக்கிறதா ? விவசாய சங்கம் அமைத்தால் கட்சிகள் அதில் புகுந்துவிடும் என்று தேசீய அபிவிருத்திக் குழுவில் கருதி, அந்த எண்ணத்தைக் கைவிடவேண்டுமென்று ராஜ்ய சர்க்கார்களுக்கு சிபாரிசு செய்யப்பட்டிருக்கிறதா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : அம்மாதிரி என்னிடம் தகவல் ஒன்றும் இல்லை. தனியாக விவசாய சங்கம் ஏற்படுத்தவேண்டியது அவசியமா என்பதை பரிசீலிக்கவேண்டும். பஞ்சாயத்துகளே விவசாய அபிவிருத்திக்கு பொறுப்பு எடுத்துக்கொள்ள வேண்டுமென்று சொல்லுகிறபொழுது, அதற்குள் விவசாய சங்கம் ஒன்று ஏற்படுத்தி, பஞ்சாயத்துக்கும் விவசாய சங்கத்திற்கும் ஒரு போட்டியை உண்டாக்க வேண்டும் என்று கனம் அங்கத்தினர் அவர்கள் நினைக்கிறார்களா என்று தெரியாது.

22nd March 1961]

பஞ்சாயத்தில் தலையிடமுடியவில்லை என்றால், விவசாய சங்கத்திலாவது தலையிடலாமா என்று திராவிட முன்னேற்ற கழக அங்கத்தினர் எண்ணுகிறார்களா என்பது தெரியவில்லை.

SRI N. MARUDACHALAM : பஞ்சாயத்து ஏரியாவுக்கு ரூ. 2 லட்சம் கொடுப்பதாகச் சொல்லுகிறார்கள். பின்தங்கிய பஞ்சாயத்து ஏரியாவுக்கு அதிகமாகக் கொடுப்பதற்கு சர்க்கார் ஆலோசிக்குமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : பின்தங்கிய பஞ்சாயத்துகளுக்கு வேறு வகையிலே அதிக மான்யம் கொடுப்பதற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

*Bridge across Pazhavarn (Thiruppanandal-Narasingampettai Road)*

* 988 Q.—SRI T. R. RAMAMIRTHA THONDAMAN : கனம் பொது மராமத்து அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

திருப்பனந்தாள்—நரசிங்கம்பேட்டை சாலையில் (வயா) திருலோக்கி ருரியமூலை பழவாற்றிற்கு பாலம் கட்டி கப்பிபோட திட்டம் உண்டா ? எப்போது அவ்வேலை ஆரம்பிக்கப்படும் ?

THE HON. SRI P. KAKKAN : Both metalling the road and construction of bridge have not been included in any approved programme at present.

SRI T. R. RAMAMIRTHA THONDAMAN : ஸார், இந்த திருப்பனந்தாள் நரசிங்கம்பேட்டை (வயா) திருலோக்கிருரியமூலை ரோடு நீண்ட நாளாக மண் ரோடாகவே இருந்து, ரெயில்வே ஸ்டேஷனுக்குப் போகும் ரோடாக இருக்கிறது. இந்த மூன்றாவது திட்டத்திலாவது, முதலாவதாக இந்த ரோட்டைப் போட்டு படிவாத்துரை பாலத்தையும் கட்ட நடவடிக்கை எடுப்பார்களா ?

THE HON. SRI P. KAKKAN : அந்த ரோடு போட இப்பொழுது அரசாங்கம் எந்த நடவடிக்கையும் எடுக்கவில்லை. கனம் அங்கத்தினர் சொல்லுவதால் மீண்டும் பரிசீலனை செய்து அதைச் செய்ய முன்வரலாம்.

*Rural Development Department (expenditure)*

* 989 Q.—SRI T. S. RAMASWAMY : Will the Hon. the Minister for Finance be pleased to state—

(a) the total expenditure by the State Government under the Rural Development Department for the last two years (1958-59 and 1959–60);

(b) the total expenditure for the salaries of officers and contingencies; travelling allowances and dearness allowances, rents and stationery for the last two years; and

(c) the percentage of expenditure on salaries and travelling allowance and dearness allowance to the total expenditure?

THE HON. SRI C. SUBRAMANIAM :

| (a) 1958–59. | RS. |
|---|---|
| Community Development, National Extention Service, Local Development Works and Training Centres. | 3,00,28,912 |
| Loans .. .. .. .. .. .. | 1,39,49,052 |
| Total .. | 4,39,77,964 |

[22nd March 1961

| 1959–60. | RS. |
|---|---|
| Community Development, National Extension Service, Local Development Works, and Training Centres. | 3,19,69,233 |
| Loans .. .. .. .. .. .. | 1,24,84,488 |
| Total .. | 4,44,53,721 |

(*b*) Expenditure on 'pay and allowances ' Office contingencies' and 'Other charges'.—

| | RS. |
|---|---|
| 1958–59 .. .. .. .. .. .. | 1,20,45,365 |
| 1959–60 .. .. .. .. .. .. | 1,24,56,640 |

| | | |
|---|---|---|
| (*c*) | 1958–59 .. .. .. . | 19·82 per cent. |
| | 1959–60 .. .. .. .. | 22·64 per cent. |

*Conduct of a Professor (enquiry)*

* 990 *Q.*—SRI A. A. RASHEED : Will the Hon. the Minister for Finance be pleased to state the present stage of enquiry into the conduct of the Professor of Geography, Presidency College, Madras, now under suspension?

THE HON. SRI C. SUBRAMANIAM : The Tribunal for Disciplinary Proceedings which enquired into the conduct of the officer has submitted its report to Government and it is under examination.

SRI A. A. RASHEED : Is it a fact that the enquiry against this Professor was conducted by two Tribunals and if so, may I know the reason for this double enquiry ?

THE HON. SRI C. SUBRAMANIAM : The first Tribunal did not examine some of the important witnesses. Therefore, it was ordered that those witnesses should be examined. Meanwhile, there was a change in the Tribunal and I think that is why the hon. Member says that there were two Tribunals.

SRI A. VEDARATHNAM : விசாரணையின் முடிவு என்ன என்று சொல்ல முடியுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : முடிவு எடுக்கவில்லை ; பரிசீலனையில் இருக்கிறது.

SRI A. A. RASHEED : Is it a fact that the Professor concerned has been under suspension for three years and if so, may I know the reason for the delay in arriving at a decision?

THE HON. SRI C. SUBRAMANIAM : It was mentioned by the hon. Member himself that the matter had to be enquired twice.

SRI V. K. KOTHANDARAMAN : இந்தப் பேராசிரியர், முதல் ட்ரிப்யூனல், இவர் குற்றவாளியில்லை என்று தீர்ப்பு அளித்த தாகவும் அதன் மேல் இன்னும் சிலபேரை விசாரணை செய்ய வேண்டு மென்றே இரண்டாவது ட்ரிப்யூனல் போடப்பட்டிருக்கிறது என்பதும் உண் மையா ?

22nd March 1961]

**The Hon. Sri C. SUBRAMANIAM** : அதற்கு ஆதாரம் கிடையாது ; இந்த விஷயத்தில் சர்க்கார் ஒரு முடிவு எடுப்பதற்கு முன்பு மற்ற விவரங்களைச் சொல்ல முடியாது.

*Hindi in Teachers' Training Schools*

* 991 *Q.*—**Sri A. VEDARATHNAM** : கனம் நிதி அமைச்சர் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) ஆசிரியர் பயிற்சிப் பள்ளிகளில் இப்போது ஹிந்தி போதனை நிறுத்தப்பட்டிருக்கிறதா ?

(இ) அப்படியானால், இதன்மூலம் வேலை இழந்த ஆசிரியர்கள் எத்தனை பேர் ?

(உ) இப்படி வேலை இழந்த ஹிந்தி பண்டிதர்களுக்கு அரசாங்கம் வேறு என்ன வாய்ப்பளித்திருக்கிறது ?

**The Hon. Sri C. SUBRAMANIAM** :

(அ) Yes, Sir.

(இ) Eighteen, Sir.

(உ) No steps were taken to provide these pandits with alternative appointments as such of those as were qualified could secure employment in the high schools which were opened in 1960–61. The appointment of unqualified teachers was purely on a temporary basis and no steps were necessary to retain them in service.

**Sri A. VEDARATHNAM** : தகுதி பெற்ற ஹிந்தி பண்டிதர்கள் எல்லோரையும் ஹைஸ்கூல்களில் அப்ஸார்ப் செய்யப்பட்டுவிட்டதா ? ஹிந்தி பண்டிதர்கள் இல்லாத இடங்களுக்கு அவர்களை நியமிக்க அரசாங்கம் முன் வருமா ?

**The Hon. Sri C. SUBRAMANIAM** : இது சர்க்கார் பள்ளிகளில் இல்லை ; தனிப்பட்ட பள்ளிகளில் அவசியம் இருக்கும் இடங்களில் இந்த பண்டிதர்கள் நியமிக்கப்படுவார்கள்.

**Sri P. S. K. LAKSHMIPATHI RAJ** : ஒரு சில பள்ளிகளிலே ஆசிரியர்களே ஹிந்தி வகுப்புக்குப் போகும் மாணவர்களை வகுப்புக்குப் போகாமல் வெளியே போய்விடுங்கள் என்று சொல்வது சர்க்காருக்குத் தெரியுமா ? அதைத் தடுக்க ஏதாவது நடவடிக்கை எடுக்கப்படுமா ?

**The Hon. Sri C. SUBRAMANIAM** : அதுமாதிரி தகவல் இல்லை ; அங்கத்தினருக்குக் கிடைத்தால் அதை எனக்குத் தனியாக எழுதி அனுப்பக் கோருகிறேன்.

*Wage Board for beedi workers*

* 992 *Q.*—**Sri V. K. KOTHANDARAMAN** : கனம் கைத்தொழில் அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) பீடித் தொழிலாளர்களுக்கு சம்பள நிர்ணய போர்டு அமைக்க உத்தேசமுண்டா ?

(இ) இது விஷயமாக நமது சர்க்கார் மத்திய சர்க்காருக்கு என்ன ஆலோசனை கூறியுள்ளார்கள் ?

**The Hon. Sri R. VENKATARAMAN** : (அ) பீடித் தொழிலாளர்களுக்கு சம்பள நிர்ணய போர்டு அமைக்க அரசாங்கத்திற்கு உத்தேசம் இல்லை.

[22nd March 1961

(இ) இது விஷயமாக மத்திய சர்க்காரிடமிருந்து ஒரு தகவலும் வரவில்லை. இந்த சர்க்காரும் மத்திய சர்க்காருக்கு ஒரு ஆலோசனையும் கூறவில்லை.

SRI V. K. KOTHANDARAMAN : ஸார், ஒரு ராஜ்யத்திலே, குறிப்பாக நம் ராஜ்யத்திலே மினிமம் வேஜ் இருக்கும்போது, பக்கத்து ராஜ்யங்களிலே அதைவிடக் குறைந்த கூலி இருப்பதால், இந்தக் கூலியைக் கொடுக்க முடியாமல், பக்கத்து ராஜ்யங்களுக்கு பீடி தொழிற்சாலைகளை எடுத்துப் போய் நடத்தும் காரணத்தால், நம் சர்க்காருடைய வருமானமும் தடைபடுகிறது, இந்த ராஜ்யத்திலே தொழிலாளிகளுக்கும் வேலையில்லாமல் போகிறது என்கிற காரணத்தினுல், வெகு விரைவில் அகில இந்திய ரீதியில் ஒரு பீடி நிர்ணய போர்டை நிறுவ நடவடிக்கை எடுப்பார்களா ?

THE HON. SRI R. VENKATARAMAN : கனம் அங்கத்தினரின் முன்னுரை அவ்வளவும் தவறு. பக்கத்து ராஜ்யங்களில் நம் ராஜ்ய மினிமம் வேஜைவிடக் குறைவு இல்லை. ஆகவே ஆலோசனைக்கு அவசியம் இல்லை.

SRI K. SATTANATHA KARAYALAR : பீடிக்கு குறைந்த பட்ச கூலி நிர்ணயம் செய்வதில் நீளம் ஒரு இன்ச், ஒன்றரை இன்ச், இரண்டு இன்ச் என்ற அடிப்படையில் செய்திருக்கும்போது, அது இடத்திற்கு இடம் மாறுபடுவதற்குக் காரணம் என்ன ?

THE HON. SRI R. VENKATARAMAN : மினிமம் வேஜ் அந்த அடிப்படையில் முதலில் சிபாரிசு செய்யப்பட்டது. சென்ற ஜூலை மாதம் 1960-ம் வருஷத்தில், ஒரு ஒப்பந்தம் செய்துகொண்டோம். அது பீடித் தொழில் பூராவுக்கும் அமுலாகும். அந்த ஒப்பந்தத்தில் ஜாடி பீடி, சாதா பீடி என்ற இரண்டே வகையில் கூலி நிர்ணயம் செய்யப்பட்டிருக்கிறது. அது இப்பொழுது திருப்திகரமாக அமுல் நடக்கிறது.

SRI V. K. KOTHANDARAMAN : ஆந்திர ராஜ்யத்திலே, சித்தூர் பிராந்தியத்தில் ரூ. 1–2–0 அல்லது 1–6–0 தான் கூலி ; ஆகையினுல் குறிப்பாக இன்றைக்கு " எக்ஸ்பிரஸ் " பீடி, " 7 மார்க் " பீடி இது போன்றவைகளை பல கம்பெனிகள் நடத்திக்கொண்டு வருகிறுர்கள் என்பது அமைச்சருக்கு ஞாபகத்தில் இருக்கும். இதுபற்றி வடஆர்க்காடு பீடி தொழிற்சங்கம் எழுதியிருக்கிறது, பரிசீலனை செய்ய வேண்டும் என்று. ஆகவே ஒரு சம்பள நிர்ணய போர்டைக் கொண்டுவர முயற்சி எடுக்கப்படுமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : சர்க்காருக்கு இருக்கும் தகவலில் கனம் அங்கத்தினர் சொன்னது தவறு என்று இருக்கிறது.

*Department enquiries on Police officers (Kanyakumari)*

* 993 *Q.*—SRI T. S. RAMASWAMY : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) the number of Police officers against whom departmental enquiries were made in Kanykumari district in 1960;

(*b*) the nature of punishments given to them and the reasons therefor;

(*c*) the number of appeals pending before the Government at present ; and

(*d*) the number of Police officers dismissed in other districts during 1959–60 and 1960–61?

22nd March 1961]

THE HON. SRI M. BHAKTAVATSALAM :

(a) 28.

(b)

| | |
|---|---|
| Dismissal ... ... ... ... | 2 |
| Removal from service ... ... | 1 |
| Compulsory retirement ... ... | 2 |
| Reduction of pay ... ... ... | 20 |
| Censure ... ... ... ... | 1 |
| Warning ... ... ... ... | 1 |
| Black mark ... ... ... ... | 1 |

These punishments have been awarded for various reasons like unlawful detention, neglect of duty, disobedience of orders, misdemeanours, absence without permission, reprehensible conduct, etc.

(c) 3.

(d)

| | |
|---|---|
| 1959–60 ... ... ... ... | 124 |
| 1960–61 (upto 30—11—1960) ... | 115 |

*Appointment of High Court Judges (All-India Panel)*

* 994 Q.—SRI A. A. RASHEED : Will the Hon. the Minister for Finance be pleased to state whether the Government have accepted or not the recommendation of the Union Government for the appointment of High Court Judges from All-India Panel of names?

THE HON. SRI C. SUBRAMANIAM : The proposal that High Court Judges should be appointed from an All-India panel is not a recommendation addressed by the Union Government to this Government. It is a recommendation addressed to the Union Government by the States' Reorganisation Commission. The question of the State Government accepting or not accepting the recommendation does not, therefore, arise.

SRI A. A. RASHEED : May I know the advantages in having such as All-India Panel of names?

THE HON. SRI C. SUBRAMANIAM : I would suggest to the hon. Member to go through the States' Reorganization Commission's report.

*Scholarships to Students of other States*

* 995 Q.—SRI K. SATTANATHA KARAYALAR : Will the Hon. the Minister for Finance be pleased to state—

(a) whether the Government have granted any scholarships to students studying in other States; and

(b) if so, the courses for which such scholarships are given?

THE HON. SRI C. SUBRAMANIAM : (a) Yes, Sir.

[22nd March 1961

(b) (1) One scholarship in the Rashtriya Indian Military College, Dehra Dun;

(2) One scholarship for the Ph.D. course in the Indian School of International Studies, New Delhi;

(3) Two scholarships for training in Marine Engineering at Calcutta; and

(4) One scholarship for the Executive Cadets of the Training Ship "Dufferin".

**Sri K. SATTANATHA KARAYALAR** : ஸார், நம் மாவட்டத்திலே இருக்கும் சில கோர்ஸ்களுக்கு, மாணவர்கள் இதர மாவட்டங்களில் படிப்பதால் ஸ்காலர்ஷிப்கள் கொடுக்கப்படுவதில்லை ; மாணவர்கள் தங்கள் பெற்றோர்கள். அந்த மாவட்டங்களிலே இருக்கும் காரணத்தால், அங்கே படிக்கிறார்கள், கல்வித் தரத்தில் அந்த ஸ்டேட்டுகளில் சிறந்தவர்களாக இருந்தாலும், நம் மாகாண அடிப்படையில் கொடுக்கப்படுவதில்லை என்பது உண்மையா ?

**The Hon. Sri C. SUBRAMANIAM** : நாம் கொடுக்கும் ஸ்காலர்ஷிப்கள் மற்ற ராஜ்யங்களில் படிக்கும் இந்த மாகாண மாணவர்களுக்குத்தான் கொடுக்கப்படுகிறது.

9 a.m. **Sri K. SATTANATHA KARAYALAR** : டெக்ஸ்டைல் டெக்னலஜி நம் மாகாணத்தில் இருப்பதால் பிற மாகாணத்தில் படிப்பவர்களுக்கு கொடுப்பதில்லை. அங்கு படிக்கிறவர்கள் சென்னையைச் சேர்ந்தவர்களாக இருக்கிற காரணத்தால் அந்த ஸ்டேட் கொடுப்பதற்கில்லை. நம் ஸ்டேட்தான் கொடுக்கவேண்டும். அதற்காக நம் மாகாணத்திலிருந்து அவர்களுக்கு ஸ்காலர்ஷிப் கொடுக்கப்படுமா ?

**The Hon. Sri C. SUBRAMANIAM** : இங்கே படிப்பதற்கு வசதி இருக்கும்போது வெளி மாகாணத்திலே படிக்கக்கூடிய மாணவர்களுக்கு ஸ்காலர்ஷிப் கொடுப்பதில்லை. இதனால் சில கணக்கு வைக்க முடியாமல் போய்விடுகிறது என்பதற்காக இதை கவனிக்கவேண்டியிருக்கிறது.

**Sri S. NAGARAJA MONIGAR** : அப்படி பிற மாகாணங்களில் படிக்கும் நமது மாணவர்களுக்கு இப்போது கொடுக்கும் ஸ்காலர்ஷிப்பையே அதிகரிக்க சர்க்கார் முன்வருமா ?

**The Hon. Sri C. SUBRAMANIAM** : இது போன்ற சில சிறப்புப் பாட பயிற்சிகளுக்கு ஸ்காலர்ஷிப் கொடுக்கப்படுகிறது. இப்பொழுது கொடுக்கக்கூடிய பணம் போதும் என்று சர்க்கார் கருதுகிறது. அவசியம் ஏற்பட்டால் பின்னால் பரிசீலனை செய்யப்படும்.

**Sri A. GOVINDASAMI** : இதர ராஜ்யங்களிலிருந்து இங்கு பயிலும் மாணவர்களுக்கு கல்விச் சலுகை வழங்கப்படுகிறதா ?

**The Hon. Sri C. SUBRAMANIAM** : பொதுவாகக் கேள்வி கேட்டால் உடனே சொல்வதற்கில்லை. தனிக் கேள்வி போடவேண்டுமென்று சொல்ல விரும்புகிறேன்.

*Tractor factory*

*996 *Q.*—**Sri A. VEDARATHNAM** : கனம் கைத்தொழில் அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) சென்னைக்கு அருகாமையிலுள்ள செம்பியத்தில் ஆரம்பமாக இருக்கும் டிராக்டர் தொழிற்சாலையில் நம் மாநில, மத்திய சர்க்கார்களின் பங்குகள் என்ன ?

22nd March 1961]

(இ) வெளிநாட்டு உதவி இதற்கு உண்டா ?

(உ) இதன் உற்பத்தி சக்தியும், வேலே வாய்ப்பு அளவும் என்ன ?

(எ) எவ்வளவு மூலதனத்தில் இது துவக்கப்பட இருக்கிறது ?

THE HON. SRI R. VENKATARAMAN : (அ) The industrial undertaking referred to by the hon'ble Member is being set up in the private sector and neither the State Government nor the Central Government has any financial interest in it.

(இ), (உ) & (எ) Since the Industry is entirely in the private sector, Government have no responsibility in these matters.

SRI A. VEDARATHNAM : இந்த இயந்திரசாலேயை அமைப்பதற்கு எந்த வெளிநாட்டார் உதவியைக் கேட்டார்கள். இங்கு உற்பத்தி செய்யும் டிராக்டரின் விலே எவ்வளவு ?

THE HON. SRI R. VENKATARAMAN : எந்த வெளி நாட்டிலிருந்து வந்தார்கள் என்று சொல்லத் தயாராய் இல்லே. ஆனால் 3,000 டிராக்டர்கள் உற்பத்தி செய்ய முடியும் என்று சொல்ல முடியும்.

*Bonus to workers*

* 997 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN : கனம் கைத்தொழில் அமைச்சர் தயவுசெய்து கிழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) வருடா வருடம் தொழிலாளர்களுக்கு போனஸ் தகராரில்லாமல் கிடைக்க ஆராய்ச்சி செய்ய கமிட்டி அமைக்க உத்தேசமுண்டா ?

(இ) எந்த அடிப்படையில் ? விவரமென்ன ?

THE HON. SRI R. VENKATARAMAN : (அ) & (இ) இதுபோன்ற கமிட்டி அமைக்க ராஜ்ய அரசாங்கத்திற்கு உத்தேசம் இல்லே.

SRI V. K. KOTHANDARAMAN : பத்திரிகையில் பார்த்தோம், கனம் தொழிலாளர் அமைச்சர் அபிப்பிராயம் ஒன்று வெளியிட்டதை ; மூன்று மாதம் போனஸ் வரக்கூடிய பணத்தை ஸ்மால் சேவிங்ஸில் போடவேண்டுமென்ற அடிப்படையிலே ஒரு திட்டம் வரப் போவதாக. இதுமாதிரி திட்டம் ஏதாவது உண்டா ?

THE HON. SRI R. VENKATARAMAN : இது மூலக் கேள்விக்குச் சம்பந்தமில்லே என்று சொன்னாலும் மூன்று மாதத்திற்கு அதிகமாக போனஸ் வாங்கக்கூடிய தொழிலாளர்கள் அவர்களுடைய வருங்கால நன்மையை உத்தேசித்து சட்டம் இயற்றவேண்டுமென்ற அபிப்பிராயம் சர்க்கார் பரிசீலனேயில் இருக்கிறது.

*Cheatings*

* 998 *Q.*—SRI T. S. RAMASWAMY : } Will the Hon. the
SRI A. A. RASHEED : }

Minister for Home be pleased to state the number of cases brought to the notice of the Government where the public have been cheated by persons posting as astrologers, palmists, psychopaths, magicians, fortune-tellers, fortune-changers and doctors?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : The number is thirteen, Sir.

[22nd March 1961

SRI A. A. RASHEED : Is it a fact that the victims of the fortune-tellers and quacks are generally old maids and old men?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : I do not know about the age of these people. But there are also victims of some of these people who claim themselves to be sex specialists and that might have interested the hon. Member. There was a complaint against one person who claimed to be a sex specialist and he was communicating with so many people and administering all kinds of medicine and that case is just now under investigation.

SRI N. R. THIAGARAJAN : ஜோதிடம், ரேகை சாஸ்திரத்தில் கொஞ்சம்கூட உண்மையில்லை என்பதை 40 ஆண்டுகாலமாக ஆராய்ந்து கண்டுபிடித்தது என் அனுபவம். இன்னும் பேய் பிசாசு என்று வேறு மக்களிடத்தில் பயம் இருந்துவருகிறது. இதெல்லாம் ஒன்றும் இல்லை என்று சர்க்கார் மக்களுக்குத் தெரிவிப்பதற்கு ஒரு புஸ்தகத்தை வெளியிடு வார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : ஜோதிடம், ரேகை சாஸ்திரம் என்பது மிகவும் கவர்ச்சிகரமான விஷயம். நாற்பது ஆண்டுகால மாக கனம் அங்கத்தினர் அவர்கள் ஆராய்ச்சி செய்து சில விஷயத்தை கண்டுபிடித்திருப்பார்கள் என்ருல் அவைகள் எல்லோருக்கும் பயன்தரக் கூடிய வகையிலே அவர்களே ஒரு நூலை எழுதலாம் என்று தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

SRI A. A. RASHEED : Sir, will the Government consider to take more vigorous steps to prevent cheating of the public on a large scale by these quacks and other people?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Whenever cases of cheating are brought to the notice of the Government or the Police, they do take action.

SRI P. G. MANICKAM : நற்காலம் கூறுவோர் என்ற முறையிலே எல்லா கிராமங்களிலும் வந்து பொதுமக்களை ஏமாற்றிக் கொண்டிருக்கிறுர்கள். இவர்கள் பிழைப்பிற்காக இவ்வாறு செய்கிறுர் கள் என்பதால், அரசாங்கம் இவர்களை போலீஸ் மூலமாக அடக்குவதற்கு நடவடிக்கை எடுக்குமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அவ்வாறு நடைபெறுவதற்கு நற்காலம் குறிப்பவர்களிடத்தில் நம்பிக்கை உடையவர் கள் இருப்பதால்தான். நற்காலம் தெரிந்துகொள்வதற்காக அவர்களை அழைக்கிறுர்கள். இவ்வாறு பல பெரிய மனிதர்களும், பணக்காரர்களும் ஜோதிடர்களை தங்கள் பக்கத்திலே வைத்துக்கொண்டு ஏதாவது சொல்லும் படி கேட்டுக்கொண்டிருப்பார்கள். அப்படிப்பட்ட மனிதர்கள் இருக்கும் போது ஜோதிடர்களை குறை சொல்வது நல்லதல்ல.

SRI A. GOVINDASAMI : சில செய்தித்தாள்கள் ராசி பலன் தினப்பலன் முதலியவைகளை பிரசுரம் செய்கிறுர்களே, இதைத் தடுப்பதற்கு அரசாங்கம் நடவடிக்கை எடுக்குமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இம்மாதிரி பத்திரிகை களை வாங்குபவர்கள் இருப்பதனுல்தான், அவர்கள் பிரசுரிக்கிறுர்கள்.

SRI S. NAGARAJA MONIGAR : குதிரைப்பந்தயம், சீட்டு ஆட்டம் சூதாட்டம் போன்ற பந்தயங்களில் ஈடுபட்டு மனமுடைந்து இறந்து போகிறுர் கள் என்பது சர்க்காருக்குத் தெரியுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : தெரியும். இதிலும் ஜோதிடத்தில் நம்பிக்கை உள்ளவர்கள்தான் ஈடுபடுகிறுர்கள்.

22nd March 1961]

SRI T. S. RAMASWAMY : Are the Government aware of the fact that one palmist has been given 'Padma Bhushan' or 'Padma Sri' by the Government of India and if so, whether there is any difference of outlook between this Government and that Government in respect of the matter?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : There is no question of any difference in outlook between this Government and the Central Government. Palmistry is a well recognised science which is accepted in the world and if any title is given by the Government of India, it is because of the recognition of the proficiency of the person concerned.

*Iron and steel factories in North*

* 999 *Q.*—SRI A. A. RASHEED :
SRI T. S. RAMASWAMY : } Will the Hon. the
SRI N. R. THIAGARAJAN :
Chief Minister be pleased to place on the Table of the House a report of his visit to iron and steel factories in the North?

THE HON. SRI C. SUBRAMANIAM : A Report[a] is placed on the table of the House.

SRI A. A. RASHEED : Which of the factories inspected in North India are more suitable for the location of the iron and steel factory in Salem?

DEPUTY SPEAKER : The question put by the hon. Member is not clear.

THE HON. SRI C. SUBRAMANIAM : How can the factories be located here? They have already been located in particular places. They cannot be shifted here (Laughter).

*Industries Minister's visit to U.N.O.*

* 1000 *Q.*—SRI A. VEDARATHNAM : கனம் கைத்தொழில் அமைச்சர் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

கனம் அமைச்சர் அவர்கள், அண்மையில் ஐக்கியநாடு சபை சென்றதன் மூலம் நம் மாநிலத்தில் தொழில் வளர்ச்சி சம்பந்தமாக என்னென்ன புது முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன ? விவரமென்ன ?

THE HON. SRI R. VENKATARAMAN : During his recent visit to the United Nations, Minister for Industries had discussions at Washington with the Department of Industries and Commerce of the United States of America, the World Bank, the Development Loan Fund Authorities, and the India Supply Mission, Washington. The information gathered about foreign firms who were interested in collaborating with firms in Madras for setting up new industries in this State, was transmitted to industrialists of Madras. These Madras firms are now in correspondence with their foreign counterparts.

---

a Printed as Appendix on page 369–370 infra.

[22nd March 1961

SRI A. VEDARATHNAM : கனம் தொழில் அமைச்சர் அவர்கள் பல மேல்நாடுகளுக்குச் சென்று அங்கு பெற்ற செல்வாக்கின் மூலமாக அங்குள்ள சில நிபுணர்களைக் கொண்டுவந்து உயர்தரக் கல்வி போதிப்பதற்கு முயற்சி எடுப்பார்களா ?

THE HON. SRI R. VENKATARAMAN : இண்டியன் இன்ஸ்டிட்யூட் ஆப் டெக்னுலஜியில் ஜெர்மன் நிபுணர்கள் உதவி செய்துக்கொண்டு வருகிறார்கள்.

SRI S. NAGARAJA MONIGAR : கனம் தொழில் அமைச்சர் அவர்கள் அந்நிய நாடுகளைப் பார்த்த வரையில் அங்கு தொழில்கள் குவியல் முறையில் ஏற்படுத்துகிறார்களா ? அல்லது பரவலாக ஏற்படுத்துவதை ஆமோதிக்கிறார்களா ? அங்குள்ள முன்னேற்றத்தை வைத்துக்கொண்டு நம் நாட்டில் பரவலான முறையில் தொழில்கள் அமைப்பதிலுள்ள கஷ்டங்கள் அல்லது அனுகூலங்கள் என்னென்ன ?

THE HON. SRI R. VENKATARAMAN : மேல் நாடுகளில் கூட தொழில்கள் எல்லாம் குவியலாகத்தான் சிலயிடங்களில் இருக்கின்றன. எந்தெந்த இடத்தில் இயற்கை வளம் இருக்கிறதோ அங்கு அந்தத் தொழில்கள் எல்லாம் இருக்கும். பிட்ஸ்பர்க்கில்தான் இரும்புத் தொழிற்சாலைகள் எல்லாம் இருக்கின்றன. எங்கெங்கு வசதிகள் இருக்கிறதோ அங்கு தொழில்கள் அமைக்கப்படும். கனம் அங்கத்தினர் போட்ட கேள்வி அவரது ஜில்லாவிற்கு சாதகமாகயில்லை என்று மட்டும் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்.

*Kinder-garden schools*

* 1001 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN : கனம் நிதி அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) ஆரம்பப் பள்ளிகளுக்கு குழந்தைகளை தயார்படுத்த நமது ராஜ்யத்தில் எத்தனை கிண்டர் கார்டன் பள்ளிகள் எங்கெங்கே உள்ளன, ஜில்லாவாரியாக ?

(இ) தனியார் நடத்துவது எத்தனை ? சர்க்கார் நடத்துவது எத்தனை?

(உ) மூன்றுவது ஐந்தாண்டுத் திட்டத்தில் எந்த அளவுக்கு அதிகப் படுத்த உத்தேசம் ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) Three schools in Madras City and one in Kanyakumari district.

(*b*) Three and one.

(*c*) There is no proposal for expansion of this kind of education during the Third Five-Year Plan.

SRI V. K. KOTHANDARAMAN : நேரு பிறந்த தினத்தை குழந்தைகள் தினம் என்று சிறப்பான முறையில் கொண்டாடப்படுகிறது. ஆகவே, ஆரம்ப பாடசாலைகளை பக்குவப்படுத்தி சிறு குழந்தைகளுக்கு இதேபோன்று கிண்டர் கார்டன் பாடசாலைகளை ஏற்படுத்துவதற்கு எதனுல் இவ்வளவு கவனக்குறைவு அல்லது சிரத்தைக்குறைவு ஏற்படுகிறது, காரணம் என்ன ?

THE HON. SRI C. SUBRAMANIAM : நேரு பிறந்த தினம் கொண்டாடுவதற்கும் இந்த கேள்விக்கும் என்ன சம்பந்தம் என்பதை என்னுல் புரிந்துகொள்ள முடியவில்லை. புரிந்துகொண்ட பிறபாடு தான் இதற்கு பதில் சொல்ல முடியும்.

22nd March 1961]

SRI K. ANBAZHAGAN : கிண்டர் கார்டன் முறையில் குழந்தைகளுக்கு பயிற்சி அளிப்பதை நம் நாட்டிற்கு ஏற்ற விதத்தில் மாற்றி வேறு விதத்தில் கையாண்டு பயிற்சி முறைப்பள்ளிகள் ஏற்படுத்தமுடியும் என்ற கருத்தை கனம் அமைச்சர் அவர்கள் வெளியிட்டார்களே, அது பற்றி இப்பொழுது ஏதாவது திட்டமிருக்கிறதா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : பரிசீலனையில் இருக்கிறது.

SRI A. VEDARATHNAM : பள்ளி செல்லும் வயதிற்கு முந்திய குழந்தைகளுக்காக நம் மாநிலத்தில் கி டர் கார்டன் முறை, மாண்டிசோரி முறை, ப்ரி-பேஸிக் என்ற மூன்று திட்டங்கள் அமுலில் இருக்கிறதே, அரசாங்க அனுபவத்தில் இதை பரீட்சித்துப் பார்த்ததில் இதில் எந்த முறை சிறந்தது என்று அறிவிக்க முடியுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : ஒவ்வொரு முறையிலும் சில சிறந்த அம்சங்கள் இருக்கின்றன. பணியாற்றக் கூடிய ஆசிரியர்களைப் பொறுத்திருக்கிறது, எந்த முறை வெற்றி பெறுகிறது என்பது. இதில் முக்கிய கஷ்டம், இதில் ஏற்படக்கூடிய செலவு. ஒவ்வொரு குழந்தைகளுக்கும் அதிக செலவு ஏற்படுவதால் லட்சக்கணக்கான குழந்தைகளுக்கு இப்படிப்பட்ட பயிற்சி கொடுப்பது என்பது முடியாத காரியம். ஆகவே கனம் அன்பழகன் அவர்கள் கேட்ட கேள்வியின் அடிப்படையில், நம் நாட்டிற்கு ஏற்ற சூழ்நிலையில் தகுந்தபடி எப்படி இந்த முறையை மாற்றியமைத்து எல்லாக் குழந்தைகளுக்கும் எவ்வாறு கொடுக்க முடியும் என்பது பரிசிலனையில் இருக்கிறது.

*Small scale Industries (Aids)*

*1002 *Q*.— SRI V. K. KOTHANDARAMAN : கனம் கைத்தொழில் அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) நமது ராஜ்யத்தில் Small-scale Industries-களுக்கு State Bank கள் மூலம் என்னென்ன உதவி செய்யப்படுகிறது ?

(இ) கடன் தொகை எவ்வளவு வரை கொடுக்கப்படுகிறது ?

(உ) அப்படி கடன் கொடுத்தால், என்னென்ன நிபந்தனைகளின் பேரில் கொடுக்கப்படுகிறது ?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*), (*b*) & (*c*) A copy of the pamphlet issued by the State Bank containing necessary particulars in respect of the Pilot Scheme is placed in the Library of the Madras Legislature. The scheme has been extended to all branches of the Bank. It is understood that the State Bank is bringing out a revised pamphlet which may be obtained from them for further particulars.

*Political sufferers (relief)*

* 1003 *Q*.—SRI A. A. RASHEED : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether the Government have received recently any petition from the General Secretary, Madras District Political Sufferer's Conference, regarding relief to political sufferers; and

(*b*) if so, the action taken thereon?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) Yes.

(*b*) As adequate assistance to political sufferers is being already rendered no further action was considered necessary.

[22nd March 1961

SRI T. S. RAMASWAMY : May I know whether the Government Order granting educational concession to children of political sufferers has not been implemented this year?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : The hon. Member may put a separate question to the Hon. Minister for Education.

SRI V. K. KOTHANDARAMAN : இந்தத் தியாகிகளின் குடும்பங்களுக்கு எப்படி இலவசக் கல்விக்காகவேண்டி சர்க்கார் ஏற்பாடு செய்திருக்கிறதோ அதே போன்று மருத்துவ சலுகையும் கொடுக்க வேண்டுமென்று கோரிக்கை வந்திருக்கிறதா ? அது குறித்து சர்க்காரின் அபிப்பிராயம் என்ன ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இப்பொழுது விஸ்தரிக்கப்பட்டிருக்கிற வசதிகளோடு மேற்கொண்டும் புதிய வசதிகள் செய்வதாக இப்பொழுது உத்தேசம் ஒன்றுமில்லை.

*Agricultural college*

*1004 Q.—SRI V. K. KOTHANDARAMAN : கனம் உள்துறை அமைச்சர் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

சாத்தனூர் அணைக்கட்டுக்குப் பக்கத்தில் விவசாயக் கல்லூரி ஆரம்பிக்க உத்தேசமுண்டா ?

THE HON. SRI M. BHAKTAVATASALAM : No, Sir.

*1005 Q.—SRI T. R. RAMAMIRTHA THONDAMAN : கனம் உள்துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) ஆடுதுறையில் விவசாயக் கல்லூரி 1961–62-ல் ஆரம்பிக்க உத்தேசமுண்டா ?

(இ) அதற்காகத் தனியார் துறையில் நிலம் இனமாக கொடுப்பதாக விண்ணப்பம் ஏதேனும் வந்ததா?

(உ) அதன்மேல் எடுத்த முடிவு என்ன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (a) No, Sir.

(b) Yes, at Kabistalam in Thanjavur district.

(c) No decision has been taken yet.

SRI T. R. RAMAMIRTHA THONDAMAN : ஆடுதுரையில் ஒரு விவசாயக் கல்லூரியை ஆரம்பிக்க வேண்டுமென்று நீண்டகாலமாக வற்புறுத்தப்பட்டு வருகிறது. அதை ஆரம்பிப்பதற்கு நிலம் தருவதாக, கபிஸ்தலத்திலிருந்து திரு. கருப்பைய மூப்பனூர் அவர்கள் மனுக்கள் போட்டிருப்பதாக பத்திரிகைகளில் பார்த்தோம். தவிர உற்பத்தித் திட்டங்கள் போன்றவைகள் அமுலாகும் பிரதேசங்களில், அப்படிப்பட்ட ஒரு விவசாயக் கல்லூரி ஏற்படுத்துவது அவசியம். கனம் அமைச்சர் அவர்கள் ரஷ்யாவிற்குச் சென்று அங்கு இப்படிப்பட்ட விவசாயக் கல்லூரிகளில் ஏராளமான மாணவர்கள் பயிலுகிறூர்கள் என்று சொன்ஞர். ஆகவே அங்கு விவசாயக் கல்லூரி அமைக்க சர்க்கார் முன்வருமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : கபிஸ்தலத்தில் நிலம் அளிக்க முன்வந்தது பற்றி பரிசீலனை செய்யப்பட்டு வருகிறதென்று சொன்னேன். நிலம் மட்டும் போதாது, ஒரு விவசாயக் கல்லூரி அமைப்பதற்கு. தஞ்சையில் வேண்டுமென்றால், பக்கத்திலுள்ள சிதம்பரத்தில் அண்ணமலை யூனிவர்ஸிட்டியில் ஒரு விவசாயக் கல்லூரி இருக்கிறது. மூன்றாவது திட்டத்தில் மற்றும் ஒரு கல்லூரி அமைக்க திட்டமிருக்கிறது. எங்கு அமைப்பது, மதுரையில் அமைப்பதா, தஞ்சாவூரில் அமைப்பதா, வேறு எங்கே அமைப்பது என்று பரிசீலனை செய்து முடிவு செய்யப்பட வேண்டிய விஷயம்.

22nd March 1961]

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : Arising out of the answer given by the Hon. Minister, may I know whether there is any proposal before Government at least to increase the strength of the present college?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : We have sufficiently increased the strength. I am afraid it may not be possible and practicable to increase the strength in the Agricultural College at Coimbatore still further.

SRI M. D. THIAGARAJA PILLAI : தஞ்சையில் ஒரு விவசாயக் கல்லூரி ஏற்படுத்த சுந்தர பெருமாள் கோவில் கருப்பையா மூப்பனார் அவர்கள் ஆயிரம் ஏக்கர் நிலம் கொடுக்க முன்வந்திருக்கிறார்கள். அது பற்றி யோசித்து சர்க்கார் ஒரு கல்லூரி ஏற்படுத்த முன்வருமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : கபிஸ்தலத்தில் என்று சொன்னது அதே விஷயம்தான். விவசாயக் கல்லூரி அமைக்க நிலம் மட்டும் போதாது என்று சொன்னேன். அவர் சொன்னது தர்ம சொத்து. உச்சவரம்பிலிருந்து ஏமாற்றுவதற்கு என்று யாரும் நினைக்க வேண்டாம்.

*Orphanages*

*1006*Q*.—SRI S. M. ANNAMALAI : கனம் உள் விவகார அமைச்சர் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதில் அளிப்பாரா—

(அ) நம் மாநிலத்தில் நடைபெறும் அனாதை இல்லங்கள் சரியாக நடைபெறவில்லை என்பது உண்மையா ?

(இ) அப்படியானால், அதைப்போக்க சர்க்கார் எடுத்துக்கொண்ட நடவடிக்கைகள் யாவை ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) No, Sir.

There is no justification to generalise that the orphanages in the State are not properly administered.

(*b*) Does not arise.

SRI S. M. ANNAMALAI : அஷ்யூரன்ஸ் கமிட்டி, அனாதை இல்லங்கள் சரிவர நடத்தப்படவில்லை என்று ரிப்போர்ட் செய்திருக்கிறது. கனம் அமைச்சர் அவர்கள் ரிபோர்ட் வேறு விதமாகயிருக்கிறது. இதற்குக் காரணம் என்ன ?

THE HON. SRI C. SUBRAMANIAM : அனாதை இல்லங்கள் சரிவர நடப்பதில்லை என்று அவர்கள் கேட்பது. எல்லா இல்லங்களும் சரியாக நடக்கவில்லை என்று குறிப்பிட்டிருக்கிறார்கள் அவர் கேள்வியில். அவ்வாறு சொல்வதற்கு ஆதாரம் இல்லையென்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

*Punjab Cattle for breeders*

* 1007 *Q*.—SRI T. S. RAMASWAMY : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether there is any scheme under which the Government of India supplies cattle from Punjab free of cost to breeders;

(b) if so, the details of the scheme; and

(c) the number of heads of cattle thus brought to our State?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (a) & (b) Yes, Sir. The productive stray Hariana cows and heifers available in the Punjab State are supplied free of cost to the individual breeders, co-operative societies, temples, Goshalas, etc., by the Government of India.

(c) One hundred and sixty-four cattle have been obtained for rearing in Government Farms. One thousand, four hundred and forty-seven cattle have been supplied to private breeders.

*Persons over 80 years (Financial help)*

* 1008 Q.—SRI A. A. RASHEED : Will the Hon. the Minister for Finance be pleased to state—

(a) whether any financial help has been given to old persons above 80 in 1959–60; and

(b) if not, whether there is any proposal to give financial help to old persons?

THE HON. SRI C. SUBRAMANIAM : (a) No, Sir.

(b) There is no such proposal under consideration.

SRI A. A. RASHEED : Is the Hon. Minister aware of the fact that old men above 80 find it difficult to pull on without financial assistance? If soo, will the Government come forward at least to start some old age homes so that they can spend the remainder of their days there in comfort.

THE HON. SRI C. SUBRAMANIAM : I do not think old age homes would be a solution for this.

SRI J. MATHA GOWDER : அண்டை ராஜ்யமாகிய ஆந்திராவில் 70 வயதிற்கு மேற்பட்டவர்களுக்கு உதவித்தொகை கொடுப்பதாக பத்திரிகைகளில் பார்த்தோம். நமது மாநிலத்திலும் அப்படி கொடுத்தால் என்ன ? அதுபற்றி பரிசீலனை செய்யப்படுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : அங்கு இருக்கக்கூடிய நிலைமையை அனுசரித்து எந்தத் திட்டங்களுக்கு முதலிடம் கொடுக்க வேண்டுமென்று சர்க்கார் முடிவுசெய்கிறது. இச்சர்க்கார் இந்தத் திட்டத்திற்கு இப்பொழுது முதலிடம் கொடுத்து அதற்காக நிதி செலவழிக்க வேண்டுமென்று கருதவில்லை.

*Farm in Varushanadu*

*1009 Q.—SRI N. R. THIAGARAJAN : கனம் உள்துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதில் அளிப்பாரா—

மதுரை ஜில்லா, பெரியகுளம் தாலுகா' நரசிங்கபுரம் கிராமம், வருஷ நாடு பகுதியில் உள்ள தரிசு நிலத்தில் பெரிய பண்ணை வைக்க உத்தேசமுண்டா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : No, Sir.

SRI N. R. THIAGARAJAN : பெரியகுளம் தாலுகா, நரசிங்கபுரம் கிராமம், வருஷநாடு பகுதியில் 250 சதுர மைல் நிலத்தில், 150 மைல் பாரஸ்டாக இருக்கிறது. அங்கு 100 சதுர மைல் காலியாக

இருக்கிறது, அங்கு சிலர் உழுது கொண்டிருக்கிறார்கள். கனம் அமைச்சர் அவர்கள் 10,000 ஏக்கர் பண்ணை வைக்க நிலம் இல்லை என்று சொன்ன தாக பத்திரிகைகளில் பார்த்தேன். அந்த 10,000 ஏக்கர் பண்ணையை அங்கு வைக்க ஏற்பாடு செய்யப்படுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : 10,000 ஏக்கர் நிலம் இருந்தால் அதைத் திருத்தி விவசாயத்திற்கு கொண்டு வரக்கூடியதாக யிருக்க வேண்டும். நிலம் இருப்பதோடு தண்ணீர் வசதியும் இருக்க வேண்டும். இதையெல்லாம் பார்த்து செய்யவேண்டியிருக்கிறது. அது இருந்தால் மேலும் பரிசீலனை செய்யப்படும்.

*Coconut cultivation*

*1010 Q.—SRI A. VEDARATHNAM : கனம் உள்துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதில் அளிப்பாரா—

(அ) தென்னை சாகுபடியை விஸ்தரிக்க அரசாங்கம் திட்டமிட்டிருக் கிறதா ?

(இ) அதன் விவரமென்ன ?

(உ) இதற்காக அரசாங்கம் அளிக்கும் உதவி என்ன ?

(எ) அதற்காக ஒதுக்கியுள்ள தொகை எவ்வளவு ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (அ) Yes, Sir.

(இ) It is proposed to bring an area of 10,000 acres in the coastal taluks of Ramanathapuram district under Cocoanut Cultivation during the course of 5 years at the rate of 2,000 acres per year.

(உ) The proposal under consideration is for allotting land for cocoanut cultivation to small land-holders, landless poor people and Ceylon repatriates. Loan assistance is contemplated for enabling reclamation of land, fencing of seedlings, digging of wells, etc.

(எ) As the scheme has not yet been finalised, only a token provision of Rs. 100 has been proposed for the year 1961-62.

SRI A. VEDARATHNAM: ஸார், தஞ்சை ஜில்லாவில் உள்ள கடற்கரைப் பகுதியில் மலையாளத்தைப்போல் நல்ல முறையில் தென்னை மரங்கள் வளருகின்றன. கடந்த 1952-ம் ஆண்டிலும் 1955-ம் ஆண்டிலும் ஏற்பட்ட கடும் புயல் காரணமாக சுமார் 10 லட்சம் தென்னை மரங்கள் சேதமடைந்து விட்டன. அதை புனருத்தாரணம் செய்கின்ற முறையில் கொஞ்ச காலத்திற்கு தென்னங்கன்றுகளை பாதி விலைக்கு சர்க்கார் கொடுத்துக் கொண்டிருந்தார்கள். அதன் பின்னால் அதை நிறுத்தி டார்கள். மீண்டும் அவ்விதம் உதவி செய்து தென்னை மரங்களை மேலும் உற்பத்தி செய்வதற்கு சர்க்கார் முன் வருமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : தஞ்சாவூர் ஜில்லாவில் பட்டுக்கோட்டை தாலூகாவில் புயலால் பாதிக்கப்பட்ட இடங்களுக்கு, பழைய நிலைமையை கொண்டு வருவதற்காக பலவிதமான வசதிகள் சர்க்காரால் செய்து கொடுக்கப்பட்டு வந்தன. அந்த வகையில் தென்னம் நாற்று களும் கொடுக்கப்பட்டு வந்தன. ஆனால் இந்த வசதி ஒரு குறிப்பிட்ட காலத்திற்கு தான் கொடுக்க முடியும். அந்த காலத்திற்குள் விவசாயிகள் அதை பூரணமாக உபயோகித்துக்கொள்ள வேண்டும். இல்லையென்றால் விவசாயிகள் போதிய அக்கரை எடுத்துக்கொள்ளவில்லை என்று தான் எடுத்துக்கொள்ள முடியும். அதோடு அங்கு ஒரு ஆராய்ச்சிப் பண்ணையும்

[22nd March 1961

கூட அமைக்கப்பட்டிருக்கிறது. இந்த முறையில் தஞ்சாவூர் ஜில்லாவுக்கு பல வசதிகள் செய்து கொடுக்கப்பட்டிருக்கின்றன.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : Sri, May I know whether there is any proposal to start similar farms in the coastal areas of Chingleput and South Arcot districts?

THE HON. SRI M. BHATKTAVATSALAM : We are just doing it in the coastal areas in Ramanathapuram district and then we have also taken up areas in Tindivanam taluk, Kazhuveli swamp area. By and by this will be extend to other districts also.

SRI P. G. MANICKAM : ஸார், விவசாய நிலங்களுக்கு தண்ணீர் பாய்வதற்காக ஏற்படுத்தப்பட்டிருக்கும் ஏரிக்கரையோரங்களில் தென்னை மரங்களை பயிரிடலாம். அவ்விதம் செய்தால் லட்சக்கணக்கான மரங்களை நம்மால் பயிரிட முடியும். அதன் மூலம் நல்ல வளர்ச்சியும் ஏற்பட முடியும். ஆகவே பி.டபிள்யூ.டி. இலாகா மூலமாக தென்னை மரங்களை வளர்ப்பதற்கு உரியத் திட்டத்தை கொண்டு வருவதற்கு சர்க்கார் முயற்சி செய்யுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : கனம் அங்கத்தினர் அவர்கள் அக்கரை கொண்டிருப்பது போல் அந்தந்த இலாகாவினரும் கவனித்துக் கொண்டிருக்கிறார்கள். அதோடு கனம் அங்கத்தினர் அவர்கள் போன்றவர்கள் ஆங்காங்குள்ள விவசாயிகளுக்கும் எடுத்துச்சொல்லி இதில் அக்கரை எடுக்க ஏற்பாடு செய்தால் நன்றாக இருக்கும்.

SRI R. KRISHNASAMI NAIDU : ராமனுதபுரம் ஜில்லாவில் தொண்டி பகுதியில் ராமனுதபுரம் மத்திய கூட்டுறவு பாங்க்-க்குச் சொந்தமான 30, 40 எக்கர் கொண்ட ஒரு தென்னம் தோப்பு இருக்கிறது. அது நர்ஸரி ஆராய்ச்சிப் பண்ணை ஏற்படுத்த தகுதியான இடம் என்று விவசாய இலாகா அதிகாரிகள் சொல்லியிருக்கிறார்கள். ஆகவே அந்த இடத்தை எடுத்துக்கொள்ள அரசாங்கத்திற்கு உத்தேசம் உண்டா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இது கூட்டுறவு பாங்குக்குச் சொந்தமானது என்று கனம் அங்கத்தினர் அவர்களே தெரிவித்தார்கள். இருந்தாலும் கனம் அங்கத்தினர் போன்றவர்கள் இதில் அக்கரை எடுத்துக்கொண்டு, அங்கேயிருக்கின்ற விவசாய இலாகாவை நாடினால், இதில் என்ன செய்ய முடியுமோ அதை செய்து கொடுக்க முன் வருவார்கள்.

SRI A. VEDARATHNAM : ஸார், மரங்களை வளர்க்கின்ற இயக்கத்தில் வேறு எல்லாவிதமான கன்றுகளையும் (Seedlings) பாதி விலைக்கு கொடுத்து வருகிறார்கள். ஆனால் தென்னை மரத்தை மட்டும் இதிலிருந்து விலக்கியிருக்கிறார்கள். இதற்கு என்ன காரணம் என்றும் தெரியவில்லை. இதையும் பாதி விலையில் கொடுத்தால் தென்னை மரங்களை அதிகமாக உற்பத்தி செய்வதற்கு வசதியாக இருக்கும். இதற்காக விவசாய பண்ணை தேவையாக இருக்கிறது. இப்போது ஒவ்வொரு பிளாக்கிலும் இரண்டு மூன்று விவசாய பட்டதாரிகள் இருக்கிறார்கள். ஆகவே எல்லா பிளாக்குகளிலும் இந்தக் கன்றுகளை உற்பத்தி செய்து கொடுப்பதற்காக, எந்த இடத்திலுள்ள கன்றுகள் சிறந்தது என்பதைப் பார்த்து—மலையாளத்திலுள்ள கன்றுகள் மிக சிறந்தது என்று சொல்லுகின்றார்கள்—இவைகளை எல்லாம் பார்த்து, எல்லா பிளாக்கிலும் ஆராய்ச்சிப் பண்ணையை ஏற்படுத்த அரசாங்கம் முயற்சி எடுக்குமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : நான் முன்பு கூறியது போல் பல வகையில் மக்களுக்கு எதெது தேவை என்று அறிந்து அதற்கான வசதிகள் செய்து கொடுத்துக் கொண்டிருக்கிறோம். அதிலும் முக்கியமாக ஏழைகளுக்கு, குறிப்பாக சிலோனிலிருந்து வந்தவர்களுக்கு, எல்லாம் இந்த உதவிகள் கொடுத்துக்கொண்டிருக்கிறோம். இந்த உதவி எல்லோருக்கும் அளிக்கவேண்டும் என்பதில்லை. குறிப்பாக தென்னைமர நாற்றுகளை உற்பத்தி செய்வதில் எது சிறந்தது என்பதைப் பார்த்து

22nd March 1961]

சிலோன் நாற்று சிறந்ததா, அல்லது மலேயாளத்திலுள்ள நாற்று சிறந்ததா என்பதைப் பார்த்து, அவைகளை உற்பத்தி செய்து வேண்டியவர்களுக்குக் கொடுக்க ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

SRI T. R. RAMAMIRTHA THONDAMAN : ஸார், தென்னங் கன்றுகள், தஞ்சாவூர் ஜில்லாவில் நல்ல முறையில் வளர்ந்து நல்ல பலன் கொடுத்திருக்கிறது. இப்போது பட்டுக்கோட்டையில் இருக்கும் பண்ணையிலிருந்து எல்லோரும் பயன் பெற்றுக்கொள்ள முடிவதில்லை. ஆகையால் நாம் ஏற்படுத்தப்போகும் எல்லா பஞ்சாயத்துகள், பஞ்சாயத்து டெவலப்மெண்ட் கவுன்ஸில்கள் இவைகள் மூலமாக கன்றுகளை தயார் செய்து பாதி விலையில் கொடுத்தால் விவசாயிகளுக்கு பயனுள்ளதாக இருக்கும். அதே போன்று, பி.டபிள்யூ.டி. மூலமாகவும் இதை வளர்க்கலாம் காவேரி ஓரங்களில். ஆகவே இதற்கான முயற்சிகளில் ஈடுபட்டு, தென்னம்பிள்ளைகளை ஆளாக்க சர்க்கார் முன் வருவார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இதில் கனம் அங்கத்தினர் போன்றவர்கள் அக்கரை காட்டுவதை நான் வரவேற்கிறேன். சென்ற அக்டோபர் 2-ம் தேதி பல இடங்களில் பஞ்சாயத்துகள் ஆரம்பிக்கப்பட்டிருக்கின்றன. அடுத்த தமிழ் வருஷப் பிறப்பன்றும் சில பஞ்சாயத்துகள் அமைக்கப்படும். அப்போது இந்த பஞ்சாயத்துகள் இதில் அக்கரை எடுத்துக்கொள்வார்களானால் அரசாங்கம் அதற்கு வேண்டிய உதவிகளைச் செய்து கொடுக்க தயாராய் இருக்கிறது.

SRI K. B. S. MANI : தஞ்சை ஜில்லாவில் முத்துப்பேட்டை, அரந்தாங்கி, அதிராம்பட்டினம் போன்ற இடங்களில் தென்னங்கன்றுகள் பயிரிடுகிறார்கள். அதிராம்பட்டினத்தில் பத்து விதமான கன்றுகளைத் தயார் செய்து வினியோகித்து வருகிறார்கள். ஆனால், அவர்கள் குறைந்த விலைக்கு கொடுக்க முடியவில்லை என்றும், அதில் பல சிரமங்கள் இருக்கின்றன என்றும் சொல்லுகிறார்கள். ஆகவே, இது போன்ற பண்ணைகளுக்கு அரசாங்கம் மானியம் கொடுத்து, அதன் மூலம் அரை விலைக்குக் கொடுக்க அரசாங்கம் ஏதாவது நடவடிக்கை எடுக்குமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM ; இம்மாதிரி யாராவது விசேஷ அக்கறை எடுத்திருந்தால், அதை அந்தந்த ஜில்லாவில் இருக்கும் ஜில்லா விவசாய இலாகாவினரை அணுகி தெரிவித்தால், அதற்கு வேண்டிய உதவிகளைச் செய்து கொடுப்பார்கள்.

SRI A. GOVINDASAMI : இடைக்கநாடு பகுதியில் ஒரு விவசாய ஆராய்ச்சிப் பண்ணை ஏற்படுத்த அரசாங்கத்தினிடத்தில் உத்தேசம் உண்டா ? அதே போன்று பாலூர் பகுதியிலும் ஏற்படுத்த உத்தேசம் உண்டா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : செங்கல்பட்டு ஜில்லாவிலுள்ள இடைக்கநாடு பகுதியில் ஏற்படுத்த இப்போது உத்தேசமில்லை. அதே போன்றுதான் திண்டிவனம் பகுதியில் இப்போது ஒரு பண்ணை இருப்பதால் கடலூர் வட்டாரத்திற்கும் தேவையில்லை என்று கருதப்பட்டிருக்கிறது.

SRI K. SATTANATHA KARAYALAR ; ஸார், தென்னங் கன்றுகள் ஒரே இடத்தில் உற்பத்தி செய்தால், அது மூன்று ஆண்டுகளுக்குத்தான் நல்ல முறையில் வளரும். அதற்குப் பின்னால் வேறு இடங்களில் தான் பயிரிட வேண்டும் என்று சொல்லுகிறார்கள். ஆகவே, இப்போதே வேறு இடங்களை அக்வொயர் செய்வதற்கோ, அல்லது வாடகைக்கு எடுப்பதற்கோ அரசாங்கம் ஏற்பாடு செய்துகொண்டிருக்கிறார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இதைப்பற்றி ஆராய்ச்சி செய்வதற்காக பல நிபுணர்கள், இதற்காகவே இருந்துகொண்டிருக்கிறார்கள். அவர்கள் இதைப் பற்றி பரிசீலித்து வேண்டிய முடிவை எடுப்பார்கள்.

DEPUTY SPEAKER : Questions are over.

[*Note.*—An asterisk * at the Commencement of a speach indicates revision by the Member.]

## II.—CALLING ATTENTION TO THE FAILURE AND DESTRUCTION OF CROPS DUE TO VAGARIES OF MONSOON IN UDAYARPALAYAM TALUK IN TIRUCHIRAPPALLI DISTRICT.

SRI K. R. VISWANATHAN : Mr. Deputy Speaker, Sir, under Rule 41 of the Assembly Rules, I beg to call the attention of the Hon. the Minister for Home to an urgent matter of public importance, viz., failure and destruction of crops due to vagaries of monsoon in Udayarpalayam taluk in Tiruchirappalli district and the consequent inability of the ryots to repay the New Well Subsidy loans.

9-30 a.m. THE HON. SRI M. BHAKTAVATSALAM : Sir, I would like to make the following statement. According to the report received from the Collector of Tiruchirappalli, there has been no failure and destruction of crops due to the vagaries of monsoon in Udayarpalayam taluk. Both dry and wet crops have yielded well above average. In stray cases due to heavy rains in November 1960, some wet fields were affected. They are being granted remission under B.S.O. 13. Among the dry crops, the earlier sowings of groundnut and cumbu did not thrive due to lack of rains. But this deficiency of yield was compensated by the good yield from later sowings which benefited from rains though belated. In any case, the condition in Udayarpalayam taluk as a whole is normal and the Government consider that there is no warrant for any concession by way of postponement of kist or loan advances.

## III.—ANNOUNCEMENTS.

### (1) ELECTION OF MEMBERS TO THE HOUSE COMMITTEE.

DEPUTY SPEAKER : I have to announce to the House that the following Eleven Members were duly nominated for the election of even Members of the Madras Legislative Assembly to the House Committee for the financial year 1961-62 :—

1 Sri N. P. M. Chinnia Gounder.

2 Sri K. S. G. Haja Sheriff.

3 Sri M Kandasamy Padayachi.

4 Sri M. R. Kandasamy Mudaliyar.

5 Srimathi Kamalambujammal.

6 Sri N. Marudachalam.

7 Sri K. G. Palanisamy Gounder.

8 Sri A. V. P. Periavalaguruva Reddiar.

9 Sri S. Ramaswamy Thevar.

10 Sri M. Selvaraj.

11 Sri V. Vedayyan.

As the number of candidates who wer eduly nominated is equal to the number of vacancies to be filled, viz., ELEVEN, I hereby declare them to have been duly elected to the House Committee.

22nd March 1961] [Deputy Speaker]

Under Rule 221 (1) of the Madras Legislative Assembly Rules, the Hon. Speaker has nominated (1) Srimathi Sathyavanimuthu, (2) Sri C. Muthiah, (3) Sri N. K. Palanisami and (4) Sri T. S. Ramaswami to the Committee.

The Deputy Speaker is the ex-officio Chairman of the House Committee.

### (2) GOVERNOR'S RECOMMENDATION FOR INTRODUCTION OF CERTAIN BILLS.

DEPUTY SPEAKER : I have to announce to the House that the Governor has given his recommendation for the introduction in the Legislative Assembly of the following Bills :—

(1) The Madras General Sales Tax (Second Amendment) Bill, 1961.

(2) The Madras (Added Territory) Extension of Laws Bill, 1961.

## IV.—GOVERNMENT MOTIONS *RE* ASSOCIATION OF COUNCIL MEMBERS WITH THE COMMITTEE ON SUBORDINATE LEGISLATION.

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, I move—

"That this House recommends to the Legislative Council that they do nominate three Members from the Council to associate with the Committee on Subordinate Legislation of this House for the financial year 1961–62 and communicate to this House the names of the Members so nominated."

DEPUTY SPEAKER : The question is—

"That this House recommends to the Legislative Council that they do nominate three Members from the Council to associate with the Committee on Subordinate Legislation of this House for the financial year 1961–62 and communicate to this House the names of the Members so nominated."

The motion was put and carried.

## V.—GOVERNMENT BILLS.

### (1) THE MADRAS GENERAL SALES TAX (SECOND AMENDMENT) BILL, 1961

THE HON. SRI R. VENKATARAMAN : Sir, I move—

"That leave be granted for the introduction of the Madras General Sales Tax (Second Amendment) Bill, 1961."

DEPUTY SPEAKER : The question is—

"That leave be granted for the introduction of the Madras General Sales Tax (Second Amendment) Bill, 1961."

The motion was put and carried and leave was granted.

[22nd March 1961

THE HON. SRI R. VENKATARAMAN : I introduce the Bill, Sir.

DEPUTY SPEAKER : The Bill is introduced.

(2) THE MADRAS (ADDED TERRITORY) EXTENSION OF LAWS BILL, 1961.

THE HON. SRI R. VENKATARAMAN : Sir, I move—

"That leave be granted for the introduction of the Madras (Added Territory) Extension of Laws Bill, 1961."

DEPUTY SPEAKER : The question is—

"That leave be granted for the introduction of the Madras (Added Territory) Extension of Laws Bill, 1961."

The motion was put and carried and leave was granted.

THE HON. SRI R. VENKATARAMAN : I introduce the Bill, Sir.

DEPUTY SPEAKER : The Bill is introduced.

(3) THE MADRAS IRRIGATION CESS (AMENDMENT) BILL, 1961.

THE HON. SRI R. VENKATARAMAN : Sir, on behalf of the Hon. the Minister for Revenue, I move—

"That leave be granted for the introduction of the Madras Irrigation Cess (Amendment) Bill, 1961."

DEPUTY SPEAKER : The question is—

"That leave be granted for the introduction of the Madras Irrigation Cess (Amendment) Bill, 1961."

The motion was put and carried and leave was granted.

THE HON. SRI P. VENKATARAMAN : I introduce the Bill, Sir.

DEPUTY SPEAKER : The Bill is introduced.

## VI.—VOTING ON DEMAMDS FOR GRANTS FOR THE YEAR 1961-62.

### DEMAND XV—EDUCATION.

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, on the recommendation of the Governor, I move—

"That the Government be granted a sum not exceeding Rs. 21,00,87,200 under Demand XV—Education."

DEPUTY SPEAKER : Motion moved—

"That the Government be granted a sum not exceeding Rs. 21,00,87,200 under Demand XV—Education."

I understand that hon. Member Sri K. Anbazhagan is moving his cut motion (No. 374) under this Demand. He may move it now.

22nd March 1961]

**Sri K. ANBAZHAGAN** : கனம் தலைவர் அவர்களே, கல்வித் துறையில் பொது நிர்வாகம் காலந்தாழ்ந்து நடந்து வருவதை விளக்கவும், கல்வித் தரம் உயருவதற்கான நடவடிக்கையை மேற்கொள்ள வேண்டியதைப் புலப்படுத்தவும், நான் வெட்டுத் தீர்மானம் தந்திருக்கிறேன். அதை நான் முன் மொழிகிறேன்.

" That the allotment of Rs. 21,00,87,200 under Demand XV Education be reduced by Rs. 100."

DEPUTY SPEAKER : Cut Motion moved—

" That the allotment of Rs. 21,00,87,200 under Demand XV Education be reduced by Rs. 100."

May I know how much time the Hon. Minister will require for his reply ".

The Hon. Sri C. SUBRAMANIAM : Forty-five minutes, Sir.

DEPUTY SPEAKER : All right. The Demand and the cut **motion** are now before the House for discussion.

*Sri N. K. PALANISAMI : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, கனம் மந்திரி அவர்கள் நேற்றையதினம் கோயம்புத்தூரிலே பேசக்கூடிய காலத்தில் இந்தப் பள்ளிகளை ஹையர் செகண்டரி பள்ளிகளாக மாற்றக் கிட்டத்தட்ட வருஷம் ஒன்றுக்கு 20 வீதம் 5 வருஷத்தில் 100 தான் மாற்ற முடியும். ரெக்கரிங் எக்ஸ்பென்ஸஸ் ஒரு பள்ளிக்கு 10,000 ரூபாய் வீதம் 1,300 பள்ளிகளுக்கு 13 கோடி ரூபாய் ஆகும். மேலும், நான்-ரெக்கரிங் எக்ஸ்பென்டிசர் 14 கோடி ஆகும் என்ற முறையில் பேசியிருக்கிறார். ஆகவே இன்றையதினம் பூராவையும் ஹையர் செகண்டரி ஆக மாற எத்தனை வருஷம் ஆகும் ? வருஷத்திற்கு 20 பள்ளிகள் என்று சொன்னால் பூரா பள்ளிகளையும் மாற்ற எத்தனை வருஷம் ஆகும் ? படிக்கும் மாணவனின் நிலை என்ன என்று யோசிக்கும் காலத்தில் கல்வியில் ஒரு குழப்பமான நிலை இருக்கிறது என்று நான் அறிகிறேன். மேலும், போதுமான பள்ளி வசதிகள் கிடையாது. லாபரட்டரி வசதிகள் கிடையாது. போதுமான டிரையின்ட் டீச்சர்ஸ் கிடையாது. இதை எல்லாம் கணக்கில் எடுத்துக்கொள்ள வேண்டும். இந்தப் புதிய கல்வித் திட்டத்தைக் கொண்டுவரும் காலத்தில் ப்ரைமரி எடுகேஷன் லோயர் செகண்டரி எடுகேஷன், ஹையர் செகண்டரி எடுகேஷன், ப்ரி-யூனிவர்ஸிடி என்ற வகைகளில் 14 வருஷப் படிப்பு வேண்டுமென்று போட்டோம். இந்த 14 வருஷங்களில் லோயர் செகண்டரியை எடுத்துக் கொண்டாலும், ஹையர் செகண்டரியை எடுத்துக்கொண்டாலும், கலாசாலைகளை எடுத்துக்கொண்டாலும் போதனா மொழியாக தமிழ் மொழி இருக்க வேண்டும். என்பது நமது திட்டம். ஆனால், இப்போது என்ன நிலைமை ஏற்பட்டிருக்கிறது. கலாசாலைகளில் தமிழைப் போதனா மொழியாக ஏற்படுத்தும்போது, பெரிய எதிர்ப்பு ஏற்படுகிறது. அத்தகைய எதிர்ப்பு காரணமாக நாம் போட்டிருக்கும் திட்டத்தை நடைமுறைக்குக் கொண்டுவரும் நிலைமை இல்லை. இப்படிப்பட்ட ஒரு நிலைமை இருக்கிறது. படிப்படியாகக் கலாசாலைகளில் தமிழைக் கொண்டுவருவதாக இருந்தாலும் இப்போதைய திட்டப்படி 20 வருஷங்கள் ஆகும். இந்த 20 வருஷ காலத்தில் மாணவர்கள் எந்த அளவு படிக்கமுடியும். ஆங்கிலத்திலேயே படிக்கும் மாணவர்களுக்கும், தமிழில் படிக்கும் மாணவர்களுக்கும் வித்தியாசம் இருக்காதா ? திறமையில் ஏற்றத் தாழ்வு இருக்காதா ? இப்படிப்பட்ட ஒரு நிலைமை இருக்கிறது. ஏற்கனவே நாம் போட்ட திட்டப்படி 14 வருஷத்தில் டிகிரி கோர்ஸ் படித்து முடிக்க வேண்டும்—இது முன்பு இருந்த முறைக்கு ஒரு வருஷம் குறைவு. ஏற்கனவே நம்முடைய கல்வியின் தரம் மிகக் குறைவாக இருக்கிறது. மேலும் ஒரு வருஷம் குறைகிறது என்றால், இன்னும் கீழ்த்தரமாகத்தானே போகும் ? அது மட்டுமல்லாமல், இன்றையதினம் வேறு தேசங்களோடு

[Sri N. K. Palanisami] [22nd March 1961

ஒப்பிட்டுப்பார்த்தால், ஸ்காண்டிநேவியா, இங்கிலாந்து, ஜெர்மனி, ரஷ்யா இவைகளை எடுத்துக்கொண்டால், 10 வருஷ காலத்தில் அங்கு இருக்கக் கூடிய மாணவனுக்கு சகல படிப்பும் சொல்லிக் கொடுக்கப்படுகிறது—கணிதம், விஞ்ஞானம் முதலிய துறைகளில். இங்கு டிகிரி கோர்ஸில் எந்த அளவுக்குச் சொல்லிக் கொடுக்கப்படுகிறதோ, அந்தப் பூரா பாடத்தையும், 10 வருஷ காலத்தில் கற்றுக் கொடுக்கப்படுகிறது. அதை அடிப்படையாக வைத்து கல்வியின் தரத்தை மேலும் உயர்த்துவதற்கு பதிலாக இம்மாதிரியாக ஏற்கனவேயே தரம் குறைவாக இருக்கும் காலத்தில் மேலும் ஒரு வருஷம் குறைத்தது அதன் தரத்தை மேலும் குறைப்பதாக ஆகும்.

இன்னொன்று பார்க்கிறோம். ஒரு ஹைஸ்கூலில் படித்துவிட்டு ப்ரீ-யூனிவர்ஸிடிக்குப் போகும்போது தமிழில் படித்துவிட்டு கலாசாலைக்குச் சென்றவுடன் ஆங்கிலத்தில் படிக்க வேண்டியிருப்பதால் அது புரிவதற்கு ஒரு வருஷம் ஆகிறது.

அதற்குமேல் இரண்டு வருஷம் படித்த பிறகுதான் விஷயம் புரியும். இந்த இரண்டு வருஷத்தில் எந்த அளவுக்குச் சொல்லிக் கொடுக்க முடியும்? யூனிவர்ஸிடி முறையிலும், பழைய முறையிலே அமைக்காமல், இம்மாதிரி தமிழிலே கலாசாலைகள் நடக்க வேண்டுமென்று ஏற்பாடு செய்தால், அவர்களுக்கு ஒன்றும் புரியாது. ஆகவே இதற்கு ஒரு மாற்று முறை கண்டாக வேண்டும். இந்த மாற்று முறையை மேலெழுந்த வாரியாகக் கொண்டுவந்தால், கல்வியிலே தரம் மிகவும் மோசமாகப் போகும். கடைசியிலே புதிய கல்வி முறை பெரிய ஆபத்தான நிலைமைக்குத்தான் கொண்டுபோய் விடும். ஆகவே, இன்றையதினம், பி.யு.சி. படிப்பானது இரண்டு வருஷமாகச் செய்ய வேண்டுமா அல்லது ஒரு வருஷமாக செய்யவேண்டுமா? என்பதை முடிவு செய்ய வேண்டும். அதே போல் இதை ஹையர் செகண்டரியில் சேர்க்க வேண்டுமா அல்லது காலேஜில் சேர்க்க வேண்டுமா என்பதையும் முடிவு செய்தாக வேண்டும். இல்லாவிட்டால் இந்தத் தரமானது மிகவும் குறைந்து விடும். அது மட்டுமல்ல. வேண்டுமானால் இன்டர்மிடியேட் காலேஜில் இதைச் செய்ய முடியும். ஆனால் சொல்லிக் கொடுக்கக் கூடிய பள்ளிக்கூடம் பி.யு.சி. ஒரு வருஷம்; இரண்டாவது வருஷத்தை இத்துடன் இணைக்க முடியாது. அது மட்டுமல்ல. இன்டர்மிடியேட் காலேஜில் இருக்கக் கூடிய ஆசிரியர்களுக்கு பயிற்சி முதலியன கொடுத்து, அவர்களுக்கு அந்த மாதிரியான முறையிலே சொல்லிக் கொடுக்க வேண்டுமென்று ஏற்பாடு செய்தாலொழிய, கல்வியின் தரத்தை உயர்த்த முடியாது. ஆகவே தரத்தை உயர்த்தக் கூடிய அளவிலே, நாம் மேலும் இதை புனராலோசனை செய்ய வேண்டும். அப்படிப் புனராலோசனை செய்வதற்கான நடவடிக்கைகள் எடுக்க வேண்டுமென்று நான் சர்க்காரைக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

அது மட்டுமல்ல. இன்றையதினம் ப்ரைமரி கிளாசிலே பேசிக் கல்வி முறை புகுத்தப்படுகிறது. இதுவரையிலும் அது என்ன பலனை அளித்திருக்கிறது என்பதைப் பார்க்க வேண்டும். தற்போது சொல்லிக் கொடுக்க கூடிய விதம் எந்த விதத்திலும் பலன் அளிக்கக் கூடாத முறையில்தான் இருக்கிறது. நாம் நினைத்தது போல் இந்தக் கல்வியை எல்லாப் பள்ளிக் கூடங்களிலும் கொண்டுவர முடியாத அளவிலே தான் அந்தக் கல்வி இருக்கிறது. இந்த ஆதாரக் கல்வியை ஏன் சில ப்ரைமரி பள்ளிகளில் புகுத்த வேண்டும்? எலிமென்டரி கல்வியை எடுத்துக்கொண்டால், அது வெறும் லிடரரிதான். ஒத்துக்கொள்கிறேன். இதிலே ஆதாரக் கல்வியிலே இருக்கிற நல்ல அம்சங்களைப் புகுத்தினால் நல்லது. அதாவது, கைகளுக்கு வேலை, புலங்களுக்கு வேலை ஆகிய சில நல்ல அம்சங்கள் இதிலே அமைந்திருக்கிறது. இந்த நல்ல அம்சங்களை மட்டும் எடுத்து எலிமென்டரி கல்வியில் இணைத்து, எந்த முறையிலே கல்வி இருக்கவேண்டுமோ அந்த முறையிலேசெய்தால் நன்றாக இருக்கும் வெறும் ஆதாரக் கல்வியை மட்டும் இதிலே புகுத்தினால், அதிலே எந்த விதமான பிரயோஜனமும் இல்லை. "All education through Crafts" என்று ஆதாரக் கல்வியில் இருக்கிறது. தக்ளி நூற்க வேண்டும். பையன்கள் தோட்ட வேலை செய்ய வேண்டுமென்றெல்லாம் அதிலே

22nd March 1961] [Sri N. K. Palanisami]

சொல்லப்படுகிறது. ஆனால் அப்படி விவசாயம் செய்ய வேண்டிய நேரத்திலே அவர்களை விளையாடச் சொல்லுகிறார்கள். கடைசியிலே ஐந்து வருஷம் முடிந்த பிறகு அவர்களுக்கு ஒன்றும் தெரியாது. இந்த முறையைப் போக்க வேண்டும். ஆகவே இந்தத் திட்டத்தை அப்படியே கொண்டு வருவதால், பையன்களுக்குப் படிப்பு வராது. "**Practice of self-reliance, cultural activities Correlation**" போன்ற நல்ல அம்சங்களை இந்த எலிமென்டரி கல்வி முறையோடு எந்த அளவில் சேர்க்க வேண்டுமோ, அந்த அளவில் சேர்க்கக் கூடிய முறையில் அமைக்க வேண்டும். அந்த மாதிரி கொண்டுவரக் கூடிய நேரத்தில் கல்வி முறை சிறந்ததாக அமையக் கூடும்.

அடுத்து, பாடப் புத்தகத்தை எடுத்துக் கொள்வோம். இதை எப்படி செலக்ட் செய்கிறார்கள் என்று பார்க்க வேண்டும். ஆசிரியர்கள் தான் இதை செலக்ட் செய்கிறார்கள். இதைத் தவிர, கல்வியில் சம்பந்தமில்லாதவர்களும் இந்தக் கமிட்டியில் இருக்கிறார்கள். ஐந்தாவது வகுப்புக்குப் பாடப் புத்தகம் செலக்ட் செய்ய வேண்டுமானால், ஐந்தாவது வகுப்புக்குப் பாடம் சொல்லிக் கொடுக்கக்கூடிய ஆசிரியரே அந்தக் கமிட்டியில் இருந்து பாடப் புத்தகத்தை செலக்ட் செய்ய வேண்டும். அப்படி அல்லாது மேல் வகுப்பு ஆசிரியர்கள், கீழ் வகுப்புக்களுக்குப் பாடப் புத்தகங்களை செலக்ட் செய்வது என்று சொன்னால், அதனால் அது நல்ல முறையிலே அமைய முடியாது. ஏனெனில் அந்தந்த வகுப்பு ஆசிரியர்களுக்குத் தான் அந்தந்த வகுப்பு மாணவர்களுடைய தரம் தெரியும். ஆகவே, இந்தப் பாடப் புத்தகம் செலக்ட் செய்யக்கூடிய நேரத்தில், அந்தந்த வகுப்பிலே இருக்கக் கூடிய ஆசிரியர்களே அந்தந்த வகுப்புக்குரிய பாடப் புத்தகங்களை செலக்ட் செய்ய வேண்டுமென்று ஏற்பாடு செய்வது மிகவும் நியாயமாகும்.

அடுத்து சோஷியல் ஸ்டேடஸை எடுத்துக் கொள்வோம். இதிலே பூகோளம், சரித்திரம், ஹைஜீன் ஆகிய மூன்றும் சேர்க்கப்பட்டிருக்கிறது. ஆகவே இந்தப் பாடம் எதற்கு? இதனால் பையன்கள் விளையாடக் கூடிய நிலையில் தான் இருக்கிறார்கள். பூகோளம், சரித்திரம், ஹைஜீன் ஆகிய பாடங்களைத் தனித்தனியாகச் சொல்லிக் கொடுத்தால்தான் அது மாணவர்களுக்குப் பிரயோஜனமாக இருக்க முடியும்.

பதினான்கு வருஷப் படிப்பு இருக்கிறது என்று வைத்துக் கொள்வோம். இந்த 14 வருஷ காலத்தில் மாணவன் எந்த அளவுக்குப் படிக்க வேண்டும், என்னென்ன பாடங்களை, எந்தெந்த அடிப்படையிலே வைக்கலாம் என்பதற்கு ஒரு திட்டம் இப்போது கிடையாது. ஏனென்றால், மூன்றாவது பாரத்தில் படிக்கக் கூடியதையே, 10 வது கிளாசிலேயும் படிக்கக் கூடிய அளவில்தான் இன்று கல்வித் திட்டம் அமைக்கப்படுகிறது. "**The same thing is repeated**" என்ற நிலைமையில் தான் இருக்கிறது. ஆகவே இதை, "**Graded Scale**"ல் வைத்து, இன்னென்ன முறையிலே படிக்க வேண்டுமென்ற அவசியம் இருக்க வேண்டும்.

இன்னும் மாணவர்களை எடுத்துக்கொண்டால், "**Adulteration of milk**" என்பதைத்தான் அவர்களுக்குச் சொல்லிக் கொடுக்கிறார்கள். பாலிலே தண்ணீரைக் கலப்பது எப்படி, அதிலே சாக்கரி பவுடர் போட்டால் இப்படியாகும் என்று சொல்லித் தரப்படுவதைத் தான் இன்றும் காண்கிறோம். இந்த மாதிரி முறையிலே சொல்லிக்கொண்டு வருவதை அவசியம் நீக்க வேண்டும். அது மட்டுமல்ல. இன்றைய தினம் உல்சிலி முதல் வெல்சிலி வரை என்று சொல்லிக் கொடுக்கப்படுகிறது. இது இப்படிச் சொல்லிக் கொடுக்கவேண்டுமா? இப்படிச் சொல்லிக் கொடுப்பதால், என்ன பிரயோஜனம்? அதிலேயும் குறிப்பாகப் பெண்களுக்கு இதிலே என்ன அக்கறை இருக்கிறது? இன்னமும் இது சொல்லிக் கொடுக்கப்பட்டுதான் வருகிறது. இதை விடுத்து, தேசத் தலைவர்களைப் பற்றியோ, மற்ற நல்ல முறைகளிலோ, தேச பக்தியை வளர்க்கக்கூடிய பாடங்களைச் சொல்லித் தருவது மிகவும் அவசியமாகும்.

அடுத்தபடியாக, மிட் டே மீல்ஸ் ஸ்கீம் அதாவது, பகலுணவுத் திட்டம்; 1947–48–ம் வருஷத்தில் "**Post-war Reconstruction Scheme**" என்று இருந்தது. ஒரு பகலுணவுக்கு 1½ அண

கொடுத்தார்கள். ஐந்து வருஷம் நடந்தது. ஒன்பது கோடி ரூபாய் செலவழித்தார்கள். கடைசியிலே அது என்ன ஆயிற்று ? இன்றைக்கு இதற்கு 6 ந.பை. சர்க்கார் கொடுக்கிறது. ஆசிரியர்கள் பையன்களுடைய பெற்றோர்களிடமிருந்து 4 ந.பை. வசூல் செய்ய வேண்டும். இப்படிப் பெற்றோர்கள் மாதத்திலே 20 நாட்களுக்கு மேல் கொடுப்பதற்குத் தயாராக இல்லை. தவிர, ஆசிரியர்கள் தங்களுடைய பாடங்களை எல்லாம் விட்டுவிட்டுத் தான் பணத்தைச் சேகரிக்க வேண்டிய நிலைமை ஏற்படுகிறது. இப்படி வசூல் செய்வதற்கு அவர்கள் புறப்பட்டால், பாடம் கெட்டு விடுகிறது. அதோடு மத்தியானத்தில் சாப்பாட்டையும் பங்கிட வேண்டும். இந்த வேலை யும் ஆசிரியர்களைச் சேர்ந்தது. ஆகவே அவர்களுக்குக் கல்வி சொல்லிக் கொடுப்பதற்கு நேரம் கிடையாது. இந்த நிலையிலேதான் இன்றைக்குக் கல்வியின் தரம் இருக்கிறது என்பது நன்கு தெரிந்த விஷயம். கார்ப்ப ரேஷனில் லேபர் டிபார்ட்மெண்ட் கடந்த 30 வருஷங்களாக நடந்து கொண்டிருக்கிறது. அது ஒழுங்காக நடைபெற்றுக் கொண்டு வருகிறது. காரணம், அதற்கான செலவு பூராவும் கார்ப்பரேஷனால் ஏற்றுக் கொள்ளப் படுகிறது. அதே முறையிலே இந்த மத்தியான உணவு முறையும் நல்ல முறையிலே நடக்க வேண்டுமென்று சொன்னால் நம்முடைய சர்க்காரே இதற்கான பூராத் தொகையையும் கொடுக்க வேண்டும். அப்படி நம் முடைய சர்க்காரே பூராத் தொகையையும் கொடுக்க முடியாத நிலைமை யில் இருந்தால், மத்திய சர்க்காரிடம் உதவி கேட்க வேண்டும். ஸ்ரீ நந்தா அவர்கள் கூட இதைப் பற்றி நம்முடைய சர்க்காரை ஆலோசனை செய்ய வேண்டு மென்று கூறியிருப்பதாகப் பத்திரிகையில் பார்த்தேன். ஆகவே, மதிய உணவுக்கான பூராத் தொகையையும் நமது சர்க்காரே ஏற்றுக் கொள்ள வேண்டும். அல்லது அவசியம் மத்திய சர்க்காரிடம் இதற்குக் கிராண்டு வாங்கவேண்டும்.

நம்முடைய மாகாணம் காம்போஸிட் ஸ்டேட்டாக இருந்த காலத்தில் கூட 8 கோடி ரூபாய் அல்லது 9 கோடி ரூபாய்தான் கல்விக்காகச் செலவு செய்திருக்கிறோம். இப்போதுள்ள நம்முடைய மாகாணத்திற்கு மட்டும் கல்விக்காக 21 கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கிறது என்று சொன்னால், அது மிகவும் பெருமைக்குரிய விஷயம் தான். இதிலே மிகவும் முக்கிய மானது செகண்டரிக் கல்வி. இந்த செகண்டரிக் கல்விக்காக மட்டும் ஒரு தனி டைரக்டர் தேவை. காரணம் இன்றைக்கு இருக்கக்கூடிய நிலைமை யிலே இப்போதுள்ள டைரக்டரால் எல்லாக் காரியங்களையும் செய்ய முடி யாது. ஏற்கனவே பல திட்டங்களைப் பார்க்க வேண்டியிருக்கிறது. அவ ரால் இப்போது நிர்வாகத்தையே சரியான முறையிலே நடத்த முடியவில்லை. செகண்டரிக் கல்வியைச் சட்டபூர்வமாகக் கவனிப்பதற்கு என்று ஒரு தனி டைரக்டர் இருக்க வேண்டும். இது மிக முக்கியம். சரியான முறையிலே இதை நடத்திச் செல்வதற்கு அவசியம் ஒரு தனி டைரக்டரை இதற்குப் போட வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

இன்னும் வேஸ்டேஜ் பற்றிய நிலைமையைக் கொஞ்சம் பார்க்க வேண் டும். " Wastage is a National loss " என்று சொல்லப் படுகிறது. மாணவன் செலவு செய்து படிக்கிறான். எந்த அளவுக்கு மாணவன் உபயோகமாக இல்லையோ, அந்த அளவிற்கு நாட்டிற்கு நஷ்டம் ஏற்படுகிறது. ஆனால் அதைப் போக்கக்கூடிய ஒரு நிலைமையை வகுக்கப் படவில்லை.

DEPUTY SPEAKER : The hon. Member has got one more minute.

SRI N. K PALANISAMI : Sir, I want two more minutes. இன்றைதினம் எடுத்துக் கொண்டால், மாணவர்கள் பரீட்சைக்கு அடிமைகளாக்கப்பட்டு, பாஸ் செய்யக்கூடிய நிலைமைதான் இருக்கிறது. அந்தந்தக் கிளாசிலே அந்தந்த வகுப்புக்குரிய பாடங்களைப் படித்து, அதிலே பாஸ் செய்ய வேண்டும். ஆனால், எக்ஸ்டெர்னல் எக்ஸ்பிரீயன்சுக்கு 40 மார்க்கும், பாடத்திற்கு 60 மார்க்கும் என்று வைத்துக் கொண்டால் நல்லது. இப்படிச் செய்தால், வேஸ்டேஜ் ஓரளவு குறையும். ஆகவே, இதைச் சர்க்கார் கவனிக்க வேண்டுமென்று கேட்டுக் கொண்டு, என் உரையை முடித்துக் கொள்கிறேன்.

22nd March 1961]

DEPUTY SPEAKER : Each Hon. Member is allotted ten minutes. The hon. Member Sri V. K. Krishnamurthy will now speak.

* Sri V. K. KRISHNAMURTHY : அவைத் தலைவர் அவர்களே, கல்வி வளம் பெருக, செல்வ வளம் கோரும் கல்வி மானியக் கோரிக்கையைப் பாராட்டி வரவேற்கிறேன். கல்வி வளர்ச்சியே நாட்டு வளர்ச்சி என்னும் அடிப்படையில் கல்வி அமைப்பு அமைந்திருத்தலை கனம் அமைச்சரவர்கள் அறிவித்தமையைப் பாராட்டுகிறேன். 1958–ல் ரூ. 11 கோடி, 1959–ல் ரூ. 12 கோடி, 1960–ல் ரூ. 15 கோடி, 1961–ல் ரூ. 17 கோடி, 1962–ல் ரூ. 20.61 கோடி என்று கல்வி மானியத்திற்காக தொகை ஒதுக்கியிருப்பதை ஒப்பு நோக்கிப் பார்க்கின், கல்வி வளர்ச்சிக்காக மிகவும் அதிகமாக, ஆரம்பக் கல்வி வளர்ச்சிக்கு மேல்புலத்தையும் வெல்லும் நிலைமையில் தமிழ் நாட்டு அரசாங்கம் செலவு செய்திருப்பது பாராட்டுதற்குரியது.

முதல் ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் 45 சத விகிதம் குழந்தைகள் ஆரம்பப் பள்ளிக்குச் சென்றனர் ; இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் 75 சத விகிதம் குழந்தைகள் ஆரம்பப் பள்ளிக்குச் செல்லுகின்றனர். ஆரம்பக் கல்விக்கு நம் தமிழ் நாட்டு அரசாங்கம் செய்யும் செலவு வியத்தற்குரியது ; மேல்புல நாடுகளை வெல்லும் வகையில் ஆரம்பக் கல்விக்குச் செய்யும் செலவு பாராட்டுதற்குரியது.

இலவசக் கல்வி இனிதே அளித்து வரும் உயரிய திட்டம், உணவையும், உடையையும் அளிக்க முன்வந்திருப்பது மகிழ்ச்சிக்குரியது. இத் திட்டம் பழங் காலந்தொட்டே நம் நாட்டில் இருந்து வருகிறது. சீத்தலைச் சாத்தனார் அன்றே ' பசிப்பிணி என்னும் பாவி ' என்றுரைத்தார். மணிமேகலை அட்சயபாத்திரம் ஏந்தி உணவு நல்கிய பெருமையை நன்கு இயம்புகிறது இலக்கியம். உணவு அளிக்கும் திட்டத்தைக் குறை கூறுவோரும் உண்டு. முந்நூறு கிராமங்களுக்குச் சென்று மக்கள்பால் பள்ளிச்சீரமைப்பைக் கூறியதும், மனமிகவுவந்து வள்ளல்போல் வாரி வழங்கினார்கள். இத் திட்டம் அரசியலுக்கப்பாற்பட்டு, பச்சிளங் குழந்தைகளிடை நிலவியுள்ள பஞ்சம், பட்டினி, வறுமை இவைகளை அறவே அகற்ற வந்த திட்டம். அரசியல் பொருளாதார சமுதாய சித்தாந்திகளையும் கடந்து குழந்தைகளுக்கு உணவளிக்கும் திட்டம், பள்ளிச் சீரமைப்புத் திட்டம் அண்மையில் வேலூரில் நடந்த மாபெரும் மாநாடு இந்தியாவின் புகழைப் பெற்றது.

இதை எதிர்ப்பவர்கள் மார்க்கசீய வாதிகள். வறுமையை முன்னிறுத்தி, வர்க்கப் போரைத் தோற்றுவித்து, அவலத்தை உண்டாக்கி, ராணுவ உதவி கொண்டு ஜனநாயகத்தை ஒழிக்க விரும்புகிறவர்கள் தான் இதை எதிர்க்கிறார்கள். குடும்பங்களுக்கு முதன்மை அளிக்காமல் நாட்டிற்காகக் குடும்பங்கள் என்று கூறும் மார்க்கசீய கொள்கை சைனாவில் இருப்பதை அறிவிக்க விழைகிறேன். இளங் குழந்தைகளிடையே பட்டினித் தத்துவத்தை விளக்க முயலும் மார்க்கசிய வாதிகள் நாட்டின் எதிரிகள். ஆதலால் பள்ளிச் சீரமைப்புத் திட்டத்தை மேன்மேலும் ஆதரிக்க வேண்டுகிறேன். இந்தத் திட்டத்திற்கு அரசாங்கம் மேலும் மேலும் ஊக்கம் கொடுக்க வேண்டும்.

தமிழ் நாட்டில் மலர்ந்த இத் திட்டம் மற்ற மாநிலங்களில் பரவி இந்தியாவில் இணையற்றதாயியங்கி, கீழ்நாடுகளில் தலைசிறந்து விளங்கி, உலகப் பாராட்டைப் பெற்ற திட்டம் என்று பெருமையுடன் கூறுகின்றேன்.

இலவசக் கல்வியைப் 11–வது வகுப்பு வரைப் புகுத்த ஏற்பாடு செய்திருப்பது மகிழ்ச்சியுற வைக்கிறது. திங்களுக்கு ரூ. 100 ஊதியமுடையோருக்கு இச் சலுகை உண்டென்பதை மாற்றி, விலைவாசியை முன்னிட்டு திங்களுக்கு ரூ. 250 அல்லது 300 வரை ஊதியம் பெறுகிறவர்களுக்கு இச்சலுகை அளிக்கப் பெற வேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

[Sri V. K. Krishnamurthy] [22nd March 1961

பதினேருவது வகுப்பு வரை பாட மொழி தமிழ் ; கல்லூரியிலே பாட மொழி ஆங்கிலம். இந்நிலை மாற வேண்டும். 11–வது வகுப்பு வரை தமிழ் பயின்று பின்னர் ஆங்கில மொழி பாட மொழி எனில் வியப்பாக இருக்கிறது. உரிய மொழியாம் தமிழுக்கும், ஆதிக்க மொழியாம் ஆங்கிலத்திற்கும் போர் ; இந்நிலை ஐரோப்பாவிலிருந்தது. லத்தின் மொழி ஆதிக்க மொழியாக இருந்தபொழுது, ஆங்கில மொழி, பிரஞ்சு மொழி உரிய மொழி ஆகவில்லை. பொருளை அறிவதற்குக் குறித்த மொழி பயில வேண்டுமென்பது ஏற்புடைத்த கொள்கையல்ல. ஆங்கில நாட்டில் பாட மொழி பிரஞ்சு அல்ல ; பிரஞ்சு நாட்டில் பாட மொழி ஆங்கிலமல்ல. ஆனல் தமிழ் நாட்டில் பாட மொழி ஆங்கிலமென்று இருக்கிறது. இம் முறை ஒழிக்கப்பட வேண்டும்.

தமிழ் மொழி வளர்ச்சி அடையவில்லை என்று கூறுகிருர்கள். பாட மொழி பற்றிப் பேச பல்கலைக் கழகத்தினருக்குத் தான் உரிமை என்று கூறுவது பொருந்தாத வாதம். படைத்த இலக்கியத்தைப் படித்துக் கூறும் இயல்புடையவருக்கே மொழி பற்றிப் பேச உரிமையுண்டெனின், இலக்கியத்தைப் படைக்கிற வல்லுனர்கள் இந்த மன்றத்தில் உண்டு என்று பெருமையுடன் கூறி, ஆதலால் பாட மொழி பற்றிப் பேச உரிமையுண்டு என்று கூறுகின்றேன்.

[உவமையற்ற அமைதி நிறை இலக்கணமும் முழுமை எய்திய இலக்கியமும் தமிழுக்குண்டு. தமிழ் பல இலக்கிய மறுமலர்ச்சிகளைக் கண்டு சமுதாயத்திற்குப் புது வாழ்வளித்து, வாழும் மொழியாக, வாழ்வளிக்கும் மொழியாக இலங்கல் வெள்ளிடைமலை. முச்சங்க காலத்தில் வளர்ந்து மறுமலர்ச்சி எய்திமை கண்கூடு ; காப்பிய காலத்தில் மறுமலர்ச்சி எய்தியது ; திருமுறை காலத்தில் மற்ருெரு மறுமலர்ச்சி ; ஆனல், திருத்தக்க தேவர், கச்சியப்ப முனிவர், சேக்கிழார், கம்பர், இவர்களால் படைக்கப்பட்ட இலக்கியங்களே பொற்கால இலக்கியங்கள். இவ் விலக்கியங்கள் பொருள் ஆழமும், சொற் சுவையும், நலம் நல்கும் வகைகளும் கொண்டன. உலக இலக்கிய வளர்ச்சிகளுடன் இப் பொற்காலத்தில் தோன்றிய தமிழ் இலக்கியங்கள் போட்டியிடும் பெற்றிமையுடன் விளங்கிய தோடல்லாமல், அளவினும், ஆழத்திலும் மிகுந்தன.

சேக்கிழார் காலத்திற்குப் பிறகு தொடர்ந்து தலைமுறைக்குப் பல நூல்கள் தோன்றின எனினும், 17–ம் நூற்ருண்டில் சிவஞான யோகிகளின் சித்திரக் கவிகளும், விளக்க உரைநடையும், சித்தாந்த ஆராய்ச்சியும் சீர்மையுடன் விளங்கின. 18–ம் நூற்ருண்டில் மகா வித்துவான் மீனுட்சி சுந்தரம் பிள்ளை அவர்களின் ஒரு லட்சம் பாடல்கள் பெருமையைத் தருகிறது. வேறு எம் மொழியில், இந் நாட்டில் எவர் பாடியுள்ளார் ? இராமலிங்க அடிகளின் அருட் பாடல்கள்—இங்கித மாலை—மிகச் சிறந்த பாடல்கள்.

19–வது நூற்ருண்டு மறைமலை அடிகளின் தனித் தமிழ் ஊழி உவமையற்ற உரைநடை. மேல்புல உரைநடைகளுடன் போட்டியிடும் பெற்றிமை எய்தியுள்ளது. ஜகவீர பாண்டியனின் திருக்குறள், குமரேச வெண்பா மிகப் பழமைக்கும், புதுமைக்கும் ஒற்றுமை கண்டு இணைந்த இலக்கியத்தின் மறுமலர்ச்சி. விபுலானந்த அடிகளின் யாழ் நூல் புது வாழ்வளிக்கும் நல்ல நூல்.

இவையனைத்தும் மொழி வளர்ச்சியைக் காட்டாமலில்லை. இங்கிலாந்தில் ஷேக்ஸ்பியர் நாடகங்களும், மில்டனின் செய்யுட்களும், ஷெல்லி கீட்சு பைரல் ஆகிய இவர்களின் செய்யுட்களே மொழியின் அடிப்படை ; இவைகளை ஒப்பு நோக்கின் தமிழ், வளர்ச்சி அடைந்த மொழி. கிரேக்க மொழி, லத்தீன் மொழி, சமஸ்கிருத மொழி ஒரு மறுமலர்ச்சி அடைந்து கண்காட்சியில் விளங்குகின்றன. தமிழ் வளர்ச்சியடையாத மொழி என்று கூறுவது ஏற்றுக்கொள்ள முடியாத வாதம்.

மொழி யொலி முறைப்படி அமைந்த மொழி தமிழே. ஓர் எழுத்துக்கு ஓர் ஒலி, ஓர் ஒலிக்கு ஓர் எழுத்து, உயிர் ஒலி, மெய் ஒலி ஆகிய வகுப்பு முறை, ஒலிப் பிறப்பு அடியாக அவற்றின் வரிசைமுறை, இவைகள்

22nd March 1961] [Sri V. K. Krishnamurthy]

யாவும் தமிழ்மொழியில் அமைந்துள்ளன. ஆங்கிலமொழி இப்படி அமைய வில்லை. உதாரணமாக ஓஷன், என்ற வார்த்தையை எடுத்துக் கொண் டால், அதிலுள்ள எழுத்துக்களுக்குத் தகுந்தாற்போல் உச்சரிப்பு செம்மையாக இல்லை. எழுத்தின் ஒலி முறை, சொல்லமைப்பு பொரு ளுணர்த்தும் நெறி இவைகள்தான் மொழி வளர்ச்சிக்கு அடிப்படை. இம் முறையில் அமைந்த தமிழ்மொழி வளர்ச்சிபெறவில்லை என்று கூறுவது நெறியல்ல, நேர்மையுமல்ல, உண்மையுமல்ல. ஆதலால் தமிழ் மொழி எல்லாக் கல்லூரிகளிலும் பாட மொழியாகக் கட்டாயம் இருந்தே தீர வேண்டும். இதில் காலங் கடத்தல் கூடாது.

திருக்கோவைக்கு நல்ல உரை தேவை. பல்கலைக் கழகம் இத் திருப்பணி யில் ஈடுபட வேண்டுகிறேன். சித்திரக் கவிகளைப் பாடினவர்கள் மூவர். சம்பந்தர், சிவஞான யோகிகள், மகா வித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை. ஏகபாதம், மாலைமாற்று, மொழி மாற்று, திருச்சகர மாற்று, திருக்கோ முத்திரி, திருவியமகம் இவைகளைப் பாட புத்தகங்களில் புகுத்தலாம்.

சிவஞான யோகிகளின் பேருரை மிகச் சிறந்த உரை. பொருளை அகம்–அகப் புறம், புறம்–புறப்புறம் என நான்கு வகைப்படுத்தி, ஒவ் வொன்றையும் ஒற்றுமை, வேற்றுமை, உடன்பாடு—எதிர் மறை, அகம்–புறம் என அறு வகையாக ஆய்ந்து விளக்கங் கண்டவர். இதைத் தத்துவப் பகுதிக்கு வைத்தல் வேண்டும்.

தொல்காப்பியத்தில் செய்யுளியல் உயிர் பகுதி. இதை வெள்ளைவார ணன் ஆய்ந்து 78,125 விகற்பங்கள் என்று கண்டு பிடித்துள்ளார். புலவர் வகுப்புக்கு இப் பகுதியைக் கட்டாயம் வைக்கலாம்.

தனக்கென எழுத்து முறை உடைய மொழி உலகிலேயே தமிழ் ஒன்றே. மேல் நாடுகளில் லத்தின் எழுத்து வடிவம்தான் மற்ற மொழி கள் கொண்டுள்ளன. வட இந்தியாவிலும், தமிழ் நாடு நீங்கலாக தென் னிந்தியாவிலும் சமஸ்கிருத எழுத்து வடிவம்தான் எல்லா மொழிகளும் பெற்றுள்ளன.

க, ங, ச, ஞ, ட, ண, என்ற எழுத்தொலிகள் தொண்டை, அண்ணம், நா ஆகிய இவ்விடங்களில் பிறக்கின்றன என்று கிரேக்க–லத்தீன்–ஆரிய இலக்கணங்கள் இயம்பின. மொழி ஒலி வளர்ச்சி, வளர்ச்சியுற்ற பின்னர் இம் மூவகை ஒலிகள், நா, முதல், இடை, கடை என்ற இடங்களில் தோன் றும் என்று 19–ம் நூற்றாண்டில் மேல்புலத்தில் கண்டனர். இவ் வுண்மை தொல்காப்பியர் அன்றே கண்டனர். ஆதலால் மொழி ஒலி ஆராய்ச்சியைப் பல்கலைக் கழகத்தில் அமைக்க வேண்டுகிறேன்.

ஒடுக்க அறிவும், சமய அறிவும் தேவை. நூல் அறிவு வாலறிவாகத் திரும்ப வேண்டும்.

யாழ் நூல் முறைப்படி யாழ் அமைத்தல் வேண்டும். தமிழ் இலக்கி யத்தில் ஆராய்ந்தவைகளை ஆங்கிலத்தில் வரைந்தால்தான் பல்கலைக் கழ கம் ஏற்று பட்டம் தருகிறது. இதை மாற்றித் தமிழிலே வரைய விதி செய்யலாம்.

மாணவர்கள் தரம் குறைவதற்குக் காரணம் ' நோட்ஸ் '. எவ்வளவு ஆசிரியர்கள் கற்றுக் கொடுத்தாலும், குறுக்கு வழியில் தேர்ச்சி பெற ' நோட்ஸ் ' கையாளப்படுகிறது. நோட்ஸுக்குத் தடை விதித்துப் பாடங் களைக் குறைத்து, அறிவு வளர ஆவன செய்யயக் கோருகிறேன். வணக்கம்.

* **SRIMATHI P. K. R. LAKSHMIKANTHAMMAL:** கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்தக் கல்வி மானியத்தை ஆதரித்து ஒருசில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். யாரும் கண்டிராத வகையில் நம் மாகாணத்தில் 11–வது வகுப்பு வரை ஜாதி, மத, வேறுபாடின்றி, ஏழை மாணவர்கள் அவ்வளவு பேருக்கும் இலவசமாகக் கல்வி வசதி அளிக்க வேண்டும் என்று கருணைகூர்ந்து கனம் நிதி அமைச்சர் அவர்களும் கனம் 10 a.m.

[Srimathi P. K. R. Lakshmikanthammal] [22nd March 1961

முதல் அமைச்சர் அவர்களும் செய்திருப்பதற்கு அவர்களுக்கு நாம் மிகவும் கடமைப்பட்டிருக்கிறோம். நம் தமிழ் நாடு கடமைப்பட்டிருக்கிறது என்று சொல்ல வேண்டும். தமிழ் நாட்டின் சார்பில் நம் நன்றியை அவர்களுக்குச் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்.

அடுத்தபடியாகக் கட்டாயக் கல்வி பற்றிச் சொல்லும்போது, ஜனநாயக நாட்டிலே கல்வி மிக முக்கியமானது. ஜனநாயகம் நல்ல முறையிலே வளர வேண்டும், பண்போடு வளர வேண்டு மென்றால், அடிப்படையானது கல்வி. அத்தனை பேரும் கல்வி அறிவு படைத்தவர்களாக இருக்க வேண்டும் ; கிராமத்திலுள்ள ஒவ்வொரு குழந்தையும், நகரத்தில் உள்ள ஒவ்வொரு குழந்தையும், கல்வி கற்க வேண்டும். அதற்கான வசதிகளைச் சர்க்கார் செய்து தர வேண்டும். இந்த அறிக்கைகளிலிருந்து நாம் இந்த 10, 12 ஆண்டுகளில் எவ்வளவு தூரம் முன்னேறியிருக்கிறோம் என்பது நன்கு விளங்குகிறது. சென்ற வருஷத்தில் எவ்வளவு செய்திருக்கிறோம், இந்த வருஷம் எவ்வளவு செய்கிறோம், இன்னும் வரும் வருஷத்தில் எவ்வளவு செய்ய இருக்கிறோம் என்று பார்க்கும்போது, நம் நாட்டில் கல்வி வளர்ச்சி எவ்வளவு துரிதமாக நடைபெறுகிறது என்று அறிந்து கொள்ளுகிறோம். நம் கல்வி முறையில் குறை சொல்ல இடமும் இல்லை என்று கருதுகிறேன். ஆனால், தனிப்பட்டவர்களால் நடத்தப்படும் ஆரம்பக் கல்வி நிலையங்களுக்குச் சென்ற வருஷத்தில் நிர்வாகச் செலவு, மெயின்டினன்ஸ் கிராண்ட் என்று சொல்வார்களே, அது 15 சத விகிதம் கொடுப்பதாக இருந்தது. ஆனால், அந்த 15 சத விகிதம் எல்லாப் பள்ளிகளுக்கும் கொடுத்தார்களா என்றால், அவர்கள் எல்லோரும் அடையவில்லை. ஒரு சிலர்தான் அடைந்தார்கள் என்று தெரிகிறது. அதற்குக் காரணம் விளங்கவில்லை. இந்த வருஷம் அந்த 15 சத விகிதத்தைக் குறைத்து 10 சதவிகிதம் அல்லது 7½ சதவிகிதம்தான் வழங்கப் போகிறார்கள் என்பதைப் பார்க்கும்போது, அதிர்ச்சியுறுகிறேன். கட்டாயக் கல்வி கொண்டு வந்திருக்கும் இந்த நேரத்தில், எல்லாக் குழந்தைகளுக்கும் வேண்டிய பள்ளிக்கூடங்களை சர்க்காரே நிர்வகிக்க முடிந்தாலும், இஷ்டப்பட்டுத் தனியார் நடத்தும் பள்ளிக்கூடங்களுக்கும் இம்மாதிரியான சலுகைகளைக் கொடுத்தால்தான், கல்வி நல்ல முறையில் வளர வசதியாக இருக்கும். ஆகையினால், இந்த 15 சதவிகிதம் என்று இருப்பதைக் குறைக்காமல் கொடுக்க வேண்டும். அப்பொழுதுதான் அவர்களுக்குக் கட்டுபடியாகும். கட்டட வாடகை கொடுக்க வேண்டியிருக்கிறது. அதன்மேல் பல செலவினங்கள் இருக்கின்றன. அவைகளை எல்லாம் ஒன்றாகச் சேர்த்துப் பார்த்தால் 20 பர்சென்ட் கொடுத்தாலும் அவர்களுக்குப் போதாது. ஏற்கனவே 15 பர்சென்ட் மானியம் சரியாகக் கொடுக்கவில்லை என்று சொல்லும்போது, அதை இப்படிக் குறைப்பது என்பது இன்னும் அவர்களுக்குக் கஷ்டமாகப் போய்விடும். அவர்கள் எப்படி தங்கள் பள்ளிகளை நிர்வகிக்க முடியும் என்று தெரியவில்லை. சர்க்கார் பள்ளி கட்டட வாடகையைக் கொடுத்துவிட்டு, அதன்மேல் 10 சதவிகிதம் கொடுத்தாலும் அவர்கள் எப்படியோ சமாளித்துக் கொள்வார்கள். ஆகவே இதைக் கனம் அமைச்சரவர்கள் கவனித்து கட்டட வாடகையையாவது தனியாகக் கொடுத்துவிட்டு, அதன் பிறகு 10 பர்சென்ட் கொடுக்க வசதி செய்ய வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

இப்பொழுது நாம் தமிழிலேயே கல்லூரிகளில் போதனை செய்யப்பட வேண்டும் என்பதற்காகப் பரீட்சார்த்தமாகக் கோயம்புத்தூரில் ஏற்பாடுகள் செய்யப்பட்டிருக்கின்றன. எனக்கு முன் பேசிய அங்கத்தினர்கள் சொன்னார்கள் 11-வது வகுப்பு வரை தமிழிலேயே படித்துவிட்டு, பி.யு.ஸி. வகுப்பில் திடீரென்று எப்படி ஆங்கிலத்தில் படிப்பது, புரிந்துகொள்வது என்று தெரியவில்லை என்று. ஆகையினால், இந்தப் புகுமுக வகுப்பில் கூட தமிழ்தான் போதனா மொழியாக இருக்க வேண்டும் என்கிறோம். அப்படி இருக்கும்போது, மருத்துவ, என்ஜினீரிங் கல்லூரிகளில் அத்தனை பாடங்களையும் எந்த முறையிலே ஆங்கிலத்தில் படிக்க முடியும் என்று தெரியவில்லை. ஆங்கிலத்தின் தரம் உயர்த்தப்பட வேண்டும் என்று சொல்லுவதில் நியாயம் இருக்கிறது. மருத்துவ, பொறியியல் கல்லூரிகளில் ஆங்கிலம் மூலமாகப் படிக்க ஆங்கிலத்தின் தரம் மிக உயர்ந்ததாக

இருக்க வேண்டும் என்பது யாரும் ஒத்துக் கொள்ளக் கூடியதே. ஆகவே, ஆங்கிலத்தின் தரம் உயர்த்தப்பட வேண்டும்; இல்லையென்றால், அந்த அளவுக்கு ஆங்கிலத்தில் படிப்பது நிறுத்தப்பட வேண்டும்.

இன்றைக்கு நாம் 5-வது வகுப்பிலிருந்து ஆங்கிலத்தை ஆரம்பிக்க இருக்கிறோம். அதை 3-வது வகுப்பிலிருந்தே ஏன் ஆரம்பிக்கக் கூடாது. ஆரம்பத்தில் இன்றைக்கு மூன்று வகுப்பு வரை ஒரே பாஷையைத் தான் கற்கப் போகிறோம். ஆகவே 3-வது வகுப்பிலேயே ஆரம்பித்தால் வசதியாக இருக்கும் தொடர்ந்து படிக்கும்போது, எட்டாவது ஸ்டாண்டார்டில் இந்தியையும் சேர்த்து மூன்று பாஷைகள் படிக்க வேண்டிய நிலைமை இருக்கிறது. ஆகவே மூன்றாம் வகுப்பிலேயே ஆங்கிலத்தை ஆரம்பிக்கலாம் என்பதைப் பரிசீலனை செய்து, சிக்கல்கள் இல்லாமல் செய்ய வேண்டும் என்று கேட்டுக் கொள்ள விரும்புகிறேன்.

கல்லூரிகளில் தமிழ் மொழியைப் போதனை மொழியாக நாம் ஆக்க இருக்கிறோம். அதைக் கட்டாயமாகச் செய்ய வேண்டும் என்ற கருத்து இருக்கிறது நம் நிதி அமைச்சருக்கு. அது சரியான கருத்தேயாகும். ஆங்கிலம் ஒரு அன்னிய மொழி. நாம் பயிற்சி பெற்றாலும், அந்தப் பாஷையின் கௌரவ அளவுக்குத் தான் கற்க வேண்டும். அதை மீடியமாக வைப்பதற்கில்லை. அந்த பாஷை மூலமாகக் கல்வி கற்பது என்பது சரியாகாது என்பதை ஒத்துக் கொள்ளுகிறேன். இருந்தாலும்கூட ஆங்கிலத்தின் மூலமாகக் கல்வி புகட்ட வேண்டும் என்று விரும்பி அம்மாதிரிச் செய்ய முற்படும் கல்லூரிகளுக்கும் சர்க்கார் மானியம் கொடுக்க வேண்டும்; அவர்கள் அம் மாதிரிப் போதிப்பதால் எந்த விதமான கஷ்டமோ, தொந்திரவோ வந்துவிடாது. சர்க்காரில் உத்தியோகத்திற்கு வருபவர்களை வேண்டுமானால், தமிழ் போதனை மொழியாகக் கற்றவர்களுக்குத்தான் உத்தியோகம் கொடுப்பதில் முதல் இடம் என்று வைத்துவிடலாம்.

நாட்டில் கல்வி மிகவும் உயர்ந்து வருகிறது, எங்கும் நல்ல முறையில் பரவி வருகிறது. எந்த வித ஆட்சேபணையும் கிடையாது. ஆனால், அதற்குத் தக்க முறையில் பண்பு உயரவில்லை என்று வருந்துகிறேன். கல்வியின் அளவுக்குப் பண்பும் உயர வேண்டும். அப்பொழுதுதான் நாட்டின் கௌரவமும், தரமும் உயரும். கல்விக்கூடங்களிலே, ஒழுக்கம், மத போதனைகள் எல்லாம் கற்றுக் கொடுக்க வேண்டும். அறிவையும், பண்பையும் உயர்த்த வேண்டும். அம்மாதிரிச் செய்ய சர்க்கார் தக்க உதவிகள் கொடுக்க வேண்டும். மத சம்பந்தம் என்று சொல்லும்போது ஒழுக்கத்தையும், பண்பையும்தான் நான் குறிப்பிடுகிறேன்.

மேலும் சிறிய ஆரம்பப் பள்ளிக்கூடங்களிலே படிக்கும் குழந்தைகளுக்கு யார் பாடங்களைக் கற்பிக்க வேண்டுமென்றால் பெண்ணாகத்தான் இருக்க வேண்டும் என்று திட்டவட்டமாகச் சொல்ல ஆசைப்படுகிறேன். முதல் வகுப்பிலிருந்து ஐந்தாவது வகுப்பு வரையிலும் சொல்லிக் கொடுக்கும் ஆசிரியர்கள் பெண்ணாகத்தான் இருக்க வேண்டும். ஆண் குழந்தைகளாக இருந்தாலும், பெண் குழந்தைகளாக இருந்தாலும் இவர்களுக்குச் சொல்லிக் கொடுக்கும் ஆசிரியர்கள் பெண்களாக அமர்த்தப்பட வேண்டும். இந்த மாதிரியாகக் கல்வித் துறையிலே ஒரு சீர்திருத்தம் ஏற்பட்டு புரட்சிகரமான மாறுதலை உண்டு பண்ண வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். ஏனென்றால் பெண்கள்தான் பொறுமை உள்ளவர்கள்; சாந்த குணம் படைத்தவர்கள், குழந்தைகளிடத்தில் அன்பு கொண்டவர்கள். கல்விக்கு தெய்வம் சரஸ்வதி என்று சொல்வார்கள். சரஸ்வதியும் பெண் அம்சமாக இருக்கக்கூடிய காரணத்தினால் குழந்தைகளுக்குப் பெண்களே போதிக்க வேண்டும். ஆகையால் அவர்களையே ஆசிரியைகளாக அமர்த்த வேண்டுமென்று கேட்டுக் கொண்டு என் வார்த்தைகளை முடித்துக் கொள்கிறேன்.

*SRI A. CHIDAMBARANATHA NADAR: கனம் தலைவர் அவர்களே, நமது மாநிலக் கல்வி அமைச்சர் அவர்கள் கொண்டு வந்த இந்த மானியத்தை ஆதரித்துச் சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். தமிழ் நாட்டில் கல்வி வளர்ச்சிக்காக கனம் கல்வி அமைச்சர் அவர்கள் நல்ல முறையிலே பல காரியங்கள் செய்துகொண்டு வருகிறார்கள் என்பது மட்டு

[Sri A. Chidambaranatha Nadar] [22nd March 1961

மல்லாமல் இது மாதிரி நல்ல முறையிலேயும், வெற்றிகரமாகவும் நமது மாநிலக் கல்வி இலாகா டைரக்டர் அவர்களும் நடத்தித் தருகிறார்கள் என்றால் அது ஒரு நாளும் மிகையாகாது. நமது மாநிலம் பூராவும் 1961-ம் ஆண்டு சென்சஸ் எடுக்கப்பட்டது. இதனால் நமது கல்வித் துறையில் நம் மாகாணத்தில் நல்ல முன்னேற்றம் ஏற்பட்டிருக்கிறது என்பதை நாம் திட்டவட்டமாக அறிந்துகொண்டிருக்கிறோம். அதுவும் விசேஷமாக எனது மாவட்டத்தில் நல்ல முன்னேற்றம் இருப்பது கண்டு நான் மிகவும் சந்தோஷப்படுகிறேன். எங்களுடைய மாவட்டம் இந்த ராஜ்யத்துடன் சேர்ந்த பிறகுதான் நல்ல முறையிலே நடந்து வருகிறது என்று சொன்னால் அது மிகவும் பெருமைப்படக்கூடிய விஷயம். இந்த முறையில் கன்யாகுமரி மாவட்டத்தில் நல்ல முறையிலே சர்க்கார் நடத்தி வருகிறார்கள் என்று சொல்வதை நான் வரவேற்கிறேன். கழிந்த காலத்தில் நாங்கள் திரு—கொச்சி ராஜ்யத்தில் இருந்தபோது மருத்துவக் கல்லூரியிலோ அல்லது என்சினியரிங் கல்லூரியிலோ இடம் வேண்டுமென்று சொன்னால் கங்கையைக் கொண்டு வருவது போல்தான் இருந்தது. நமது மாகாண சர்க்கார், காங்கிரஸ் சர்க்கார் விசேஷ கவனம் செலுத்தி எங்களை நல்ல முறையிலே ஆதரித்து பொறியியல், மருத்தவக் கல்லூரிகளிலேயும் எம்.ஏ., எம்.எஸ்.ஸி படிப்பதற்கான வசதிகளையும் செய்து கொடுத்திருக்கிறார்கள் என்பதை உண்மையாக நான் இந்த மாவட்டப் பிரதிநிதி என்ற முறையிலே பெருமையுடன் பாராட்டுகிறேன்.

நாங்கள் இந்தக் கழிந்த காலத்தில் இருந்து இந்த ராஜ்யத்துடன் சேர்ந்து ஏறத் தாழ 4½ ஆண்டுகள் ஆகிவிட்டன. இங்குள்ள ஆசிரியர்கள் நல்ல முறையிலே நடத்தப்படவில்லை என்று நாங்கள் சொல்லவில்லை. இருந்தாலும் சர்க்காருடைய கழிந்த கால உத்தரவுகள் பலர் மனதிற்கு வேதனை தரக்கூடியதாக இருக்கின்றன. இப்போது சர்க்கார் உத்தரவிலே எஸ்.எஸ்.எல்.ஸி. படித்தோ அல்லது மலையாளம் ஹையரோ அல்லது தமிழ் ஹையரோ படித்து அதற்குப் பிறகு டீச்சர்கள் ஒரு வருஷம் டிரெயினிங் இருந்தால் அவர்களை மிடில் ஸ்கூலிலே ஆசிரியராக நியமிக்கப்பட இருந்தார்கள். ஆனால் இப்போது வந்த உத்தரவின் பிரகாரம் இம்மாதிரி ஆசிரியர்கள் 10 வருஷம் அனுபவம் பெற்றிருந்தாலும்கூட எஸ்.எஸ். எல்.ஸி. பாஸ் பண்ணி விட்டு இரண்டு வருஷங்களாவது டிரெனியிங் பெற்றிருக்க வேண்டுமென்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. உண்மையிலே இது வருத்தப்படவேண்டிய விஷயம். இந்த உத்தரவை எங்கள் மாவட்டத்தில் அமுல் நடத்த வேண்டாமென்று நமது கல்வி அமைச்சரையும் கல்வி அதிகாரியையும் கேட்டுக் கொள்ளுகிறேன். இனிமேல் வரக்கூடியவர்களுக்கு இம்மாதிரி எஸ்.எஸ். எல்.ஸி. பாஸ் செய்துவிட்டு வரக்கூடியவர்களுக்கு வேண்டுமென்றால் இரண்டு வருஷம் டிரெயினிங் என்ற முறையைக் கையாளலாம். இதைத் தவிர இந்த உத்திரவானது ஸ்டேட் ரிஆர்கனைசேஷன் ஆக்ட்க்கும், அரசியல் நிர்ணயச் சட்டத்திற்கும் மிக முரண்பாடாக இருக்குமென்று நான் நம்புகிறேன்.

இதைத்தவிர நமது கனம் கல்வி அமைச்சர் அவர்கள் மேடையிலே ரொம்பவும் அழகாகச் சொல்வதை நாம் கேட்டிருக்கிறோம். ஆசிரியர்கள் நிலைமை உயர்ந்தால்தான் நாடு வளம் பெறும். நாடு வளம் பெற்றால் தான் நாட்டிலுள்ள மக்கள் சுபிட்சமாக வாழ முடியும் என்று அவர்கள் சொல்லியிருக்கிறார்கள். ஆகவே அந்தந்த மாவட்டத்தில் அந்தந்தத் திட்டத்தை மிகவும் நல்ல முறையிலே நடத்தி வருவதற்கு முக்கிய காரணம் ஸ்ரீமான் சுந்தர வடிவேலு என்று சொல்ல விரும்புகிறேன். இதைத் தவிர எங்கள் மாவட்டத்தில் உள்ள சில குறைகளைச் சொல்ல விரும்புகிறேன். எங்கள் மாவட்டத்திலே டி.இ.ஓ.-வாக இருக்கிறவர் என்ன நினைக்கிறார் என்றால் அவர்களேதான் கல்வி இலாக்கா டைரக்டர் என்று. இந்த ராஜ்யத்தில் கல்வி இலாகா டைரக்டர் இருக்கிறாரோ இல்லையோ என்று சந்தேகப்படும் படியாக நடந்து கொள்கிறார். குறிப்பாக மக்களின் பிரதிநிதியாக அவர்களிடம் சென்று சில விஷயங்கள் செய்யப்படவில்லை என்று சொன்னால் அவர்களுக்குக் கோபம் வருகிறது. தனக்கு என்ன தோன்றுகிறதோ அதைத்தான் செய்வார். மக்களுடைய ஆட்சி நடக்கிறது என்று கூடப் புரிந்து கொள்ள முடியவில்லை. இம்மாதிரி அவர்களுடைய போக்கு

22nd March 1961] [Sri A. Chidambaranatha Nadar]

சென்றால் அது மக்களுடைய நன்மைக்கு ஆபத்தாக முடியும். நான் அதைப் பற்றிப் பேசும்போது என்னுடைய அன்பர் ஸ்ரீ சட்டநாதர் சிரிக்கிறார். அவர்களுக்கு நன்றாகத் தெரியும் இந்த விஷயம். எங்கள் மாவட்டம் திரு—கொச்சி இருந்த காலம் தொட்டு அவர்களுக்குத் தெரியும். டிரெயினிங் படிப்பிற்கு சில ஆட்களை எடுத்தார்கள். அது பொது மக்கள் வரவேற்கும் நிலையில் இல்லை. அதில் நான் கீழே குறிப்பிடும் பெண் ஒருத்தி இவருக்கு முளகுமேடு பள்ளியில் அனுமதிக்கப்பட்டாள். ஆனால் அந்தப் பெண் சில தினங்கள் கழிந்து எனக்கு சுகம் இல்லை சற்று சூடான இடத்திற்கு நாகர் கோயிலுக்கு அனுப்பி விடுங்கள் என்று கேட்டாள். இதற்கு அவர்கள் சொன்னார்கள் உங்கள் தலைமை ஆசிரியருக்கு ஒரு மனுப் போடுங்கள். என்னிடம் வந்ததும் பார்க்கிறேன் என்று சொன்னார்கள். இம்மாதிரி அந்தப் பெண் தலைமை ஆசிரியருக்கு ஒரு மனு போட்டாள். அந்த மனு தள்ளுபடி செய்யப்பட்டு அவளையும் பள்ளியிலிருந்து நீக்கி விட்டார்கள். ஆனால் இதை அறிந்த சர்க்கார் இடமளிக்க உத்தரவிட்டார்கள்.

இதைப் பற்றி கனம் அமைச்சர் அவர்களுக்கும் கல்வி இலாகா டைரக்டருக்கும் தெரிவித்ததுண்டு. இதைத் தவிர அங்கு ஷிப்ட் சிஸ்டம் இருந்தது மாற்றப்பட்டது. இதை நான் வரவேற்கிறேன்.

மாற்றப்பட்ட ஷிப்ட் சிஸ்டத்தை வெற்றிகரமாக நடத்த வேண்டுமென்றால் சிவன் பிள்ளை இருந்தால் நடத்த முடியும் என்று நினைப்பது கண்டு வருத்தப்படுகிறேன். நம் மா நிலத்தில் எவ்வளவு பேர்கள் பி.எ., எல்.டி. எம்.எ., எல்.டி. படித்த கெட்டிக்காரர்கள் இருக்கிறார்கள். அவர்கள் வந்தாலும் போதும். அவர்கள் வந்தால் அதை வெற்றிகரமாக நடத்துவார்கள் என்ற நம்பிக்கை எனக்கும் உண்டு. இந்த நாட்டிலுள்ள அத்தனை பேர்களுக்கும் உண்டு. குறிப்பாக என் மாவட்டத்தைச் சேர்ந்த மக்களுக்கு அந்த நம்பிக்கை உண்டு. நல்லெண்ணத்தோடு சொல்கிறேன். நம் நாடு நல்ல முறையில் வளர்கிறது, நடக்கிறது. சென்னை ராஜ்யத்தைப் பார்த்துப் படி என்று அடுத்த மாகாணங்களில் உள்ளவர்கள் சொல்கிறார்கள். இதைக் கேட்கும்போது நம் மாகாணத்தைச் சார்ந்தவர்கள், விசேஷமாக காங்கிரஸ் கட்சியில் இருக்கக்கூடிய அத்தனை ஜனப் பிரதிநிதிகளும் இதைக் கேட்டுப் பெருமைப் படுகிறார்கள். இப்படிப்பட்ட நிலையில் இப்படிப்பட்ட அதிகாரிகளை வைத்து நிர்வாகம் நடத்துவது அவ்வளவு உசிதமில்லை என்று சொல்லிக் கொண்டு எனக்குப் பேசுவதற்கு இவ்வளவு நேரம் அளித்த என் கட்சிக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொண்டு முடித்துக் கொள்கிறேன்.

**Sri M. KARUNANITHI**: சட்டமன்றத் துணைத் தலைவர் அவர்களே, கல்வி மான்யத்தின் மீது தரப்பட்டுள்ள வெட்டுப் பிரேரணையை ஆதரித்து நான் என்னுடைய கருத்துக்களை இங்கு தெரிவிக்க விரும்புகிறேன். இந்தியாவிலே ஆரம்பப் பள்ளிகளில் குழந்தைகளுக்காகத் தயாரிக்கப்படும் பாடப் புத்தகங்களின் தரம் பெரும்பாலும் மோசமானதாக இருக்கிறது, உள்ளடக்கம், அச்சு, அமைப்பு எல்லாமே மிகவும் மோசம் என்று நான் சொல்லவில்லை. டிஸம்பர் மாதம் 28-ம் தேதி கான்பூரில் நடைபெற்ற அகில இந்தியக் கல்வி மகாநாட்டிற்குத் தலைமை வகித்த நமது கல்வி அமைச்சர் திரு. சுப்ரமணியம் அவர்கள் எடுத்துக் காட்டியிருப்பதை நான் இங்கு சுட்டிக்காட்ட விரும்புகிறேன். கல்வியின் தரம் குறைந்திருப்பதற்குக் காரணம் ஆரம்பப் பள்ளிப் புத்தகங்களின் அமைப்பும், உள்ளடக்கம் என்று சொல்லப்படுகிற பொருள் அடக்கமும் கூடத் தரக் குறைவானதாக இருக்கிறது என்பதை அம் மகாநாட்டில் நமது கனம் அமைச்சர் அவர்கள் சொன்னதோடு அல்லாமல் அதைத் திருத்துவதற்கு தக்க வழிவகைகளைக் காணவேண்டுமென்று நான் இந்த நேரத்தில் எடுத்துக் கூற விரும்புகிறேன். கல்வியின் தரம் குறைவாக இருப்பதற்குப் பல காரணங்கள் உள்ளன. ஆசிரியர்களின் வாழ்க்கை நிலை சரியான அளவிற்கு உயர்த்தப்பாடாதது ஒரு காரணம். கல்வித்தரம் உயர வேண்டுமென்றால் ஆசிரியர்களின் வாழ்க்கைத் தரம் உயர்ந்தாக வேண்டும். ஆசிரியர்களின் சம்பளத்தை அதிகமாக உயர்த்தியிருக்கிறோம் என்ற காரணத்தினால் மட்டும் அவர்கள்

[Sri M. Karunanithi] [22nd March 1961

வாழ்க்கைத் தரத்தை உயர்த்தியாகி விட்டது என்பதற்கு ஒரு சான்றுகக் காட்டுவார்களேயானுல், அதற்கு நான் அல்ல, டெல்லி பாராளு மன்றத்தில் மத்திய அரசின் கல்வி அமைச்சராக இருக்கும் ஸ்ரீ ஸ்ரீமாலி அவர்கள் ஆசிரியர்களுக்குக் கொடுத்துள்ள சம்பள உயர்வு, தற்போது ஏற்பட்டிருக்கும் பண்டங்களின் விலைவாசி உயர்வால் பயன்படாமல்போய் விட்டதென்று அண்மையில் குறிப்பிட்டுக் காட்டியிருப்பதை இங்கு தெரிவிக்க நான் கடமைப் பட்டிருக்கிறேன். ஆசிரியர்களால் எப்படி மாணவர்களுக்கு நிம்மதியாகப் பயிற்சி அளிக்க முடியும் என்பதை நாம் சற்று சிந்தித்துப் பார்க்க வேண்டும். பால் சாப்பிடுவது உடம்பிற்கு நல்லதென்று பள்ளிகளில் போதித்து விட்டு வீட்டிற்குச் செல்கிற ஆசிரியர் தன் குழந்தை குட்டிகளுக்குப் பால் வாங்கித்தர வக்கற்ற நிலையில், வழியற்ற நிலையில், வாடிக்கொண்டிருக்கிருர்கள் என்ருல் பள்ளிக்கூடத்தில் கரும்பலகையில் பால்காரி என்று எழுதிக் காட்டி, "பா, ல் ; கா, ரி," என்று எழுதிக் காட்டி மாணவர்களுக்குப் பாடம் போதிக்கின்ற நேரத்தில் திரும்பி வீட்டிற்கு செல்லும்போது பால்காரி பழைய கடனைக் கேட்க காத்திருப்பாளே என்ற நினைவு அவர் உள்ளத்தில் தோன்று மாளுல் அவர் போதிக்கும் பாடம் அத்துடன் தடைபட்டுப் போகும் என்பதை நாம் மறந்து விடுவதற்கில்லை. இன்றையதினம் ஆசிரியர்களுக்குத் தரப்படு கிற வேலை, மாணவர்களுக்குப் பயிற்சி அளிப்பது என்பது மட்டுமல்ல, இன்று ஆசிரியர்களுக்குப் பல பல வேலைகளை அரசினர் தந்திருக்கிருர்கள். சென்சஸ் எடுப்பது ஆசிரியர்களின் வேலையாக இன்றையதினம் தரப்பட்டிருக் கிறது. வாக்காளர் பட்டியல் சேகரிப்பது ஆசிரியரின் வேலையாகத் தரப் பட்டிருக்கிறது, டி.பி. ஸீல் விற்பனை செய்வது அவர்களது வேலையாகத் தரப்பட்டிருக்கிறது, கொடி விற்பனை செய்ய வேண்டியது அவர்களது வேலையாகத் தரப்பட்டிருக்கிறது. சிலவிடங்களில் பரிசுப் பத்திரங்கள் விற்க வேண்டிய நிலையும் இருக்கிறது, ஆசிரியர்களுக்கு. பள்ளிக்கூடச் சீரமைப் பிற்கு வேண்டிய சாமான்கள் சேகரிப்பது போன்ற இக்கட்டான நிலையில் இருக்கிருர்கள் ஆசிரியர்கள். மதிய உணவுத் திட்டத்திற்குப் பொருள் பெறும் காரியத்தையும் அவர்கள் செய்ய வேண்டியிருக்கிறது. நான் இந்தக் காரியங்கள் வேண்டாமென்று கூறவில்லை. மதிய உண்வு அளிப்பதும் பள்ளிச் சீரமைப்பும் அத்தியாவசியமானவை என்பதை நான் உணர்ந்திருந் தாலும் அவைகளுக்காக நேரத்தை செலவிடும் ஆசிரியர்கள், பள்ளியில் பாடம் போதிக்கும் நேரத்தை கொள்ளை கொண்டு இப்படிப்பட்ட காரியங்களில் ஈடுபடவேண்டியவர்களாயிருக்கிருர்கள் என்பதை இங்கு சுட்டிக் காட்ட விரும்புகிறேன். இந்த எழெட்டு வேலைகளை ஆசிரியர்கள் பார்க்கும் போது, அவர்களுக்கு அதற்காகத் தனிச் சலுகைகள் தரப்பட்டாலும் கூட, தரப்படவில்லை என்று எனக்குத் தெரியும், அப்படித் தரப்பட்டாலும் கூட இந்த வேலைகளைச் செய்து கொண்டு பள்ளிகளில் கல்வித் தரத்தை உயர்த்த அவர்களால் இயலுமா என்பதை மதிப்பிற்குரிய கல்வி அமைச்சர் அவர்கள் சற்று சிந்தித்துப் பார்க்க வேண்டுமென்று நான் பணிவன்புடன் கேட்டுக்கொள்கிறேன். ஆசிரியர்களுக்குப் பல இடங்களில் எப்படி போலீஸ் காரர்களுக்கு வீடுகள் கட்டுத் தரப்படுகிறதோ அதே போன்று ஆசிரியர்கள் கிராமங்களில் குடியேறி குடியிருப்பதற்கு வீடில்லாமல் தவிக்கும் நிலையில் அவர்கள் இன்று இருப்பதால் கிராமங்களில் ஆசிரியர்களுக்கு வீடு கட்டித் தருகிற திட்டத்தை இந்தச் சர்க்கார் செய்து தரவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். பள்ளிகளின் கல்வித் தரம் உயர பாடப் புத்தகங்கள் எவ்வளவு முக்கியமானதோ அதேபோல் ஆசிரியர்களின் நிலையும் உயர்வது அவசியம். அதே போன்று பள்ளி நிர்வாகமும் ஒரு முக்கிய பொறுப் பாகும். பஞ்சாயத்து யூனியன் கௌன்சில் உரையில் நமது கல்வி யமைச்சர் அவர்கள் இந்த மாமன்றத்தில் கூறியதாக எனக்கு நினைவு, மாவட்டக் கழக உயர்தர ஆரம்பப் பள்ளிகளை பஞ்சாயத்து யூனியன் நிர்வாகத்தில் விட்டு விட்டு, மாவட்டக் கழக உயர்நிலைப் பள்ளிகளை சர்க்காரே எடுத்துக் கொள்வது என்று முடிவு செய்திருப்பதாகவும் உயர் நிலைப் பள்ளிகளை சர்க்கார் நிர்வாகத்தில் நேரிடையாகக்கொண்டு வருவது சர்க்கார் திட்டம் என்று கனம் அமைச்சரவர்கள் கூறியிருப்பதாகக் கருது கிறேன். ஆனல் அது எப்படி செயல்படுகிறது என்ருல் அதற்கு ஒரு உதாரணம் கூறவிரும்புகிறேன். தஞ்சை மாவட்டத்தில் திருவாரூர் கழக உயர்நிலைப் பள்ளியை, நான் கேள்விப்பட்டேன், திருவாரூரிலுள்ள ஒரு திடீர் காங்கிரஸ் காரா, ஒரு பணக்காரருக்கு அந்தப் பள்ளியைத் தனிப்பட்ட முறையில் மாற்றித்

22nd March 1961] [Sri M. Karunanithi]

தருவதற்கான முயற்சிகள் வெகு வேகமாக நடைபெற்றுக்கொண்டிருக்கின்றன. திருவாரூர் பொது மக்களும், சர்வ கட்சிக்காரர்களும் அந்த முறை கூடாது, அந்தப் பள்ளியை மாவட்டக் கழக நிலையிலிருந்து தனிப்பட்ட ஒருவரின் உரிமையாக மாற்றக் கூடாது என்றும், அவர் நில உச்ச வரம்பிலிருந்து தப்பித்துக் கொள்ள இக் காரியத்தை மேற்கொள்கிறார் என்றும் திருவாரூர் மக்கள் குரல் எழுப்புகிறார்கள். அதற்கிடையில்கூட அந்தப் பள்ளியைத் தனியார் நிர்வாகத்தில் விடுவதற்கான வேலைகள் மிகத் துரிதமாக நடைபெற்றுக் கொண்டிருப்பதை நான் இங்கு ஞாபக மூட்ட விரும்புகிறேன். ஒரு காங்கிரஸ்காரருக்குக் கொடுக்கக் கூடாது என்று நான் கருதுவதாக கனம் அமைச்சர் அவர்கள் எண்ணினால் திருவாரூரில் நடைபெற்றுக் கொண்டிருக்கிற நகராண்மைக் கழகம் காங்கிரஸ் கட்சியின் தலைமையில்தான் நடைபெறுகிறது, அந்தக் கழகம் வழி இந்தப் பள்ளி இயங்குவதற்குஆவன செய்ய வேண்டும். அடுத்து, கல்லூரிகளில் மாணவர்கள் எந்த அளவு சங்கடப்படுகிறார்கள் என்பது குறித்து கான்பூரில் பேசிய கனம் அமைச்சர் அவர்கள் தெளிவாக எடுத்துக் காட்டியிருக்கிறார்கள். இன்டர்மீடியேட் வகுப்பை ஒழித்தது எவ்வளவு தவறானது என்று அவர் அங்கு சுட்டிக் காட்டி இருக்கிறார்கள். நாமும் உணர்கிறோம். செகண்டரி பள்ளிகளில் பிரதேச மொழியில் பாடங்கள் கற்பித்தால் அவர்கள் ப்ரீ யூனிவர்ஸிட்டிக்கு போகும் போது அவர்கள் எல்லாப் பாடங்களையும் ஆங்கிலத்தில் படிக்க வேண்டியிருக்கிறது, என்று குறிப்பிட்டிருக்கிறார்கள். திடீரென்று ஏற்படும் மாறுதல் காரணமாக மாணவர்கள் தங்களை ஒரு ஆண்டில் சரிப்படுத்திக் கொள்ள முடியவில்லை. ஆகவே ப்ரீ யூனிவர்ஸிட்டியை எடுத்து விட்டு அதற்குப் பதிலாக உயர்தர செகன்டரிப் பள்ளி, 11-வது வகுப்பு ஏற்படுத்திய பிறகு மற்றொரு சிரமமும் ஏற்படுமென்று கூறியிருக்கிறார்கள். 11-வது வகுப்புவரை பிரதேச மொழியில் கற்கும் மாணவர்கள் பட்டப் படிப்பிற்குச் செல்கிறபோது அங்கு ஆங்கிலத்தில் படிக்க வேண்டியிருப்பதால் சர்வகலாசாலையின் தரம் பாதிக்கப்படும். தொழில் நுட்பப் படிப்பிற்காகச் செல்லக்கூடிய மாணவர்களுக்குப் பல தொல்லைகள் ஏற்படுமென்றும் கூறியிருக்கிறார்கள். இந்த நிலைமை மாற்றுவதற்கு கனம அமைச்சர் அவர்கள் என்ன வழி செய்யப் போகிறார்கள் ? கல்லூரிகளில் பிரதேச மொழியைத் தொடர்ந்து வைக்கப் போகிறார்களா, கோவையில் செய்திருப்பதைப் போன்று சென்னை கல்லூரிகளிலும் அத்தகைய முறையைப் புகுத்துவதற்கு வேண்டிய முயற்சிகள் ஈடுபடப்போகிறார்களா அல்லது 11-வது வகுப்பில் எல்லாப் பாடங்களையும் ஆங்கிலத்தில் போதிப்பது பற்றி ஆராயப் போகிறார்களா, இப்பொழுதுள்ள நிலையில் அது இல்லை என்பது நிரூபிக்கப்பட்டு விட்டது. ஆகவே, இது பற்றியதொரு விளக்கத்தை கனம் அமைச்சர் அவர்கள் தரவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

குறிப்பாக இந்த ஆண்டு எஸ்.எஸ்.எல்.ஸி. தேர்வு (பிரைவேட் 10-30 a.m.
காண்டிடேட்) தனிப்பட்ட முறையில் பரீட்சை எழுதுகின்றவர்கள் தங்கள் ஊரின் அருகாமையில் இருக்கின்ற சென்டர்களைக் கேட்கின்றார்கள். நாகையில் இருக்கின்ற ஒரு மாணவன் அதன் அருகாமையில் இருக்கின்ற ஒரு சென்டரை குறிப்பிட்டுக் கேட்டிருந்தும்கூட, அந்த சென்டர் கொடுக்கப்படாமல், தொலைவிலுள்ள கடலூர் சென்டருக்கு அனுமதி கொடுக்கிறார்கள். இதனால் அந்த மாணவர்களுக்குப் பல தொல்லைகள் ஏற்படுகின்றன. இந்த நிலைமைகளை எல்லாம் அடுத்த ஆண்டிலாவது அகற்றுவதற்கு சர்க்கார் ஆவன செய்ய வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். குறிப்பாக மாணவர்கள் அரசியலில் பங்கு பெறலாமா என்பதைப்பற்றி இந்த மாமன்றத்தில் பல முறைகள் விவாதிக்கப்பட்டிருக்கிறது. அதோடு சர்வகட்சிகள் ஒன்று சேர்ந்து இதன் மீது எடுத்த முடிவு என்னவாயிற்று ? அந்த முடிவை யார் மீறினார்கள் ? மாணவர்கள் மகாநாடுகளில் திராவிட முன்னேற்றக் கழகத் தலைவர்களோ அல்லது திராவிட முன்னேற்றக் கழகச் சொற்பொழிவாளர்களோ கலந்து கொண்டு இந்த முடிவை மீறினார்களா ? அல்லது காங்கிரஸ் தலைவர்களோ அல்லது காங்கிரஸ் அமைச்சர்களோ இம்மாதிரியான மகாநாடுகளில் நாம் எடுத்த முடிவை மீறி கலந்து கொண்டார்களா? என்பதைப்பற்றி சற்று யோசித்துப் பார்க்க வேண்டும் என்று கேட்டுக்கொண்டு என் உரையை முடித்துக் கொள்கிறேன், வணக்கம்.

[22nd March 1961

**Sri A. VEDARATHNAM:** கனம் துணைத் தலைவர் அவர்களே, இங்கு கொண்டு வரப்பட்டிருக்கும் கல்வி மான்யத்தைப் பாராட்டும் முகத்தாலும் அதை வரவேற்கும் முகத்தாலும் சில வார்த்தைகளைக் கூற விரும்புகிறேன். கல்வி இலாகா ஆற்றி வருகின்ற பல பணிகளைப் பற்றி நம்முடைய மாநிலத்திலுள்ளவர்கள் மட்டுமல்ல,—நான் வரவு செலவுத் திட்ட விவாதத்தில் குறிப்பிட்டதுபோல் நம்மிடமிருந்து பிரிந்து போன பாகிஸ்தான், ஐ.நா. ஸ்தாபனம், யுனெஸ்கோ போன்ற இடங்களில் எல்லாம் கல்வித் துறையில் நமது தமிழகம் முன்னேறி வந்திருப்பதைப் பற்றிப் புகழ்ந்து வருகிறார்கள் என்றால், இதைவிட நமது இலாகாவுக்கு வேறு புகழ் இருக்கிறது என்று சான்று கூற வேண்டிய அவசியமே இல்லை. நம்முடைய மாகாணத்தில் கல்வி முன்னேற்றம் எந்த முறையில் வளர்ந்தது என்பதைப்பற்றி அகில இந்திய ரீதியில் எப்படியிருக்கிறது என்பதற்குச் சான்று வேண்டுமென்றால் சமீபத்தில் அகில இந்திய ரீதியில் கொடுக்கப்படும் பத்மஸ்ரீ என்ற பட்டம் நமது கல்வி இலாகா இயக்குநர் அவர்களுக்குக் கொடுத்திருப்பதையே எடுத்துக்கொள்ளலாம். அவர்களுக்குக் கிடைத்திருக்கும் இந்த பத்மஸ்ரீ என்ற பட்டம் அவர்களுக்கு மட்டும் கிடைத்திருக்கும் சிறப்பல்ல, இந்த இலாகாவில் பணியாற்றக் கூடிய எல்லா ஆசிரியர்களுக்கும், இதில் பணியாற்றுகிற எல்லாத் தொண்டர்களுக்கும் குறிப்பாக இந்த மாநிலத்திற்கே கிடைத்திருக்கும் சிறப்பாகும். இதைப் பற்றி நாம் எல்லோருமே மகிழ்ச்சியடைய முடியும்.

**Sri A. V. P. ASAITHAMBI:** பத்மஸ்ரீ என்றால் அர்த்தமென்ன என்பதைச் சொல்ல முடியுமா ?

**Sri A. VEDARATHNAM:** அர்த்தம் தெரியவில்லை என்றால், அகராதியைப் புரட்டிப் பார்த்தால் தெரியும், வேறு எங்கும் போகவேண்டியதில்லை. நமது லைப்ரரியிலேயே இருக்கிறது, போய்ப் பார்த்துக் கொள்ளலாம். (குறுக்கிடு) நான் போய் பார்க்க வேண்டியதில்லை, அவர்களே அந்தக் கைங்கரியத்தைச் செய்து கொள்ளலாம். அடுத்தபடியாக, ஆசிரியர்களுடைய சம்பள விகிதத்தைப்பற்றி, எங்கள் ஜில்லாவாசியாக இருந்தாலும், திருச்சி ஜில்லாவை, பிரதிநிதித்துவம் வகிக்கக் கூடிய கனம் அங்கத்தினர் அவர்கள் சொன்னார்கள். பல வசதிகள் ஆசிரியர்களுக்குச் செய்து கொடுத்திருந்தும், இப்போதும் அதில் குறைகள் இருக்கின்றன என்று இப்படிச் சொல்வது கேலிக்கு இடமான விஷயம் என்றுதான் நம்மால் சொல்ல முடியும். பே கமிஷன் திட்டத்தை இன்றைக்கு முற்றிலும் அப்படியே எடுத்துக் கொண்ட மாகாணம் அகில இந்திய ரீதியில் ஒரு மாகாணம் உண்டு என்று சொன்னால் அது நம்முடைய தமிழகம்தான் என்பதை நான் எடுத்துக் காட்ட விரும்புகிறேன். நேற்றுக்கூட பார்லிமெண்டில் மத்திய மந்திரி ஸ்ரீ ஸ்ரீமாலி அவர்கள் குறிப்பிட்டிருக்கிறார்கள், பே கமிஷன் திட்டத்தை அப்படியே ஒப்புக்கொண்ட மாகாணம் நமது மாகாணம்தான் என்பது மட்டுமல்ல, ஆசிரியர்களுக்குப் பென்ஷன் திட்டம், இன்ஷூரன்ஸ் திட்டம், பிராவிடண்ட் பண்ட் திட்டம் போன்ற அனைத்தையும் ஏற்றுக் கொண்டுள்ள மாகாணம் நமது மாகாணம் என்று டாக்டர் ஸ்ரீமாலி அவர்கள் குறிப்பிட்டிருக்கிறார்கள் என்று சொன்னால் ஆசிரியர்களுடைய விஷயத்தில் மற்றவர்கள் பொறாமைப்படக்கூடிய அளவில் நம்முடைய மாநிலம் இருக்கிறது. அந்த அளவுக்கு நம்முடைய மாகாணம் முன்னேறியிருக்கிறது என்பதில் யாருக்கும் சந்தேகம் இருக்க முடியாது. குறை கூறுவதற்கு என்று வேண்டுமானால் எதையாவது சொல்லிக் கொண்டிருக்கலாம். அவ்விதம் செய்கின்ற கைங்கரியமானது சரியானது என்று சொல்ல முடியாது. அந்த அளவுக்குப் பல நன்மைகளை செய்திருக்கிறது நம்முடைய சர்க்கார். சீமைக்கு நமது கல்வி அமைச்சர் போயிருந்த காலத்தில் இங்கிலாந்து நாட்டிலுள்ளவர்கள் நமது கல்வி முன்னேற்றத்தைப் பற்றி நமது அமைச்சர் அவர்களிடத்தில் பாராட்டியிருக்கிறார்கள். எதிர்காலத்தில் நல்ல மாணவர்களைத் தோற்றுவிக்கக்கூடிய ஒரு இலாகாவாக இருக்கின்ற இந்த இலாகாவில் இருந்த பல குறைகளையும் இன்றைக்கு நிவர்த்தி செய்திருக்கிறார்கள். நம்மைவிட்டுப் பிரிந்து போன ஆந்திரா போன்ற மாகாணங்களில்கூட பே கமிஷன் கொடுத்த ரிப்போர்ட்டை இதுவரை திருப்பிக்கூடப் பார்க்காமல் இருந்து கொண்டிருக்கிறார்கள்.

22nd March 1961] [Sri A. Vedarathnam]

ஆந்திரா மாகாணத்திலுள்ள அசெம்பிளி அங்கத்தினர் ஒருவரைக் கண்ட போது அவர்கள்கூடத் தெரிவித்தார்கள், பே கமிஷன் ரிப்போர்ட்டை அப் படியே ஏற்றுக்கொள்ள முடியாமல் இருக்கிறது, சென்னை சர்க்கார்தான் அப்படியே ஏற்றுக் கொண்டிருக்கிறது என்று அவர்களே சொன்னார்கள் என்றால் இதில் குறை சொல்வதற்கு இடமே யில்லை என்று சொல்லலாம். மாணவர்களிடத்தில் அரசியல் கட்சி போய் பிரசாரம் செய்யக்கூடாது என்கின்ற கருத்தை அகில இந்தியாவுக்கே நாம்தான் தெரிவித்தோம். அகில இந்தியாவுக்கே நாம் வழிகாட்டியாக இருந்தோம். சர்வ கட்சி களும் சேர்ந்து இதில் ஒரு முடிவுக்கு வர ஒத்துக் கொண்டார்கள். எல்லா அரசியல் தலைமைகளும் ஒப்புக்கொண்டது. ஆனால் ஒரே ஒரு கட்சி மட்டும், தங்களுடைய தலைமை இங்கு இல்லை என்றும், அந்தத் தலைமை இதை ஒப்புக் கொள்ளவில்லை என்றும் தெரிவித்தார்கள். எல்லோராலும் ஒப்புக் கொண்ட ஒரு முடிவை ஒரு கட்சித் தலைமை மட்டும் அங்கீகரிக்கவில்லை என்ற காரணத்திற்காகத்தான் இதுவரை அது அமல் நடத்தப்படாமல் இருக்கிறது என்று என் முன்னால் பேசிய என்னுடைய நண்பர் அவர் களுக்குத் தெரிவித்துக் கொள்கிறேன். கனம் நிதி அமைச்சர் அவர்களுக்கு நான் ஒரு வேண்டுகோள் விடுகிறேன், இந்த மாநிலத்திலுள்ள எல்லா அரசி யல் கட்சிகளும் ஒத்துக்கொண்ட ஒரு முடிவை ஒரு கட்சியினுடைய தலைமை பீடம் மட்டும் அங்கீகரிக்கவில்லை என்ற காரணத்திற்காக இவ்வளவு முக்கியமான ஒரு தீர்மானத்தை, அகில இந்தியாவிலும் போற்றக் கூடிய ஒரு தீர்மானத்தைக் கைவிட வேண்டியதில்லை என்று கேட்டுக் கொள்கிறேன். நம்முடைய மாகாணம் சம்பந்தப்பட்ட வரையில் இதை உடனடியாக அமலுக்குக் கொண்டு வர வேண்டியது மிக மிக அவசியம் என்பதை நான் கனம் அமைச்சர் அவர்களுக்குத் தெரிவித்துக் கொள்கிறேன்.

மேலும் நமது மாகாணத்தில் கல்வி எந்த அளவுக்கு முன்னேறி இருக்கிறது என்பதற்கு ஏராளமான புள்ளி விவரங்கள் கொடுக்கப்பட் டிருக்கின்றன. பத்து வருட காலத்திற்குள் 14 ஆயிரம் மாணவர்களாக இருந்தவர்கள் இப்போது 26 ஆயிரம் மாணவர்களாகப் பெருகியிருக் கிறார்கள். அதோடு பள்ளிக்குச் செல்லக்கூடியவர்கள் 45 சத விகிதத்தின ராய் இருந்தது, இப்போது 75 சத விகிதமாய் உயர்ந்திருக்கிறது. இது ஒரு பெரிய ஆச்சரியமாய (Miracle) சேவை என்றுதான் சொல்ல முடியும். அந்த அளவுக்குத் திறமையாக சேவை செய்து வருகிறார்கள். கல்வித் துறையில் நமது மாகாணம் அதிவேகமாக, மனதில் நாம் எண்ணுவதை விட வேகமாக முன்னேறி வருகிறது என்கிற விஷயத்தை நான் குறிப்பிட விரும்புகிறேன். அதோடு கார்ப்பரேஷனில் நடக்கும் மதிய உணவுத் திட்டத்தைப்பற்றி இங்கு பலர் குறிப்பிட்டார்கள். இங்கே நல்ல முறையில் இந்தத் திட்டம் நடைபெறுவதற்கு அமெரிக்காவிலிருந்து அரிசி கொடுக் கின்றார்கள் என்று சொல்லப்பட்டது. இதோடு இன்னும் இதை நல்ல முறையில் எப்படி நடத்த முடியும் என்பதைப்பற்றி ஆராய ஒரு கமிட்டி நியமிக்கப்பட்டிருக்கிறது. இந்தக் கமிட்டி, இந்த நகரத்தில் இருக்கின்ற பள்ளி மாணவர்களுக்கு மட்டும் பணத்திற்குப் பதிலாக தான்யங்கள் கொடுக்கிறார்கள் என்றால், கிராமப் புறங்களிலுள்ள மாணவர்களுக்கும் ஏன் இவ்விதமே தான்யங்களைக் கொடுத்து உதவக் கூடாது என்பதைப்பற்றி பரிசீலிக்க வேண்டும். கார்ப்பரேஷனில் இருக்கின்ற குழந்தைகள் என்ன புண்ணியம் செய்ததோ, கிராமப் புறங்களில் இருக்கின்ற குழந்தைகள் என்ன பாவம் செய்ததோ தெரியவில்லை. ஆகவே எல்லாக் குழந்தை களுக்கும் இந்த உதவியைச் செய்து கொடுக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். (மணியடிக்கப்பட்டது) குறிப்பாக எனக்கு முன்னால் பேசிய கம்யூனிஸ்டு அங்கத்தினர் சொன்ன ஒரு விஷயத்தை மட்டும் குறிப்பிட்டு விட்டு என் பேச்சை முடித்துக்கொள்கிறேன்.

ஆதாரக் கல்வி பற்றி அவர் பேசினார். இது வரையில் 'இன் டோட்டோ' ஆட்சேபித்து வந்தவர்கள் அதிலும் சில நல்ல அம்சங்கள் இருக்கின்றன என்று சொன்னதானது வசிஷ்டர் வாயால் ஒத்துக்கொண்ட மாதிரி இருக்கிறது. நல்ல அம்சம் என்று அவர் சொன்னதாவது கோ-ரிலேடெட் டீச்சிங்கும் செல்ஃப் ரிலையன்ஸும். ஆதாரக் கல்வியில் எது முக்கிய மானது என்று சொன்னால் சுய தேவைத் திட்டமும் கோ-ரிலேடெட்

[Sri A. Vedarathnam] [22nd March 1961

டீச்சிங்கும் கிராஃப்ட் மீடியமும்தான் என்று ஒத்துக் கொண்டார்கள். இதை மற்ற திட்டத்தோடு இணைக்க வேண்டும் என்று சொன்னார்கள். பாடப் புத்தகத்தை வைத்துக் கொண்டு கோ-ரிலேட் செய்ய முடியாது. இதை சரியாக ஆராய்ந்திருந்தால் இந்த மாதிரி சொல்லியிருக்க மாட்டார்கள். நான் ஒரு விஷயம் கூற விரும்புகிறேன். இப்போது நிறையப் பள்ளிகள் விருத்தியாகின்றன. இப்படி அதிகமாக இந்த சாதாரண பழைய முறை மெக்காலே கல்வித் திட்டம் விருத்தியானால் வேலையில்லாத் திண்டாட்டத்தினால் சர்க்காரையே திணற அடித்து விடும். அதற்காகத் தொழில் பள்ளிகள் ஆரம்பிக்கப்பட வேண்டும். பள்ளிகளெல்லாம் ஆதாரக் கல்விமுறையில் இருக்க வேண்டும். முன்பு போஸ்ட்-பேசிக் பள்ளிகள் 5—6 ஆரம்பிக்கப் போவதாகச் சொன்னார்கள். ஆனால் ஒன்றுதான் ஆரம்பமாகியிருக்கிறது. இதில் கவனம் செலுத்த வேண்டும். நிதி நிலை அறிக்கை சமர்ப்பித்ததானது இந்த நாட்டில் ஒன்றும் இல்லை என்று இன்ஃபீரியாரிட்டி காம்ப்ளெக்ஸோடு இருப்பவர்களுக்கு இது ஒரு பெரிய லிட்ரெச்சராக இருக்கிறது என்று சொல்ல வேண்டும். ஆதாரக் கல்வியைப் பற்றியும் ஒரு சில வார்த்தைகளைக் குறிப்பிட்டிருந்தால் பொன் மலர் மணமும் உடைத்து என்பதற்கு ஒப்பாக ஆகும். உலகத்திலே எந்த நாட்டிலும் இல்லாத கல்வித் திட்டத்தை அண்ணல் காந்தியடிகள் நமக்குக் கொடுத்தார்கள். சுயராஜ்யம் வாங்கியதைவிட முக்கியமானது ஒன்று உண்டு என்றால் அது ஆதாரக் கல்வி என்று கூறியிருக்கிறார். கல்லூரிகளில் தமிழைக் கொண்டு வந்தது இதைக் காட்டிலும் சிறந்த விஷயம். காந்தியடிகள் சொன்ன ஒரு விஷயத்தைப் படித்துக் காட்டி விட்டு என் உரையை முடித்துக் கொள்கிறேன். பயிற்சி மொழி பற்றியது இது. " அந்நிய மொழி (ஆங்கிலம்) பயிற்சி மொழியாக இருப்பது நம் மொழிகளின் வளர்ச்சிக்குத் தடையாக உள்ளது. எனக்கு ஒரு சர்வாதிகாரியின் அதிகாரம் இருக்குமென்றால் நான் இன்றே நம் சிறுவர்கள் அந்நிய மொழி மூலம் கல்வி கற்பதை நிறுத்தி விடுவேன். எல்லா ஆசிரியர்களையும், விரிவுரையாளர்களையும் உடனே தாய்மொழி மூலம் கற்பிக்கும்படி கட்டளை இடுவேன். இம் மாற்றத்தை எதிர்ப்பவர்களை வேலையிலிருந்து நீக்கி விடுவேன். பாடப் புத்தகங்கள் தயாராகும் வரை காத்திருக்க மாட்டேன். பயிற்சி மொழி மாறிய பின் அவை தாமாகவே வந்துவிடும் " என்று கூறுகிறார். இன்னும் இருக்கிறது. இரண்டு தடவைகள் மணி அடித்து விட்டதால் இதோடு நிறுத்திக்கொள்கிறேன். இன்னும் விஞ்ஞான பாடங்களைத் தமிழில் கொண்டுவர முடியாது என்று சொல்லுகிறோம். ஜப்பானில் அனாட்டமி, ஃபிஸியாலஜி புத்தகங்களை எவ்வளவு அழகாக அச்சிட்டு வழங்கியிருக்கிறார்கள். இதற்கெல்லாம் தமிழ் பதங்களை எப்படித் தயாரித்திருக்கிறார்கள் என்பதை நமது அதிகாரிகளும் முக்கியமாக சுகாதார அமைச்சர் அவர்களும் இந்தப் புத்தகத்தைப் பார்க்க வேண்டும். நமது கல்லூரி மாணவர்களுக்கு எவ்வளவு பயனுள்ள புத்தகமாக இருக்கும் என்று பார்க்க வேண்டுமென்று கேட்டுக் கொண்டு இந்த மான்யத்தை முழு மனதோடு ஆதரித்து எனது உரையை முடித்துக் கொள்கிறேன்.

*SRIMATHI KAMALAMBUJAMMAL : கனம் உதவி சபா நாயகர் அவர்களே, கனம் அமைச்சர் அவர்கள் கொண்டு வந்திருக்கும் இந்த மான்யத்தை ஆதரித்துப் பேசும்போது பள்ளி நிர்வாகத்திலே ஏற்படக்கூடிய சில சிக்கல்களை மாத்திரம் எடுத்துக் கூறிக் கொள்ள விரும்புகிறேன்.

இன்றைக்குப் பள்ளிகளில் டீச்சர்-ப்யூப்பில் ரேஷியோ என்று புகுத்தி இருக்கிறோம். முப்பத்தைந்து அல்லது 40 பிள்ளைகளுக்கு ஒரு ஆசிரியர் என்ற முறையில் வைத்து அந்த முறையில் நடைபெற வேண்டும் என்று இன்றைக்கு நாம் ஏற்பாடு செய்திருக்கிறோம். அந்த முறையானது நகரப் புறங்களிலும் முனிஸிபல் ஏரியாக்களிலும் ஓரளவு சரியாக இருக்கும். ஏனென்றால் அங்கே ஒவ்வொரு வகுப்பிலும் 30, 35, 40, 45 மாணவர்கள் வரும் சூழ்நிலை இருக்கிறது. ஆனால் கிராமப்புறங்களுக்கு இந்தத் திட்டத்தை விஸ்தரிப்பதன் மூலமாக நிறையச் சங்கடங்கள் ஏற்படுகின்றன. கிராமப்புறங்களில் ஒரு வகுப்பிலே 30 அல்லது 35 மாணவர்களைக் காண முடியாது குறைந்த அளவில்தான் இருப்பார்கள். முதலாவது, 2-வது வகுப்புகளில் வேண்டுமானால், 30 பிள்ளைகள் ஏறக்குறைய வரலாம்.

22nd March 1961] [Srimathi Kamalambujammal]

ஆனால் மேலே போகப் போக குறைந்து கொண்டு போகிறது. அப்படிக் குறைந்து போகும் காரணத்தினால் இரண்டு மூன்று வகுப்புகளை ஒன்றாகச் சேர்த்தால்தான் 30 அல்லது 35 குழந்தைகள் வரக்கூடிய சூழ்நிலை இருக்கிறது. இப்படி மூன்று வகுப்புகளுக்கு ஒரே ஆசிரியர் இருந்து பாடங்களை நடத்த வேண்டுமென்ற நிர்ப்பந்தம் ஏற்படுகிறது. அந்த முறையில் பார்க்கப் போனால் மூன்று வகுப்புகளுக்கும் பாடத் திட்டங்களில் வித்தியாசம் இருக்கிறது. ஒவ்வொரு வகுப்புக்கும் தனிப்பட்ட ஸிலபஸ் இருக்கிறது. ஒவ்வொரு வகுப்புக்கும் உள்ள ஸிலபஸ்ஸை ஆசிரியர் முடிக்க வேண்டுமானால், மூன்று வகுப்புகளை ஒன்றாகச் சேர்த்து வைத்து பாடங்களை நடத்துவதால் நல்ல முறையில் முடிக்க முடியாது. நல்ல தரமான கல்வி கொடுக்க முடியும் என்ற நம்பிக்கை இருக்க முடியாது. இதைச் செய்வதிலே நிதி நிலைமை நமக்குக் கட்டுபடியாக இல்லை என்று நான் அறிகிறேன். இருந்தாலும் ஓரளவுக்குக் கிராமப்புறங்கள் விஷயத்தில் அதுவும் ஹையர் எலிமெண்டரி செக்ஷன்ஸ் இருக்கும் பள்ளிகள் விஷயத்தில் சற்று முக்கியமாகக் கவனம் செலுத்த வேண்டும். ஹையர் எலிமெண்டரி செக்ஷன் இருக்கிற பள்ளிகளில் 8-வது வகுப்பை முடிக்கும் போது சர்க்கார் பரீட்சை—ஈ.எஸ்.எல்.ஸி. வைக்கிறோம். ஒரே ஆசிரியராக இருந்து கொண்டு 6, 7, 8 என்ற மூன்று வகுப்புகளை எடுத்து நடத்தும் போது 8-வது வகுப்புக்கு அதிகப்படியாகக் கவனம் செலுத்த வேண்டிய நிலையில், 6—7 வகுப்புகளைக் கவனிக்க முடிவதில்லை. மூன்று வகுப்புகளையும் சேர்த்தால்தான் 30 பேர்கள் வருகிறார்கள் என்ற நிலை இருப்பதனால் இதைத் தனியாக இரண்டு ஆசிரியர்கள் போட்டுக் கவனிக்க முடியவில்லை. இந்த முறையைக் கையாளுவதில் பிற்பட்ட கிராமங்களில் இதை ஓரளவுக்குத் தளர்த்தியாக வேண்டும். ஏறக்குறைய 15—20 பிள்ளைகளுக்கு ஒரு ஆசிரியர் என்ற முறையில் பிற்பட்ட பகுதிகளில் கொண்டு வரவில்லையென்றால் கல்வியில் தரம் நன்றாக இருக்க முடியாது. கேள்வி நேரத்தின் போது கனம் நிதி அமைச்சர் அவர்கள் சொன்னார்கள் பல வசதிகள் இல்லாததன் காரணமாக தேர்வுகளில் பல மாணவர்கள் தவறி விடுகிறார்கள் என்று. அதற்கு இதுவும் ஒரு காரணம்தான் என்று நான் நினைக்கிறேன். இதற்கு முக்கியமாக வசதி செய்து நிதி நிலைமையை வேறு வழிகளில் சரிக் கட்டி இதற்கு ஏற்பாடு செய்யாவிட்டால் கிராமப்புறங்களில் உள்ள பள்ளிகளில் படிக்கும் மாணவர்களின் கல்வி நல்ல தரமுள்ளதாக இல்லாமல் மேலே வரும்போது ஸ்டாண்டர்ட் குறைந்து போகிறது என்று சுட்டிக் காட்ட விரும்புகிறேன். காரணம் ஒரே ஆசிரியர் மூன்று வகுப்புகளை சரியாக கண் காணிக்க முடியாது. முன்பு ஹையர் எலிமெண்டரி ஸ்கூல்களில் ப்யூன் அல்லது ஆயா வைத்துக் கொள்ளும் சூழ்நிலை இருந்தது. இன்றைக்கு 200 பையன்கள் இருந்தால்தான் ஒரு ப்யூன் கொடுக்கும் நிலைமை ஏற்பட்டு விட்டது. ஆயா வைத்துப் பிள்ளைகளைக் கூட்டிக் கொண்டு வருவதை நிறுத்திவிட்டிருக்கிறோம். கிறிஸ்டியன் மிஷன் பள்ளிகளைப் பார்க்கும் போது அங்கே செல்லக்கூடிய பிள்ளைகளின் எண்ணிக்கை அதிகமாக இருக்கிறது. அங்கே ஆயாக்களை வைத்துப் பிள்ளைகளைக் கூட்டிக்கொண்டு வரும் சூழ்நிலை இருக்கிறது. கிராமப் புறங்களில் உள்ள தாய் தந்தையர்கள் பிள்ளை பள்ளிக்குச் சென்றதா இல்லையா என்றுகூடப் பார்க்கும் நிலைமை இல்லாததால், அதன் காரணமாக பிள்ளைகளைக் கவனிக்க முடிவதில்லை. ஆயா அல்லது ப்யூன் வீடுகளுக்குச் சென்று பிள்ளைகளைக் கூட்டிச் செல்லும் சூழ்நிலை இருந்தால் நல்ல முறையில் எண்ணிக்கை அதிகமாக இருக்கும். அதன் காரணமாக நான் முன்னாலே சொன்ன தொந்தரவைத் தவிர்க்கச் செய்யும் நிலைமை ஏற்பட்டுவிடும்.

இன்றைக்கு மதிய உணவுத் திட்டம் எல்லாப் பள்ளிகளிலும் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. அந்தத் திட்டத்தில் காண்டிராக்ட் எடுத்து செய்யக் கூடியவர்கள் எங்கேயாவது சமைத்துக் கொண்டு வந்து போட்டுவிடுகிறார்கள். அதையே பள்ளிகளில் செய்யும் நேரத்தில் ஆசிரியர்களும், பிள்ளைகளும் பாட நேரத்தை ஒதுக்கி அந்த நேரத்தைச் செலவழித்து சமைக்கும் சூழ்நிலை ஏற்படுகிறது. குறைந்த நேரத்தில் 2—3 வகுப்புக்களைச் சேர்த்து வைத்துக் கொண்டிருக்கும் சந்தர்ப்பத்தில் இந்த வேலையையும் ஆசிரியரும் பிள்ளைகளும் சமைக்க வேண்டும் என்ற சூழ்நிலை இருக்குமானால் கல்வியின் தரம் மிகவும் குறைவாக ஆகிவிடக் கூடியதாக இருக்கிறது. ஒரு

[Srimathi Kamalambujammal] [22nd March 1961

ப்யூன் அல்லது ஆயாவை நியமிப்பதன் மூலமாக ஓரளவு மாணவர்களுக்கும் ஆசிரியர்களுக்கும் இந்த முறையில் விடுதலை கிடைக்கும் என்று தெரிவித்துக் கொள்கிறேன்.

இப்படி ஒரு ஆயா அல்லது ப்யூனை அங்கே அமர்த்துவதன் மூலம், அவர்கள் மத்திய உணவுத் திட்டத்தை கவனித்துக் கொள்வதற்கும், அதனால் உபாத்தியாயர்களும் வகுப்பிலேயே உட்கார்ந்து மாணவர்களைக் கவனித்துக் கொண்டு நல்ல முறையிலே பாடம் சொல்லிக் கொடுப்பதற்குப் போதுமான ஒரு சூழ்நிலை எற்படும். ஆகவே அரசாங்கம் இதை மறு பரிசீலனை செய்து, இதற்கு எதாவது வழி வகைகள் செய்ய வேண்டுமென்று இந்தச் சமயத்தில் கனம் அமைச்சர் அவர்களைக் கேட்டுக்கொள்கிறேன்.

நமது கல்வி அதிகாரிகளுக்கு எந்த ஜில்லாவிலும் ஜீப் வசதிகள் கிடையாது. வேறு எந்த ஜில்லாவிலாவது இருக்கிறதோ இல்லேயோ, செங்கை மாவட்டத்தைப் பொறுத்த வரையில் ஜீப் வசதி இருப்பதாக எனக்குத் தெரியவில்லை. மற்ற எல்லாவித அதிகாரிகளுக்கும் ஜீப் கொடுக்கப்பட்டிருக்கிறது. கலெக்டருக்கு ஜீப் இருக்கிறது. என்ஜினியருக்கு ஜீப் இருக்கிறது. ஆனால் முக்கியமாகக் கல்வியிலே கவனம் செலுத்தக் கூடிய கல்வி அதிகாரிகளுக்கு ஜீப் இல்லை. இந்த ஜீப் இல்லாத காரணத்தினால் எல்லாப் பள்ளிகளையும் அவர்கள் தணிக்கை செய்வதற்கு முடியாத ஒரு நிலையில் இருந்து கொண்டிருக்கிறார்கள். அதோடு இன்றைக்கு டிப்டி இன்ஸ்பெக்டர்களை அதிகமாக்கி இருக்கிறோம். இந்த ஜில்லா அதிகாரிகளை இரண்டாகச் செய்யலாமா என்று யோசனை செய்து கொண்டிருக்கிறோம். இந்த ஜில்லா அதிகாரிகளுக்கு **additional** ஜில்லா அதிகாரி போட்டு அவருக்குத் தனியாக ஒரு காரியாலயம், அந்தக் காரியாலயத்திற்கு வாடகை, அதற்காக சில ஸ்டாப் முதலியவைகளைப் போட்டு, அதற்குச் செலவு செய்வதைவிட, அவர்களுக்கு ஜீப் கொடுத்தால், ஒரு நாளைக்கு மூன்று அல்லது நான்கு பள்ளிகளை வசதியாகச் சென்று காண்பதற்கு அவர்களால் முடியும். ஆகவே இந்த மாதிரி தனியாக ஆபீஸ் போட்டு, அதற்குச் செலவு செய்வது சிக்கனமாக இருக்குமா அல்லது கல்வி அதிகாரிக்கு மட்டும் ஒரு ஜீப் கொடுத்து, அதன் மூலம் பள்ளிக்கூடங்களைக் கண்காணிப்பது அதிகச் செலவாகுமா என்பதை ஆலோசனை செய்து, பிறகு இது விஷயத்திலே அரசாங்கம் ஒரு முடிவுக்கு வரவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

இன்றைக்கு எல்லா ஜாதியினரும், எல்லா மதத்தினரும் எந்தவிதமான வேறுபாடுமின்றி வருமானத்தில் பின்தங்கி இருந்தால் அந்தக் காரணத்தைக் கொண்டு சலுகை யாவருக்கும் கொடுக்கப்படுகிறது. இது மிக மிக வரவேற்கத் தக்கது. ஆனால் எந்த ஜாதியினராக இருந்தாலும், பிற்பட்ட இனத்தவராக இருந்தாலும், 100 ரூபாய்க்கு மேல் சம்பாதிக்கக் கூடியவராக இருந்தால், அவர்கள் தங்கள் பிள்ளைகளுக்குக் கட்டாயம் பள்ளிக் கூடத்தில் சம்பளம் கட்டவேண்டிய ஒரு சூழ்நிலை எற்படுகிறது. ஒரு தனிப்பட்ட மனிதன் 120 ரூபாய் சம்பாதிப்பவனாக இருந்து, அவனுக்கு நான்கு பிள்ளைகள் பள்ளிக்கூடத்திற்குச் செல்ல வேண்டியிருந்தால், ஒவ்வொரு பிள்ளைக்கும் அவன் சம்பளம் கொடுக்க வேண்டிய சூழ்நிலை எற்படுகிறது. இந்த முறையிலே சற்றுக் கவனம் செலுத்த வேண்டும். இந்தக் காலத்திலே 100 அல்லது 150 ரூபாய் இருந்தால்கூட ஒரு ஏழை தன்னுடைய குடும்பத்தை நடத்துவதற்கு முடியாமல் கஷ்டப்பட வேண்டிய நிலைமை இருக்கிறது. ஆகவே முன்பு இருந்ததை வைத்துக் கொண்டு, இப்போதும் இந்தக் காலத்திலும் அப்படியே அதை வைத்திருப்பது அவ்வளவு சிறந்ததாக இல்லை. ஆகவே அதை எப்படியாவது சற்று உயர்த்த வேண்டுமென்று நான் கனம் அமைச்சர் அவர்களைக் கேட்டுக் கொள்கிறேன்.

* SRI S. RANGANATHA MUDALIAR : Mr. Deputy Speaker, Sir, I hertily support the Demand of the Hon. the Finance Minister under this head. The Demand for Rs. 21 crores is a staggering figure compared to the estimate of the other States under this head. Our State has recognized that any progress in

22nd March 1961} [Sri S. Ranganatha Mudaliar]

the country must be hinged on education and has therefore very consistently and effectively adopted the policy of universalizing the education in our State. Ere long our State will beat the record of any other State in our country. In the southern zone, Kerala is considered to be most advanced in respect of education. But I am sure our State will beat the record of Kerala, if it has not already done so. Our State has been considered the pioneer State by other States particularly in respect of its new schemes, viz., the Midday Meal Scheme and the School Improvement Scheme. These two schemes have orginated spontaneously from the co-operative efforts of the common man inspired in no small degree by our Director and also by the liberal attitude of our Education Minister. The Midday Meals Scheme and the School Improvement Scheme are held out as examples to be followed by other States. Yesterday I read in the dailies that certain M.Ps. have joined together in a conference and wanted the Central to adopt the scheme and extend and apply them to other States. The services of our State in this regard has been amply recognized by no less than our President when he was here. He presided over the Conference at Vellore when the School Improvement Scheme was inaugurated. Ever since that time he has been mentioning in season and out of season that Madras example must be followed if our country should be educated on a universal basis and therefore he has properly recognized the service of our Director and conferred on him the unique title of Padma Shri which has not been conferred upon any other Director in any other State so far. This recognization is not confined to him but it is a recognition given to our State and to the liberal policy adopted by the Government. Padma Shri is given to the whole State and not to the Director alone.

Further, Sir, I am personally indebted to the Hon. the Minister and to the Director for the great help which they have rendered to improve the conditions in my constituency. My constituency at the time of integration was most backward. Without our asking, the Director has sanctioned three High Schools and has opened a number of Elementary Schools. We are asking for two more High Schools this year and he has also started a Basic Training School at Tiruttani. He has promised to sanction a Girls' High School also. I believe the Director remembers that promise and I think he will fulfil that promise. My thanks are due to the Director and particularly to the Hon. Minister in this respect.

One other thing I wish to impress on the Government is the need for organising a separate Department of Archaeology for our own State. There is one Department of Archaeology in the Centre under the Ministry for Scientific Research and Cultural Affairs. I regret to say that our monuments have not been properly looked after by the Central Department of Archaeology. It is not peculiar to this time but from the very beginning neglect was there even as early as 1939, when the British Government appointed one Sir Leonard Woolley as Director-General of Archaeology to review the working of the Archaeological Survey of India. He said that ' in

[Sri S. Ranganatha Mudaliar] [22nd March 1961

the case of the Southern Circle, where conditions are peculiar and the interests of archaeology have been much neglected, it is essential that the Circle Superintendent be a Hindu, who would have access to temples and advisable that he be a native of the province.' Further on page 8 of his report he says : ' India is one of the richest countries in the world for remains of the earliest phases of man's existence; in the south, they are particularly abundant. It is not too much to say that this rich field has been entirely overlooked by the Archaeological Survey of India and remains unknown to science. The neglect of it by the Archaelogical Survey is due to the fact that the study of stone age antiquities is highly specialized and lies quite outside the scope of the ordinary archaeologist.' Thus, according to the expert opinion of Sir Leonard Wooley, the interest of the Madras Circle was neglected for a long time and up to 1939. Sir Mortimer Wheeler became the Director-General of Archaeology in 1944 or so with the specific purpose of implementing the recommendations of Sir Leonard Woolley. Wheeler found the department terribly understaffed. He had to recruit new scholars, trained them and posted them to different circles. In 1947, prehistorian, who was a specialist in prehistory, and who was not a specialist in historic monuments was appointed Superintendent of the Madras Circle. He continued in office at Madras from 1947 to 1958 but for brief period of service elsewhere. Thus the prehistorian had to look after historic monuments for which he had no qualifications. He had almost no time to look after prehistory, for which he had special qualifications.

11 a.m. In 1958 he was suddenly called away to Delhi to take up another post and the Madras circle remained without a Superintendent for two more years, that is, till 1960. From 1958 to 1960, a Muslim Assistant Superintendent, who had no access to temples, was in charge of the circle. Thus, the long neglect of the Madras circle which Woolley had noticed in 1939, continued right up to 1960 in spite of the clear warnings of that eminent archaeologist. What is the position now? Some scholar from another State is now the Superintendent. It does not mean that there is paucity of similar qualified men in our own State. The peculiar feature of our State is our temples. In this respect, other States cannot compare with us. So, a special kind of approach is needed for understanding these monuments. Therefore, it is very necessary as Sir Leonard Woolley has stated, that a man of this State, preferably, a Hindu who has access to the temple must be appointed. Since archaeology is a concurrent subject, our State has got a right to be consulted before any Superintendent is appointed to look after our temples. The monuments are divided into three categories, viz., monuments of National importance, the State monuments and the monuments which do not come under either of these categories, but which are in a way, looked after by the Hindu Religious Endowments Board. Simply because some of the monuments have been taken over by the Central Government, they are labelled as Monuments of National importance. It does not mean that other monuments which are outside the purview of the Central Government's Archaeological Department, are not monuments of national

22nd March 1961] [Sri S. Ranganatha Mudaliar]

importance and so it is not worth spending much money upon those monuments. That is not a correct view to be taken. It is this mistaken impression which has been responsible for the States—including our State—not coming forward to have a Department of Archæology of their own. It is high time that we had our own Department. It is gratifying to note that on more than one occasion, our Minister has told the House that the Government were contemplating the early organization or formation of a Department of their own. Thank you, Sir.

*Sri K. SATTANATHA KARAYALAR : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்த மான்யத்தில் சுமார் ரூபாய் 21 கோடி நாம் செலவிடு கிரோம். இது மேலும் மேலும் வளர்ந்து வரக்கூடிய செலவினம் இது மிக வேகமாக வளர்ந்து வரக்கூடிய ஒரு துறை. நமது நாட்டிலே, அதுவும் சென்னை மாகாணத்திலே கிராமங்களிலெல்லாம் மிக வேகமாக கல்விபரவிக் கொண்டு வருகிறது என்பது உண்மை. ஆனால் எந்த அளவு பரவலாக இருக்கிறதோ, அந்த அளவுக்குத் தரம் குறைந்திருக் கிறது உயர்ந்திருக்கிறதா என்று பார்த்தால், இல்லை என்று தான் சொல்ல வேண்டியிருக்கிறது. இதற்குப் பல காரணங்கள் இருக்கக்கூடும். குறிப்பாக ஆசிரியர்களுடைய தரக் குறைவு, உதாசீனம், அவர்களுக்கு இருக்கக்கூடிய அதிருப்தி முதலியவைகள் சில காரணமாக இருக்கக்கூடும். பள்ளிக் கூடங்களின் நிலைமை அங்கு இருக்கக்கூடிய வசதிகள் ஆகியவை மற்றொரு காரணம். மேலும் கிராமாந்திரத்தில் பெற்றோர்கள் தங்கள் குழந்தைகள் கல்வியில் அதிகம் கவனம் செலுத்துவதில்லை. ஆகவே, இந்த பல காரணங் களினால் கல்வி எவ்வளவு வேகமாகப் பரவுகிறதோ அந்த வேகத்திற்குத் தகுந்த முறையில் தரம் உயர்வாக இல்லை. இது மிகவும் கவனிக்க வேண்டிய விஷயம். சர்க்கார் தரப்பில் நிர்வாகத் துறையில் இருப்பவர்கள் தரத்தை உயர்த்துவதற்கான முறையில் இன்ஸ்பெக்ஷன் முதலியவைகள் அதிக மாக நடத்தி இதை நல்ல முறையில் பரிபாலனம் செய்ய வேண்டியது மிகவும் அவசியம். அப்படிச் செய்தால் தான் நாம் செலவு செய்யக்கூடிய பெரும் தொகைக்குத் தகுந்த முறையிலேயே பலன் தருவதாக இருக்கும். அப்படி மாற்றி அமைக்க வேண்டி, இன்றிருக்கக்கூடிய டிபார்ட்மெண்டை புனர் நிர்மாணம் செய்ய வேண்டுமா, அல்லது 2, 3 பிரிவுகளாகப் பிரித்து, 'பிரைமரி எஜுகேஷன்' வேறு, 'செகண்டரி எஜுகேஷன்' வேறு, 'காலேஜியேட் எஜுகேஷன்' வேறு என்று பிரித்து தனித் தலைமையின் கீழ் கொண்டு வரவேண்டுமா என்பதைப்பற்றி பரிசீலிக்க வேண்டியது மிகவும் அவசியம் என்று குறிப்பிட விரும்புகிறேன்.

அடுத்தபடியாக, இன்றைக்கு இருக்கக்கூடிய பலதரப்பட்ட பள்ளிக் கூடங்களை ஒன்றுபடுத்தி 'பிரைமரி எஜுகேஷன்' என்று சொன்னால் எது என்று வரையறுத்து, அதிலே ஒரு பரீட்சை வைத்து, அல்லது 7-வது படிவத்தில் ஒரு சர்க்கார் பரீட்சை வைத்து மிகப் பெரிய அளவுக்கு 11-வது வகுப்பு வரையிலும் மாணவர்கள் செல்வதைத் தடுக்க வேண்டும். சாதாரணமாக மாவட்டங்களில் வேலை செய்யக்கூடிய ஆர்டிஸன் தொழிலாளிகளுக்கு இதர வேலைகளுக்கும் இந்தப் பரீட்சை போதும் என்று வைத்து விடவேண்டும். கீழ்மட்டத்திலுள்ள பல வேலை களுக்கு இந்தக்கல்வி போதும். அதை ஒரு சர்க்கார் பரீட்சையாக வைப்பது அவசியம் என்று வலியுறுத்த விரும்புகிறேன்.

பள்ளிக்கூடங்களில் தரம், ஆசிரியர்கள் அதிருப்தி பற்றி சில விஷயங்களைச் சொல்ல அவாவுறுகின்றேன். சில பள்ளிக்கூட ஆசிரியர்கள் அந்தந்த இடத்திலேயே வசிப்பதில்லை. சமீபத்தில் சில பள்ளிக்கூடங்களைப் பார்ப்பதற்கு எனக்கு வாய்ப்பு கிடைத்தது. அப்படி ஒரு பள்ளிக்கூடத்தைப் பார்க்கக்கூடிய நேரத்தில் அங்கு இருக்கக்கூடிய ஒரு கரும்பலகையில் ஒரு பஸ் அட்டவணை எழுதப்பட்டிருந்தது. எந்தப் பகுதிக்கு எந்தப் பஸ் எப்பொழுது புறப் படுகிறது, வந்து சேருகிறது என்பதை மிக நன்றாக, அழகாக எழுதி வைத்திருந்தார்கள். காலையிலே 10, 11 மணிக்கு எந்த பஸ் வரும், மாலையிலே 2½ மணி, 3 மணி முதல் எந்த பஸ் போகும் என்றெல்லாம்

[Sri K. Sattanatha Karayalar] [22nd March 1961

எழுதப்பட்டிருந்தது. இது எதற்காக என்று நான் கேட்டேன். ஆசிரியர்கள் வருவதற்கும், போவதற்கும் அவர்கள் பஸ் கிளம்பும் நேரத்தையும், வந்துசேரும் நேரத்தையும் பார்க்க வேண்டி யிருக்கிறது என்று சொன்னூர்கள். மணியைப் பார்த்துக் கொண்டே ஆசிரியர்கள் வேலே செய்கிருர்கள். அந்தப் பள்ளிக்கூடத்தில் இருக்கக்கூடிய 10, 14 ஆசிரியர்களில் எத்தனே பேர்கள் அந்த ஊரில் இருக்கிருர்கள் என்ருல், ஒரே ஒரு ஆசிரியர் தான் அந்த ஊரில் வசிக்கக்கூடியவர். இது போன்ற நிலைமை மாறி எல்லா ஆசிரியர்களும் அந்த ஊரிலேயே தங்குவதற்கு உள்ள வசதி செய்து கொடுக்க வேண்டும். எப்பொழுது ஊர் போய்ச்சேருவோம் என்ற எண்ணத்திலேயே ஆசிரியர்கள் அங்கு வேலே செய்வதென்ருல் அது சரியாக இருக்காது.

பள்ளிக் கூடங்களிலே இருக்கக்கூடிய ஆசிரியர்கள் மத்தியிலே பலவிதமான அதிருப்தி இருக்கிறது. ஆனல் தரக்குறைவும் ஆசிரியர்கள் மத்தியிலே இருக்கிறது. இதையெல்லாம் நிவர்த்தி செய்வதற்கு பல 'ரிப்ரெஷர் கோர்ஸ்' நடத்துவது மிகவும் அவசியம் என்று நான் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். பொதுவாக நான் ஆசிரியர்கள் மீது பழியாகச் சொல்லவில்லே. ஆசிரியர்களில் மிகச் சிறந்த ஆசிரியர்களும் இருக்கிருர்கள் என்பதற்கு எடுத்துக்காட்டு இல்லே என்று சொல்ல முடியாது. எங்கள் ஊரில், செங்கோட்டையில் சில தினங்களுக்கு முன்பு ஒரு சம்பவம் நடந்தது. ஒரு வீட்டிற்கு அருகாமையில் இருக்கக்கூடிய கிணற்றில் 2 வயது குழந்தை தவழ்ந்து வந்து விழ ஏதுவாயிற்று. அந்தக் குழந்தையின் பாட்டி குழந்தையைக் காப்பாற்ற ஓடிவந்தாள். அவளும் கிணற்றில் விழுந்து விட்டாள். அண்டை வீட்டில் இருந்த ஒருவர் இவர்களேக் காப்பாற்ற முயன்ற பொழுது அவரும் கிணற்றில் விழுந்து விட்டார். இப்படி மூன்று பேர்கள் கிணற்றில் கிடக்க, பக்கத்தில் கூடி இருந்த ஒரு சிலர் என்ன செய்வது என்று ஆலோசித்துக் கொண்டிருக்கிற நேரத்தில், சாதாரண பிரைமரி ஸ்கூல் தலைமை ஆசிரியர் ஒருவர்—அவருக்கு சுமார் 50 வயது இருக்கும், பல குழந்தைகளுக்கு தகப்பஞரானவர்—ஆலோசனே செய்யாமல் வேகமாக கிணற்றில் இறங்கி பல கஷ்டங்களுக்குள்ளாகி அந்த மூன்று பேர்களேயும் காப்பாற்றினுர். அம்மாதிரி தன்னலமற்ற சேவை செய்யக்கூடிய ஆசிரியர்கள் பலர் இந்த நாட்டில் இருக்கிருர்கள் என்பதற்கு இந்த சம்பவம் எடுத்துக்காட்டாக இருக்கிறது என்பதைச் சுட்டிக் காட்ட விரும்புகிறேன். இருந்தும், தரக்குறைவு ஆசிரியர்கள் மத்தியிலே இருக்கிறது என்பதை மறந்துவிடக்கூடாது. இப்படிப்பட்ட தனிப்பட்ட சிலர் சிறந்த முறையிலே சேவை செய்யக்கூடியவர்களும் இருக்கிருர்கள். இம்மாதிரி சிறந்த சேவை செய்யும் நபர்களேப் பாராட்டும் வகையிலே சர்க்கார் சில விருதுகள் வழங்குகிருர்கள். அது வரவேற்கக்கூடிய விஷயம். இம்மாதிரி சிறந்த சேவை செய்வதற்கு ஆசிரியர்களே ஊக்குவிப்பதற்கு அது ஹேதுவாக இருக்கிறது. அதே நேரத்தில் ஆசிரியர்கள் இடையிலே இருக்கக்கூடிய அதிருப்திகளே நீக்க வேண்டியது மிக அவசியம்.

கன்யாகுமரி மாவட்டத்திலுள்ள ஆசிரியர்களுடைய குறையைப்பற்றி எனக்கு முன்பு பேசிய நண்பர் குறிப்பிட்டார். கன்யாகுமரி, செங்கோட்டை மாவட்டத்தில் 100-க்கு 80 பள்ளிக்கூடங்கள், அதுவும் செங்கோட்டை மாவட்டத்தில் 100-க்கு 100 சர்க்கார் பள்ளிக்கூடங்கள். அந்தப் பள்ளிக் கூடங்களில் வேலே செய்யும் ஆசிரியர்களிடையே ஒரு பெரிய அதிருப்தி இருக்கிறது. ராஜ்யப் புனரமைப்புக்குப் பிறகு இவர்கள் செகண்டரி கிரேடு டீச்சர் என்று கருதப்படவில்லே. உதாரணமாக அங்கே, டி.எஸ்.எல்.ஸி., ஈ.எஸ்.எல்.ஸி. சர்டிபிகேட் பெற்றவர்கள், ஓராண்டு காலம் பயிற்சி பெற்றவர்கள் செகண்டரி கிரேடு ஆசிரியர்களாகக் கருதப்பட்டார்கள். இங்கு இருக்கக்கூடிய பழக்கம் என்ன வென்ருல் செகண்டரி கிரேடு ஆசிரியர்கள் இரண்டு வருஷ டிரெயினிங் 'அண்டர்கோ' செய்ய வேண்டும். இரண்டு தரப்பினர்களுக்கும் கிட்டத்தட்ட ஒரே சிலபஸ் தான். **Teaching Method of English** இங்கிலீஷ் டீச்சிங்' தான் கிடையாது. இப்பொழுது சமீபத்தில் பிறப்பித்த சர்க்கார் உத்தரவுப்படி, அங்கு செகண்டரி கிரேடு ஆசிரியர்களாக இருந்தவர்கள், ஒரு வருஷம் பயிற்சி பெற்றவர்கள் 10 ஆண்டு காலம் சேவை செய்திருந்தால், அவர்கள் செகண்டரி கிரேடு டீசர்களாகக் கருதப்

22nd March 1961] (Sri K. Sattanatha Karayalar]

படுவார்கள். ராஜ்ய புனரமைப்புக்குப் பிறகு 1—11—1956-க்கு பிறகு 2, 3 ஆண்டுகளாக அங்கு டிரெயினிங் பள்ளிகள் நடந்துகொண்டிருக்கின்றன. அப்படி ஒராண்டு காலம் பயிற்சி பெற்ற ஆசிரியர்கள் அந்த மாவட்டத்திலேயே வேலையில் இருக்கிறார்கள். புதியதாக இரண்டு ஆண்டு காலம் பயிற்சி பெற்றவர்கள் அவர்களுக்கு மத்தியிலே வந்தால், புதியதாக வந்தவர்கள் சீனியர்களாக ஆகிவிடுகிறார்கள். ஏழு, எட்டு வருஷங்களுக்குப் பிறகு தான் இந்த ஆசிரியர்களுக்கு அவர்களுடைய நிலைமை வரும். ஆனால் இவர்களுக்குப் பிறகு வேலைக்கு வந்தவர்கள் ஸீனியராக வந்துவிடுகிறார்கள்.

இதனால் இந்த ஆசிரியர்களுக்கு நீண்ட நாட்களாக அதிருப்தி ஏற்பட சந்தர்ப்பம் இருக்கிறது. அதைப் போக்க வழிவகை செய்ய வேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன். ஒரு பர்லாங் தூரத்திற்கு அப்பால் கேரளத்தில்இருக்கும் ஆசிரியர்களுக்கும் இவர்களுக்கும் சம்பள வித்தியாசம் இருப்பது மேலும் மனக் குறையை வளர்க்கிறது. இன்றைக்கு நம் ராஜ்யத்திலே கொடுத்திருக்கும் சம்பள விகிதம் ரூபாய் 90—140 என்று இருக்கிறது. அதே நேரத்தில் கேரளதில் 35—3—80 என்பதிலிருந்து இன்றைக்கு 40—120 என்று ஆகி அதோடு ரூபாய் 45 டி.ஏ. ஆகவும் பெறுகிறார்கள் இதை யெல்லாம் மனதில் கொண்டு குறையில்லாமல் செய்யவேண்டும். ராஜ்ய புரைமைப்புக்குப் பிறகும் ஒரு ஆண்டு ட்ரெயினிங் பள்ளி நடந்து வந்தது அந்த ஆசிரியர் அத்தனைபேரும் "செகண்டரியாக அங்கீகரிக்கப்பட வேண்டும் இல்லையானால் இவர்கள் மத்தியில் ஒரு தீராத மனக்கசப்பு இருந்து கொண்டேயிருக்கும். நான் குறிப்பிட்ட துணிகர வேலையைச் செய்த ஆசிரியர்கூட இம்மாதிரி தமிழ் ஹையர் படித்து ஆசிரியராக இருப்பவர் என்று தான் தோன்றுகிறது. ஆசிரியர்களுக்கு இன்றைக்கு தன்னம்பிக்கை ஏற்படக் கூடிய வகையில் இதைச் செய்ய வேண்டும்.

அடுத்ததாக ப்ரைமரி பள்ளிக்கூடத் தலைமை ஆசிரியர்களுக்கு எந்த விதமான அலவன்ஸும் கிடையாது. குறைந்தது தலைமை ஆசிரியர்களுக்கு ரூபாய் 10 ஆவது கொடுக்க வேண்டும். கண்டின்ஜென்ஸி செலவிற்காக மாதம் ஒரு ரூபாய் வழங்கப்படுகிறது. அது எப்படிப் போதும்? அது மிகமிகக் குறைவு. ஒரு சாக்பெட்டி வாங்க வேண்டுமானாலும் பத்து அணா ஆகிறது. இவைகளை யெல்லாம்கூட சர்க்கார் ஸ்டேஷனரி டிபார்ட்மெண்ட் மூலம் சப்ளை செய்து அவர்களுக்கு உதவி செய்யலாம்.

இந்தக் கல்வி மானியத்தில் பல கோடி ரூபாய்களைச் செலவழிக்கிறோம். அதற்குத் தகுந்த பலனை அடைய நாம் நடவடிக்கைகள் எடுக்கவில்லை என்பதை வருத்தத்தோடு சொல்லிக் கொள்ளுகிறேன்.

**Sri V. S. MANIKKASUNDARAM** : மிஸ்டர் டெபுடி ஸ்பீக்கர், இன்று கொண்டு வந்திருக்கும் கல்வித் துறை மானியத்தை ஆதரிக்கும் நேரத்தில், தமிழ் நாட்டிலே கல்வித்துறையில் அபிவிருத்தி ஏற்பட்டிருக்கிறது என்பதையும், அதற்கான நல்லதொரு திட்டத்தை அமுலாக்கி வருகிறார்கள் என்பதைப் பற்றியும், வெளிநாட்டிலிருந்து வருகிறவர்களும் பாராட்டுவது ஒருபுறம் இருக்க, பெருவாரியான ஏழை எளிய மக்கள் எல்லோரும் இதற்கு ஆதரவு தருகிறார்கள் என்பதைக் காண நாம் பெருமை அடைய இடம் இருக்கிறது என்பதைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். 11-வது வகுப்பு வரை இலவசக் கல்வி கொடுக்க ஏற்பாடு செய்திருப்பதையும் நன்றியோடு பாராட்டுகிறேன். நல்ல முறையிலே கல்வி பெருக, கல்வி சீர் திருத்த மாநாடுகள் மாவட்டங்கள் தோறும் போட்டு, இலவச உணவும் உடையும் அளித்து ஏழை எளியவர்கள் குழந்தைகளுக்குக் கல்வி வசதிகள் கொடுப்பதை மனமாரப் பாராட்டுகிறேன். இதிலே கல்வி அமைச்சரவர்களும், கல்வி இலாகா இயக்குனரும் பாடுபடுவது பற்றி சிறப்பாக அவர்களைப் பாராட்டுகிறேன். ஏழை எளிய மக்கள் கல்வியின் அவசியத்தை உணராமல் குழந்தைகளைப் பள்ளிக்கூடங்களுக்கு அனுப்பாமல் இல்லை. ஆனால், பெருவாரியாக அவர்களுடைய பொருளாதார நிலை குழந்தைகளைத் தொடர்ந்து பள்ளிகளில் விட்டுவைக்க முடிவதில்லை. ஆகவே, இந்தக் குறைகளை அறிந்து அரசாங்கம் அவர்களுக்கெல்லாம் உணவும் உடையும் தந்து வசதிகள் செய்து கொடுப்பது எல்லோரும் பாராட்டக் கூடியதாக இருக்கிறது.

[Sri V. S. Manikkasundaram] [22nd March 1961

(Sri K. Sattanatha Karaiyalar in the Chair.)

இந்தக் கல்வி சீர்திருத்த மாநாடு பற்றி ஒரு யோசனை சொல்ல விரும்புகிறேன். இன்றைக்கு அமைக்கப்பட்டிருக்கும் பஞ்சாயத்துக்களிலும் பஞ்சாயத்து யூனியன்களிலும் இந்தத் துறையில் மிக அதிகமாக எதிர் பார்க்க இடம் இல்லை. இதிலே கவனம் செலுத்த வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

ஆங்கில போதனு மொழி இயக்கம் பற்றி ஒரு சில கருத்துக்களைச் சொல்ல விரும்புகிறேன். எந்த வகுப்பிலிருந்து என்பது ஒரு கேள்வி. ஐந்தாவது வகுப்பிலிருந்து என்று தெரிவிக்கிறார்கள். என்னைப்பொறுத்த வரை, சிறிய குழந்தைகளாக இருக்கும் போதே, 3-வது, 4-வது வகுப்பி லேயே ஆரம்பித்தால் ஒரு கஷ்டமும் ஏற்பட்டுவிடாது. ஐந்தாவது வகுப்பு என்பதற்கு என்ன விசேஷ காரணம் ? இன்றைக்கு நாம் ஐந்தாவது வகுப்பிலிருந்து என்று சொன்னாலும், பெற்றோர்கள் பலர் தங்கள் குழந்தைகளுக்கு 5, 6 வயதிலிருந்தே தனியாக உபாத்தியாயர்களை வைத்துச் சொல்லிக் கொடுக்க ஆரம்பித்து விடுகிறார்கள். அதை யாரும் மறுக்க முடியாது. நாட்டில் நிலவரம் அப்படி யிருக்கும்போது, இலவச மாக ஏழை எளியவர்களுக்குச் சொல்லிக் கொடுப்பது மட்டும் ஏன் ஐந்தா வது வகுப்பிலிருந்து என்று சொல்ல வேண்டும். இதைக் கொஞ்சம் சிந்திக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன். நாட்டிலே ஏழை எளியவர்களுக்கும் மற்றவர்களுக்கும் சம சந்தர்ப்பம் கொடுக்க வழி காணவேண்டும்.

போதனுமொழி சம்பந்தப்பட்டவரை, கோயம்புத்தூரில் ஒரு கல்லூரியில் மட்டும் ஹியூமானிடிஸ் என்ற பகுதிக்கு மட்டும் தமிழ் போதனு மொழி யாக இருப்பது இன்னும் எல்லா கல்லூரிகளுக்கும் விஸ்தரிக்கப்படவேண் டும். ஸ்கூல் பாடங்கள் அவ்வளவும் எவ்வளவு சீக்கிரம் முடியுமோ அவ்வளவு துரிதமாக தமிழ் மொழியில் போதிக்கப்பட வேண்டும். ஆங் கிலத்தின் தரம் உயர வேண்டும் என்று சொல்வதில் ஆட்சேபணையில்லை. ஆனால், அதன் தரம் குறைவதற்கு இம்மாதிரி தமிழ் போதனு மொழி யாக இருப்பது என்று ஒரு சாரார் கருதுகிறார்கள். அப்படியானால், அந்த முறையில் ஆங்கிலத்தை அதன் தரத்தை உயர்த்த வேண்டும் என்று எடுக்கும் நடவடிக்கைகள் தமிழைப் பாதிக்காத முறையில் அமைய வேண்டும் என்பதைச் சிந்திக்க வேண்டும். ஆனால், ஒரு மொழி படிப்ப தால் இன்னொரு மொழி பாதிக்கப்படும் என்ற வாதத்தை ஒத்துக் கொள்வதற்கில்லை. ஆகவே, தரக் குறைவு என்றால் அதற்கு வேறு ஏதோ காரணம் இருக்க வேண்டும். அது தமிழில் போதிப்பதால் என்ப பதை ஒத்துக் கொள்வதானல், அது தமிழுக்கு பாதகம் ஏற்படுத்தும் வாய்ப்பு உள்ளதாக இருப்பதால், அந்த நிலை ஏற்றுக் கொள்ள முடியா தது. இன்றைக்கு எனக்குத் தெரிந்த வரையில், எஸ்.எஸ்.எல்.ஸி. வரை படித்த மாணவர்களிடையே, எஸ்.எஸ்.எல்.ஸி வரை தமிழில் படித்ததால் மேலே ஆங்கிலம் இருக்கக்கூடாது என்ற ஆட்சேபணை அவர்களிடம் இல்லை. அதனால் அவர்களுக்கு ஏதோ பெரிய கெடுதல் வந்ததாகவும் சொல்ல வில்லை.

நான படிக்கிற காலத்தில் எட்டாவது வகுப்பு வந்ததும் ஆங்கிலத்தில் பாடம் கற்பிக்க ஆரம்பித்தார்கள். அப்பொழுது ஒரு மாணவன் வேறு ஒரு மொழியில் நாம் படிகக வேண்டியிருக்கிறதே என்ற உணர்ச்சி இல்லாமலேயே படித்து வந்தான். இப்பொழுது மாணவர்களுக்கு ஏற்படாத ஒரு எண் ணத்தை, மற்றவர்கள் ஏற்படுத்திக் கொடுக்க ஏதுவாகும் என்று இதைச் சொல்பவர்கள் கவனித்து எண்ணிப் பார்க்க வேண்டும். மேல் படிப்பிற்குப் போகிறவர்களுக்கு எந்த மொழியில் பாடம் கற்றுக் கொடுக்கப்படுகிறதோ அந்த மொழியை மட்டும் ஏற்கெனவே கற்றுக் கொடுத்திருந்தால் போதும் என்பதை இன்னும் சில உதாரணங்களால் சொல்ல முடியும். என்ஜி னியர்கள், டாக்டர்கள் போன்றவர்களை மேல் படிப்பிற்காக அனுப்புகிறோம். எனக்குத் தெரிந்த ஒரு மெக்கானிக்கல் என்ஜினியர் போஸ்ட் கிராஜுவேட் கோர்ஸுக்கு ஜெர்மனுக்குப் போனார்கள். அவர் திரும்ப வந்ததும் நான் அவரைக் கேட்டேன், எந்த மொழியில் நீங்கள் அங்கு பாடங்கள் கற்றீர்கள்

22nd March 1961] [Sri V. S. Manikkasundaram]

என்று. அவர்கள் சொன்னார்கள், ஜெர்மன் பாஷையைக் கற்றுக்கொண்டு ஜெர்மன் பாஷையிலேயே பயிற்சியை பெற்றதாகத் தெரிவித்தார்கள். ரஷ்யாவிற்கு ஒரு என்ஜினியரிங் க்ராஜுவேட் போய்ப் பயின்றதும் எனக்குத் தெரியும். அங்கு ரஷ்ய பாஷையில்தான் போதனாமுறை அமைந்திருப்ப தாகச் சொன்னார்கள். அங்கு போய் ஒரு குறுகிய காலத்தில் அந்த பாஷையைக் கற்றுக்கொண்டு பின்னர் அங்கு பாடம் கற்க வேண்டி யிருந்தது என்றும் கூறினார். அதனால் அவர்களுக்கு எந்தவிதமான சங்கடமும் ஏற்பட்டதாகத் தெரியவில்லை. ஆகவே, இங்கு போதனாமொழி தமிழாகத் தான் இருக்க வேண்டுமென்பதில் ஒரு வித ஆட்சேபணையும் இருக்க முடியாது. பின், சம்பள சலுகை விஷயம் பற்றி அறிக்கையில் குறிப்பிடப்பட்டிருக்கிறது, ஏழை மாணவர்களுக்கு 11-வது வகுப்பு வரை இலவசக் கல்வி அளிக்கப்படுமென்று. ஏழை மாணவர்கள் யார் என்பது பற்றி தயவு செய்து திட்டவட்டமாகத் தெரியப்படுத்தபட வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். இதுவரை 1,200 ரூபாய் வருட வருமானத்திற்கு உள்பட்டவர்கள் ஏழை மாணவர்கள் என்று சொல்லிவிட்டு, இனிமேல் ஏழை மாணவர்கள் என்று பொதுவாக சொல்லி யிருப்பதும் அவ்வளவு பொருந்தாது. பொதுவாகக் கூறிவிட்டால், யாருக்கு இந்த சலுகை கிடைக் கும் என்ற கவலையைக் கொடுக்கும் நிலை ஏற்படுகிறது. (மணியடிக்கப் பட்டது) தமிழில் பாடம் படிக்கக் கூடியவர்களுக்கு, 3,000-க்குள்ளாக வருமானம் இருப்பவர்களுக்கு ஸ்டைபண்ட் கொடுப்பதாகக் காட்டியிருப்பது போல் இதிலும் குறைந்த பட்சம் 3,000 ரூபாய் வருமானம் உள்ளவர் களுக்கும் இலவசக் கல்வி கொடுக்க வேண்டும். பின்னர், தொழில் கல்வி பற்றி ஒரு வார்த்தை. தொழில் கல்விக்கு போனவுடன் ஜாதி அடிப்படை புறப்பட்டு விடுகிறது. பாக்வேர்ட் க்ளாஸைச் சார்ந்தவர்களுக்கு அது நல்ல பலனைக் கொடுக்கிறது. ஏழை மாணவர்கள் என்று நிரூபிக்கக் கூடியவர்களுக்கு, அவர்கள் பார்வேர்ட் கம்யூனிட்டியைச் சார்ந்தவர்களாக யிருந்தாலும் ஏன் அவர்களுக்கும் இந்த சலுகை கொடுக்கக்கூடாது? அவர்கள் பார்வேர்ட் கம்யூனிட்டியைச் சேர்ந்தவர்கள் என்பதினால் மட்டும் அவர்கள் பொருளாதாரத் துறையில், மெட்டீரியல் ஸைடில் முன்னேற்றம் பெற்று விட முடியாது. (பெல்) ஒரே ஒரு வார்த்தை. சமீப காலத்தில் "போஸ்டல் ட்யூஷன்", "ஈவினிங் க்ளாஸஸ்" நடத்து வது இவைபற்றி பெரிய சர்ச்சை நடந்து கொண்டிருக்கிறது. பிற மாநிலங் களில் இருப்பது போன்று இங்கும் "ஈவினிங் கிளாஸஸ" ஏன் வைக்கக் கூடாது? போஸ்ட் க்ராஜுவேட் கோர்ஸுக்கு, ஈவினிங் கிளாஸ் வைப்பது வேலையில் இருப்பவர்களுக்கு நல்லபடி படித்து முன்னேற சந்தர்ப்பம் கிடைக்க உதவும். ஆகவே, "ஈவினிங் க்ளாஸஸ்" வைப்பதற்கு வேண்டிய நடவடிக்கைகள் எடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டு என் உரையை முடித்துக் கொள்கிறேன்.

* SRI W. P. A. R. CHANDRASEKARAN : தலைவர் அவர்களே, நமது கல்வியமைச்சர் அவர்கள் சமர்ப்பித்திருக்கும் மான்யக் கோரிக்கையை ஆத ரித்து சில வார்த்தைகள் கூற முற்படுகிறேன். கடந்த பத்து ஆண்டுகளில் 16,000 ஆரம்பப் பாடசாலைகள் இருந்தன இன்று 25,700 ஆக அதிகரிக்கப் பட்டிருக்கிறது. ஆறுவது முதல் 11-வது வயது வரை பள்ளிக்குச் செல்ப வர்களின் எண்ணிக்கை 45 சத விகிதத்திலிருந்து 75 சத விகிதமாக அதிகரிக்கப்பட்டிருப்பதாகக் குறிப்பிடப்பட்டிருக்கிறது. இது வரவேற்கத் தக்கது. ஜூன் மாதம் முதல் 11-வகுப்பு வரையில் மாதம் 1,200 ரூபாய்க்குள் வருமானம் உள்ளவர்களுக்கு இலவசப் படிப்பு கொடுக்கப்போவதாக குறிப்பிடப்பட்டிருக்கிறது. அதுவும் வரவேற்கத் தக்கது. சில அங்கத்தி னர்கள் குறிப்பிட்டார்கள், 1,200 என்றிருப்பதை 3,600 வரை உயர்த்தலாம் என்று. நான் சொல்வது, 11-வது வகுப்பு வரையில் வருமான கட்டுப்பாடில்லாது எல்லோருக்கும் இலவசக் கல்வி கொடுத்தால் மிகவும் உதவியாயிருக்கும். 1, 2, 3 பாரங்கள் வரை 1,200 ரூபாய் வருமானம் உள்ளவர்களைக் கணக்கெடுத்துப் பார்த்தால் அந்த எண் ணிக்கை கிட்டத்தட்ட 89% வருகிறது. மீதி இருப்பவர்கள் 11% தான். 4, 5, 6 பாரங்களை எடுத்துக்கொண்டால் இருப்பது 27% தான். இந்தத் திட்டத்தைப் புகுத்தினால் அந்த பெர்ஸெண்டேஜும் குறையும். இப்போது இதற்காக 56 லட்சம் ரூபாய் ஒதுக்கப்பட்டிருப்பதாக அமைச்சர் அவர்கள்

தெரிவித்திருக்கிறார்கள். இந்த 89% கணக்கை வைத்துப் பார்த்தால், இன்னும் 10 அல்லது 20 லட்சம் ரூபாய் போட்டால் 11-வது வகுப்பு வரை எல்லோருக்குமே வருமானக் கட்டுப்பாடில்லாத முறையில் இலவசக் கல்விச் சலுகை கொடுத்துவிட முடியும். தற்சமயம் பாவர்ட்டி சர்டிபிக்கேட் வாங்க வேண்டுமென்று இருக்கிறது. உத்தியோகஸ்தர்களிடம் போய் வாங்கவேண்டுமென்றால் அவர்களுக்கு மாமூல் அல்லது பொது ஜனங்களில் யாராவது இந்த வேலை பார்த்தால் அவர்களுக்குத் தரகு கொடுத்துத்தான் சர்டிபிகேட் பெறுகிறார்கள். சராசரி ஒரு சர்டிபிகேட்டுக்கு 10 ரூபாய் என்று வைத்துக் கொள்ளலாம். அப்படி வரும்போது ஒரு தாசில்தார் கிட்டத்தட்ட 2,000 கையெழுத்து போடுகிறார்கள். ஆக, 2,000 கையெழுத்திற்கு 20,000 ரூபாய் வருகிறது. எல்லோருக்கும் இந்த இலவசக் கல்விச் சலுகையைக் கொடுத்தால் இந்த அனாவசியச் செலவு மககளுக்கு ஏற்படாது. ஆக, 11-வது வகுப்பு வரை எல்லாருக்கும் இந்த சலுகையைக் கொடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். 11-வது வகுப்பை இப்பொழுது புகுத்துவதில் கிட்டத்தட்ட 25 வருடங்களில் பூர்த்தியாகும் என்று கூறப்படுகிறது. 25 வருடத்தில் பழையபடி 10-வது வகுப்பு வரையுள்ள பள்ளிகள் மேலும் திறக்கும் போது இன்னும் அதிகப்படி காலமாகி விடுமோ என்று ஐயப்படவேண்டியிருக்கிறது. ஆகவே இதற்குத் தனி முக்கியத்துவம் கொடுத்து பத்து ஆண்டுகளுக்குள்ளாகவே இதைச் செய்து முடிக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். அதற்கு ஆவன செய்ய வேண்டும். பின்னர், 11-வது வகுப்பு புகுத்தப்படும் நேரத்தில் 10-வது வகுப்பு வரை உள்ள பரீட்சைகளுக்கு ஆங்காங்கு ஜில்லா அளவில் கல்வி உத்தியோகஸ்தர், ஹெட்மாஸ்ட்டேர்ஸ் போன்றவர்களைக் கொண்ட ஒரு போர்ட் அமைத்து அவர்கள் சர்டிபிகேட் கொடுக்கலாம் என்று வைத்தால் அது "டிசென்ட்ரலைஸ்" செய்வதற்கு உகந்ததாக அமையும். 11-வது வகுப்பு பரீட்சையை சர்க்காரே நடத்தி சர்க்காரே சர்ட்டிபிகேட் கொடுக்கலாம். ஆகவே, இதையும் கவனிக்கவேண்டும். கல்விச் சீரமைப்பு மகாநாடு பற்றி இங்கு பேசப்பட்டது. நிலக்கோட்டையில் ஒரு மகாநாடு நடைபெறும்போது டயரக்டர் வந்து தலைமை வகித்தார்கள். அப்பொழுது டெல்லியிலிருந்து அங்கு வந்திருந்த ஸ்ரீ ஸின்ஹா என்பவர் சொன்னார், இது உண்மையில் நடைபெறுகிறதா, எப்படி நடைபெறுகிறது என்று பார்த்து டெல்லி ராஜ்யத்தில் இதை நடைமுறையில் கொண்டு வருவதற்
11-30 a.m. காக என்னை அனுப்பியிருக்கிறார்கள், இதைப் பார்த்து வருவதற்காக என்று கூறினார்கள். ஆகவே தெற்கிலிருந்து வடக்கிற்கு திட்டங்கள் போய் நாம் செய்வதை அவர்களும் பின்பற்றுகிறார்கள் என்பதைக் குறிப்பிடுவதற்காகத்தான் இதை நான் இங்கு சொல்கிறேன்.

இந்த மாதிரியாக கல்வி சீரமைப்பு மகாநாடுகள் நல்ல முறையில் நடைபெறுவதும், மதிய உணவுத் திட்டம் மிகவும் சீரிய முறையில் நடைபெறுவதும் மிகவும் மகிழ்ச்சிக்குரிய விஷயம். இதில் ஏதோ ஒரு சில குறைபாடுகள் இருக்கின்றன என்பதற்காக இதை அடியோடு அகற்றிவிட முடியாது. அவ்விதம் ஏதாவது குறைகள் இருந்தால் அவற்றை நல்ல முறையில் நீக்கிவிட்டு இதை நடத்த வேண்டும். இவ்விதம் மதிய உணவுத் திட்டம் இருப்பதால், ஆசிரியர்களுடையவும் மாணவர்களுடையவும் கவனம் படிப்பிலிருந்து போய்விடுகிறது என்று கூறப்படுகிறது. அந்தமாதிரியாக இதற்கென்று நேரம் போய்விட்டாலும் பரவாயில்லை. இந்தக் காரியத்தை விடாமல் தொடர்ந்து நடத்திக்கொண்டு வரவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

அடுத்தபடியாக, மதுரை ஜில்லாவில் இதுவரை ஒரு விவசாயக் கல்லூரியும் கிடையாது. இது இந்த கல்வி மான்யத்தின்கீழ் வருகின்றதா இல்லையா என்று எனக்குத் தெரியாது. எப்படியிருந்தாலும் அங்கு ஒரு விவசாயக் கல்லூரியை ஏற்படுத்த வேண்டும். அதோடு மதுரையிலுள்ள காலேஜ்களை எல்லாம் சேர்த்து மதுரையில் ஒரு சர்வகலாசாலையை ஏற்படுத்தவேண்டும் என்றும் கேட்டுக்கொள்கிறேன். அதோடு நிலக்கோட்டையில் ஒரு டிரெயினிங் ஸ்கூலும், சோழவந்தானில் ஒரு பெண் பள்ளிக்கூடமும் (கேர்ள்ஸ் ஸ்கூல்) ஏற்படுத்தவேண்டும் என்று அமைச்சர் அவர்களைக் கேட்டுக்கொண்டு ரையை முடித்துகொள்கிறேன்

22nd March 1961]

* SRI K. S. G. HAJA SHERIFF (TEMPORARY CHAIRMAN): Sir, I rise to speak in support of the Demand moved moved by the Hon. Minister for Education. Sir, irres-by the Hon. Minister for Education. Sir, irrespective of any party consideration, if only a person very dispassionately sees the work done by this Department and the plan that they have formulated for improving education in our State, he shall have to speak in support of not only the Demand but he should also compliment the Government for achieving so much. It was a matter for very great satisfaction when the Hon. Minister announced that free education would be given to children, irrespective of caste or creed, upto Standard XI. In this connection, I would also suggest that compulsory education also should be given to all children upto School Final, as otherwise, I am afraid, we will be making a thing wherein we will not give these children minimum education and eradicate illiteracy. Sir, I would plead for opening of more technical courses, particularly commercial courses. We have programmed to forge ahead industrially and with the growth and development of industries, unless we give immense opportunities to train children in various aspects, it will be difficult to open more and more types of industries because there will come a time when there will not be suitable personnel to man industries. Similar is the case with commercial courses also. All these industries require people with good knowledge to administer. Unless there is good administration, industries cannot successfully run and to that extent we require more commercial courses to be opened, wherein there will be opportunities to get trained commercially.

Sir, one important thing that I would like to urge is that free educational concession, I understand, is limited to persons earning about Rs. 100 and this limit requires to be enhanced to at least Rs. 150 for this reason. A worker whether he is employed in a workshop or in a factory or even otherwise, is earning not less than Rs. 4 or 5 and if he is to educate a couple of children, it will be very difficult for him to educate them unless this limit is enhanced to Rs. 150. It may be possible that the Government have to incur more expenditure but it will be worthwhile incurring more expenditure in this direction.

Sir, I would like to suggest certain more facilities for teachiny staff. As the Government are anxious that labour should be given more housing facilities wherever they are working, the teaching staff should be given free residential quarters. I know that we have done a great deal to the teaching staff but this particular thing would go a very long way in satisfying them and also in giving them quite good compensation for their livelihood.

Sir, in general we have been doing very well in this respect. I hope that with the plan that the Government have formulated our State would become one of the foremost States in removing illiteracy. In 1951 the percentage of literacy in our State was 20·2 and in 1960–61 it is 30.2. From this we can find out the amount of headway that we have made and for all these things, we have to

[Sri K. S. G. Haja Sheriff] [22nd March 1961

congratulate the Government. We should also encourage them so that they can do much more good work in this important direction. Thank you, Sir.

SRIMATHI SATHIYAVANIMUTHU: சட்டமன்ற தற்காலிகத் தலைவர் அவர்களே, இந்த மான்யத்தின் மீது கொடுத்திருக்கக் கூடிய வெட்டுத் தீர்மானத்தை ஆதரித்து ஒரு சில வார்த்தைகள் கூற விரும்பு கிறேன். இந்தக் கல்வி மான்யத்தின் மீது அமைச்சர் அவர்கள் கொடுத் திருக்கக்கூடிய அறிக்கையில் பெண்களுக்குரிய பல் தொழில் பயிற்சி நிலை யங்கள் மூன்று துவக்க இருக்கிறோம் என்று குறிப்பிட்டிருக்கிறார்கள். அதை நான் வரவேற்கிறேன், பாராட்டுகிறேன். இவ்விதம் பாராட்டுவதின் மூலமாகக் குறைகளை எடுத்துச்சொல்லக்கூடாதா என்றால், இதில் நிச்சயமாக சில குறைகளை சொல்லித்தான் ஆக வேண்டும் என்கின்ற நிலைமை வந்து சேருகின்றது. ஜாதி சமய வேறுபாடின்றி எல்லோருக்கும் சலுகை கொடுக்க வேண்டும் என்ற அடிப்படையில் சில திட்டங்களை அமைச்சர் அவர்கள் கொண்டுவந்திருக்கிறார்கள். ஜாதி, சமய அடிப்படையில் வித்தியாசங்கள் இருக்கின்ற வரையிலும் அவர்களுக்குச் சலுகை காட்ட வேண்டும் என்பது ஊரறிந்த உண்மையாகும். இதுவரை இந்த அடிப்படையிலே கல்விக்கு அளிக்கப்பட்டுவந்த சலுகை இனிமேல் பொருளாதார அடிப்படையில் கொடுக்கப்படும் என்றும், இவ்விதம் 11-வது வகுப்பு வரையிலும் பொரு ளாதார அடிப்படையில் சலுகைகள் கொடுக்கப்படும் என்று சொல்லப்பட்டி ருக்கிறது. இதுவரை சாதி, சமய அடிப்படையில் சலுகைகள் கொடுக்கப் பட்டு வந்த போதிலும் கூட ஆண்டு ஒன்றுக்கு ரூ. 1,200-க்கு மேல் ஊதியம் பெறுகின்றவர்களுக்கு இந்தவிதமான சலுகை இல்லாமல் இருந்தது. இப்போது சாதி, சமய வேறுபாடுகளை ஒழிக்க விரும்புகிறோம் என்று சொல்லுகின்ற நேரத்தில் சமுதாயத்தில் இருந்துவருகின்ற மேடுபள்ளங்களை எல்லாம் ஒரே நிலையில் கொண்டு வரவேண்டும் என்று விரும்புகின்ற நேரத்தில், சமுதாயத்தில் பொருளாதார அடிப்படையில் இல்லாமல் கொடு க்கப்பட்டுவந்த சில சலுகைகள், உத்தியோக உயர்வு, போன்ற பல சலுகை கள் பாதிக்கப்படக்கூடாது என்றுதான் எங்களைப்போன்றவர்கள் கருது கின்றார்கள். சாதி, சமய அடிப்படையைவிட்டு, தகுதி, திறமை போன்றவை களை மட்டும் கருத்தில் எடுத்துக்கொண்டு, உத்தியோகங்கள் போன்றவைகள் கொடுக்கப்படுமானால், இப்போதுள்ள சூழ்நிலையில் சமுதாயத்தில் கீழ்நிலை யில் இருக்கின்ற மக்கள் பாதிக்கப்படுவார்கள் என்றுதான் என்போன்றவர் கள் அஞ்சுகின்றோம். இதைப்பற்றி "பட்ஜெட்" விவாதத்தில்கூட நான் குறிப்பிட்டிருக்கிறேன். அதைத்தான் இப்போதும் உங்கள் மூலமாக கல்வி அமைச்சர் அவர்களைக் கேட்டுக்கொள்வதெல்லாம். இதற்கான விளக்கத்தை அமைச்சர் அவர்கள் இதே மன்றத்தில் தரவேண்டும். சமுதாயத்தில் இன்றைக்கு தாழ்த்தப்பட்டவர்களுக்குக் கிடைத்துவந்த சலுகைகள், உத்தி யோக உயர்வுகள் போன்றவைகளுக்கு எந்த விதமான குந்தகமும் ஏற்படாது என்பதை உறுதிமொழியாகத் தரவேண்டும். தகுதி, திறமை இவைகளைக்கொண்டு சலுகைகள் கொடுக்கப்படும் போது, பின்தங்கிய மக்கள் எந்தவிதத்திலும் பழிவாங்கப்படமாட்டார்கள் என்கின்ற உறுதியை அமைச்சர் அவர்கள் இந்த மன்றத்தில் தரவேண்டும் என்று மிகவும் பணிவன்போடு கேட்டுக்கொள்கிறேன்.

மதிய உணவு, இலவச உடை இவைகள் மாணவர்களுக்குத் தருகிறோம் என்கிற திட்டத்தை இந்த மன்றத்திலேயே நாம் பல முறை பேசியிருக் கிறோம். மதிய உணவு, இலவச உடை இவைகள் தருகிறோம் என்று ஆசை காட்டக்கூடிய அதே நேரத்தில் இதற்கான நிதியை வசூல் செய்வ தற்காக மாணவர்கள் அனுப்பப்படுகிறார்கள். ஆசிரியர்கள் இதற்காக எந்த அளவு பயன்படுத்தப்படுகிறார்கள் என்பதைப்பற்றி இந்த மன்றத் தில் பல முறை எடுத்துக்கூறப்பட்டிருக்கின்றன. குழந்தைகள் பள்ளிக்கு வரவேண்டும் என்கிற நோக்கத்தில் அவர்களுக்கு இந்த விதமான ஆசை யைக்காட்டி நாம் அழைக்கின்றோம். குறிப்பாக, "பெண் குழந்தை களுக்கு இலவசமாக ஆடைகள் தருகிறோம்" என்று அழைக்கின்ற நேரத் தில் இதற்கான பணத்தை வாங்கி வரும்படி மாணவர்களிடத்தில் ஆசிரியர் கள் கூறுகிறார்கள். அந்தக் குழந்தை வீட்டுக்குப்போய், தாய், அல்லது

22nd March 1961] [Srimathi Sathiyavanimuthu]

தந்தை இடத்தில் "ஒரு அணு, இரண்டு அணு தாருங்கள்" என்று கேட்கிறது. இல்லாவிட்டால் "அரிசியாவது கொடு" என்று கேட்கிறது. கையில் பணம் இல்லாத அந்தத் தாயோ அல்லது தந்தையோ திடீரென்று வருகின்ற ஆத்திரத்தில் அந்தக் குழந்தையை வீட்டில் போட்டு அடிக்கிறார்கள்

(Deputy Speaker in the Chair.)

பள்ளியிலே ஆசிரியர் அடிக்கிறார்—வீட்டிலே பெற்றோர் அடிக்கிறார்கள். நாமோ குழந்தைகளுக்கு "உணவு தருகிறோம், உடை தருகிறோம்" என்று ஆசை காட்டி வரவழைத்துவிட்டு இந்த மாதிரி செய்வது சரியல்ல. எனவே, இதனை வரிப்பணத்திலிருந்து தரவேண்டும். நிதி வசூல் செய்வதில் அதிகாரிகள் தான் வசூல் செய்யவேண்டும். ஆசிரியர்கள் நிர்ப்பந்தப் படுத்தப்படுவதால், மாணவர்கள் நிர்ப்பந்தப்படுத்தப்படுவதால் இதனால் பொது மக்களிடத்தில் வெறுப்பு ஏற்படுகிறது. கேலியாகச் சொல்லும்போது, வரியை வாங்குகிற சர்க்கார், நமக்கெல்லாம் இப்படி கல்வி தருகிறோம் என்று சொல்லி, பெற்றோர்களைப் பணம் கேட்கிறது, "கௌரிக்குக் கல்யாணமாம், அவரவர் வீட்டில் வைபோகமாம்" என்று சொல்வது போல இருக்கிறது—என்று மக்கள் வேதனை அடைகிறார்கள். இன்னும் வேதனைக்குரிய ஒரு செய்தியை இங்கே சொல்ல ஆளாக்கப்பட்டேன் என்று வருந்துகின்றேன். பள்ளிகளில் கல்வி அதிகாரியின் மறைந்த ஒரே ஒரு மகனின் திருவுருவப் படத்தைத் திறந்து வைக்கும்படி வற்புறுத்தப்படுகிறார்கள் என்று வேதனையோடு தெரிவித்துக்கொள்கிறேன். பெற்ற மனம் எப்படி வேதனைப்படும் என்பது எனக்குத் தெரியும். இருந்த ஒரே பிள்ளை இறந்துவிட்டால் பெற்ற உள்ளம் வேதனைப்படும்—அப்படி வேதனை தரத்தக்க ஒரு சம்பவத்தைப் பற்றி சொல்ல நேரிட்டதைக் குறித்து வருத்தப்படுகிறேன். இதனால் பரவலாக எண்ணங்கள் ஆசிரியர்கள் மத்தியிலும், பொது மக்கள் மத்தியிலும் பரவுகிறது. "அதிகாரிகளின் நல்லெண்ணத்தைப் பெறவேண்டுமானால், அவரது மகனின் படத்தைத் திறந்து வைத்தால் சரியாகிவிடும்" என்ற எண்ணம் ஏற்படுகிறது. படத்தைத் திறந்து வைப்பதில் அமைச்சர்கள் கலந்துகொள்ளுகிறார்கள். இதனால் தவறான எண்ணம் வரும்போது மக்கள் வேதனைப்படுகிறார்கள், அதைப்பற்றிச் சொல்வதற்கு நான் மிகவும் வருத்தம் அடைகிறேன். மிகவும் கவலைகொள்கிறேன். மேலும் அதிகாரிகள் பல இடங்களில் பள்ளிச் சீரமைப்புத் திட்டம் மூலமாக கல்விக்குத் தேவையான பொருள்களை வசூல் செய்கிறார்கள். அதிகாரிகளும், மற்றவர்களும், பொது மக்களிடத்தில் கல்விக்காக நிதி என்று சொல்லி வசூல் செய்து, அமைச்சரது கையில் நிதி தருகிறோம் என்று தருகிறார்கள்—தருகிறவர்கள் கை உயருகிறது, அமைச்சரது கை தாழ்கிறது. கொடுக்கும்போதும் வாங்கும்போதும் கொடுக்கும் நேரத்திற்கு அடுத்தபடி நான் கேட்பதைத் தரவேண்டும், அப்போது உங்கள் கை உயரவேண்டும், எங்கள் கை தாழவேண்டும் என்ற எண்ணத்தோடு கொடுப்பதாக எங்களைப்போன்றவர்கள் கருதுகிறோம். அப்பேற்பட்ட நிதி வசூல் செய்யாது, வேறு முறையில், கலா நிகழ்ச்சி மூலமாக வசூல் செய்தால் உண்மையில் பாராட்டத் தகுந்ததாக ஆகும், ஒருவரும் குறை சொல்லவும் முடியாது.

ஆதாரக் கல்வி குறித்துச் சொல்லும்போது, "ஆரம்பப் பள்ளிகளில் இது கூடாது", என்று சொல்ல விரும்புகிறேன். ஆரம்பப்பள்ளிகளில் படிக்கும் பச்சைப் பாலகன் என்று சொல்லுகிற சிறிய குழந்தைகளுக்கு ஆதாரக் கல்வி என்ற பெயரால் நூல் நூற்க தக்ளி தரப்படுகிறது. ஒரு குழந்தை—மதுரை மாவட்டத்தைச் சேர்ந்த குழந்தை என்று நினைக்கிறேன்—7 வயது குழந்தை—பகல் நேரத்தில், ஆசிரியர் அதன் கையில் தக்ளியைக் கொடுத்து நூற்கச் சொல்லி விட்டுச் சென்று விட்டார். அக்குழந்தைக்கு உறக்கம் வந்திருக்கிறது, உறங்கிக்கொண்டே நூல் நூற்றுக்கொண்டிருந்தது, உறக்கத்தினால் மயக்கமுற்று "தக்ளி"யின்மேல் விழுந்து சற்று கண்ணுக்கு அப்பாற்பட்ட இடத்தில் பொத்துக்கொண்டு காயப்பட்டது. கொஞ்சம் தவறியிருந்தால் கண்ணையே குத்தியிருக்கும். 7 வயதுக் குழந்தைக்கு "தக்ளி" கொடுத்து நூல் நூற்கச் சொல்வதைத் தானா ஆதாரக் கல்வி என்று சொல்லுகிறோம்? ஆசை காட்டி வரவேற்று இப்படி வேலை

வாங்குவதற்காகவா பிள்ளைகளைப் பள்ளிக்கு அனுப்பினேன் என்று பெற்றோர்கள் வேதனைப்படுகிறார்கள். இப்படிப்பட்ட வேதனை தரக்கூடிய கல்வி ஆரம்ப பள்ளிகளில் வேண்டாம். வேண்டுமானால் உயர்தரப் பள்ளிகளில் பயிற்சியைத் தரவேண்டும் என்று கூறிக்கொள்ளுகிறேன்.

இன்னும் இந்தத் துறையில் அநேக கவனக் குறைகள் இருக்கின்றன. என்னிடத்தில் ஒரு புகார் சொல்லப்பட்டது. 1958-ம் ஆண்டில் ஒரு பெண் ஈ.எஸ்.எல்.சி. பரீட்சை எழுதியிருக்கிறாள். எழுதிய பிறகு தேறியதற்கு உரிய அதிகாரபூர்வமான "சர்டிபிகேட்" கொடுத்திருக்கிறார்கள். சாரதா வித்யாலாய ஆசிரியர் பயிற்சிப் பள்ளியில் இடம் பெற்று இரண்டு ஆண்டு பயிற்சி பெற்றிருக்கிறாள். நாளை 23-ம் தேதி பரீட்சை. ஒரு வாரத்திற்கு முன்னர் அந்தப் பள்ளி அதிகாரிகள் "நீ போகஸ் சர்டிபிகேட் வாங்கிக் கொண்டு வந்து பள்ளியில் சேர்ந்திருக்கிறாய், ஆகையால் பரீட்சை எழுதக் கூடாது" என்று சொல்லி பள்ளியை விட்டுச் செல்லவேண்டுமென்று அனுப்பிவிட்டனர். பொய் சர்டிபிகேட்டாக இருந்தாலும் யாரால் தரப் பட்டது ? அதிகாரி கையெழுத்திட்டுத் தரப்பட்டிருக்கிறது. அதைக் குறித்து சர்க்கார் கெஜட்டில் வெளியாகியிருக்கிறது. குறிப்பிட்டு அந்தத் தேதியை என்னால் சொல்ல முடியும்—போர்ட் செயின்ட் ஜார்ஜ் கெஜெட்டில் அந்தப் பெண் தேர்ச்சி பெற்றிருக்கிறாள் என்று வெளியாகி யிருக்கிறது ; சர்டிபிகேட்டும் இருக்கிறது ; பயிற்சிப் பள்ளியில் சேர்க் பட்டிருக்கிறாள். இரண்டு ஆண்டுகள் படித்திருக்கிறாள். 23-ம் தேதி உரிய தேர்ச்சி பெறுவதற்கு பரீட்சை எழுதவேண்டும் என்று சொல்லும்போது பொய் என்று சொன்னால், இது யார் செய்த குற்றம் ? இந்தக் குற்றத்தைக் கண்டுபிடிக்க இரண்டு ஆண்டு காலமா ? இரண்டு ஆண்டு காலமாகக் குற்றம் கண்டுபிடிக்கவில்லையென்றால் அதற்கு இந்தப் பெண் தானா பழி வாங்கப்பட வேண்டும் ? பரீட்சை எழுத அனுமதி கொடுத்துவிட்டு, குறை எங்கே என்று கவனிக்கக் கூடாதா ? பரீட்சை எழுத அனுமதி மறுக்கப்பட்ட அந்தப் பெண் ஒரு ஆதித் திராவிடப் பெண்—மதுராந்தக வட்டத்தைச் சேர்ந்த பெண். கண்டபடி போகஸ் சர்டிபிகேட் தரப்படு கிறது, அரசாங்கத்தால் வெளியிடப்படுகிற கெஜட்டில் வெளியாகிறது என் றால் இப்பேர்ப்பட்ட குற்றங்கள் நடைபெறக்கூடாது என்று கூறிக்கொள் கிறேன்.

* SRIMATHI A. S. PONNAMMAL : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, அமைச்சர் அவர்களால் கொண்டுவரப்பட்ட இந்த மான்யக் கோரிக்கையை ஆதரித்து ஒரு சில வார்த்தைகள் கூறிக்கொள்ள விரும்புகிறேன்.

நம் நாட்டில் பொருளாதார முன்னேற்றத்தைக் கொண்டுவரவேண்டு மென்றால், அதற்கு மூல காரணம், முதல்படியாக உள்ளது கல்வி தான். அந்த அடிப்படையில் பட்டி தொட்டிகளிலும் உள்ளவர்கள் கல்வி அறிவு பெறவேண்டும், அறிவு வளர்ச்சி பெருகி மக்களை நல்ல அறிவு பெறச் செய்யக் கூடிய முறையில் அமைச்சர் அவர்கள் வகுத்த இந்தத் திட்டம் எல்லா மக்களும் போற்றக் கூடிய அளவில் இருந்துகொண்டிருக்கிறது. உதாரணமாக பெண்கள் கல்வியை எடுத்துக்கொண்டால் ஆண்களைக் காட்டி லும் எவ்வளவோ பெண்கள் கிராமப்புறங்களில் இருந்துகொண்டிருக்கிறார் கள். அவர்களும் சம அந்தஸ்தை அடையவேண்டுமானால், நம்மிடத்தில் நல்ல திறமையாக வேலை செய்யக் கூடிய டைரக்டர் இருந்தாலும்கூட பெண்களுக்கு ஒரு தனி டைரக்டரை நியமித்து ஆங்காங்கு பெண் கல்வியை உயர்த்த அந்த அடிப்படையில் காரியம் செய்தால் நன்றாக இருக்கும்.

ஆதாரக் கல்வியையும் விருத்தி செய்வதில் அந்த அடிப்படையில் அதற்காகவும் தனியாக ஒரு டைரக்டரை நியமித்தால், ஆதாரப்பள்ளிகள் நல்ல முறையில் நடக்க, வேலை வாய்ப்பு இல்லாமல் அநேகம் பேர்கள் கஷ்டப்படுகிறார்களே அந்த நிலைமையைப் போக்க வசதியாக இருக்குமென்று நான் கருதுகிறேன். நாம் இன்றைய தினம் எத்தனையோ கோடி செலவு செய்கிறோம். இதையும் அமைச்சர் அவர்கள் நன்றாக ஆராய்ச்சி செய்து பார்த்தால் நன்றாக இருக்கும்.

22nd March 1961] [Srimathi A. S. Ponnammal]

தவிர குழந்தைகளுக்கு ஜாதி மத வித்தியாசம் இல்லாமல் கல்வி வசதி அளிக்க வாய்ப்பு ஏற்படுத்தியிருக்கிறோம். அதே போல குருடர்கள், ஊமைகள், கால் இல்லாதவர்கள் இவர்களின் எண்ணிக்கை அதிகமாக இருக்கிறது—அவர்களுக்குத் தனியாக ஒரு திட்டத்தைத் தயார் செய்து இப்பேர்ப்பட்ட குழந்தைகள் நன்றாகப் படிக்கவேண்டுமென்பதற்காக தக்க தொரு நடவடிக்கை எடுத்தால் நன்றாக அமையும் என்று நான் கருது கிறேன். அதையும் அமைச்சர் அவர்கள் செய்வார்கள் என்ற நம்பிக்கை இருக்கிறது.

பகலுணவுத் திட்டத்தைப் பற்றிப் பேசும்போது அதில் சில குறைபாடு கள் இருக்கின்றன என்பதை இங்கே சுட்டிக்காட்டினார்கள். பெற்றோர்கள் 4 ந.பை. கொடுப்பது பற்றி பேசப்பட்டது. அதைப்பற்றி பலர் குறை கூறினார்கள். இன்றைக்கு இந்தத் திட்டத்தைப் பற்றி நம்முடைய தேசமே, ஏன் அயல்நாடுகள் போன்றவைகள்கூட தமிழ்நாட்டிலே நடக்கக் கூடிய இந்தத் திட்டத்தைப் போற்றி, தமிழ் அமைச்சரவையை வாழ்த்தி, அதைத் தங்கள் நாடுகளிலும் பின்பற்ற வேண்டுமென்ற ஒரு சூழ்நிலை இப்போது ஏற்பட்டுக்கொண்டு வருகிறது. இன்னும் இதை நல்ல முறையிலே செய்ய வேண்டுமானால், நாம் 6 ந.பை.-க்குப் பதிலாக அரிசியாகக் கொடுத்துவிட்டு ஜனங்கள் கொடுக்கும் 4 ந.பை.-க்குப் பதிலாக அவர்களிடமிருந்து விறகும் காய்கறியும் கொடுத்தால் போதுமானது. இம்மாதிரியாக ஒவ்வொரு வீட்டிலுமுள்ள பெற்றோர்கள் கொடுத்துதவுவதற்குத் தயாராக முன்வருகிறார்கள் என்பதை இந்த நேரத்திலே கூறிக்கொள்ள விரும்பு கிறேன்.

இதேபோன்று இப்போது உடைகளும் தருகிறார்கள். இந்த உடைகள் கொடுக்கும்போது, 11 வயதுள்ள எல்லாப் பிள்ளைகளுக்கும், மாணவ மாணவிகளுக்கும் தாராளமாகத் தைத்துக்கொடுப்பதற்குப் பெற்றோர்களும் பிறரும் முன்வந்து கொண்டிருக்கிறார்கள். இந்த அடிப்படையில் பெரிய பணக்காரரிலிருந்து, கீழே இருக்கக்கூடியவர்கள் வரை ஒரே யூனிபாரம் தைத்துக்கொள்ள வேண்டுமென்ற ஒரு நிலைமை ஏற்படச் செய்வார்களா னால், அது இன்னும் சிறப்பாக இருக்குமென்று நான் கருதுகிறேன். நாங்கள் தைத்துக்கொடுக்கிறோம் என்று அவர்கள் மிகுந்த உற்சாகத்தோடு முன்வருகிறார்கள். அப்படித் தைத்துக்கொடுக்கும் உடைகளைக் குறிப்பாகப் பெண்களுக்குக் கொடுக்கிறார்கள், அதை நான் வரவேற்கிறேன். ஆனால் பெண்களுக்கு இப்படிக் கொடுக்கும் உடையானது ஒரே அளவாக இருப்ப தால் அதாவது 10 வயதுப் பெண்ணுக்கு என்று வயதைக் குறிப்பிட்டு அந்த விதத்திலே இந்த உடைகளைத் தைப்பதால், சிலருக்கு முழங்காலுக்கு மேல்கூட இந்த உடைகள் இருக்கக்கூடிய ஒரு நிலைமை ஏற்படுகிறது. அந்த நிலைமையை மாற்றியமைக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். இன்னும் இங்கே நம்முடைய மாகாணத்தைப் பொறுத்தவரையில் 8-வது, 9-வது, 10-வது என்று அதுவரை படித்துவிட்டு, அதிலே பாஸ் ஆகாமல், அதோடு வேலையில்லாமலும் இருக்கக்கூடியவர்கள் ஆண் களும், பெண்களும் அநேகம் பேர்கள் இருக்கிறார்கள். அவர்களுக்கு எந்த விதமான வேலையும் கிடைப்பதில்லை. அப்படி என்ன வேலை செய்யப் போகிறாய் என்று கேட்டால், அவர்கள் ப்யூன் வேலைக்குப் போகப் போகி றோம் என்று சொல்லக்கூடிய அளவிலே இருக்கிறார்களே தவிர, அவர் களுக்கு ஒரு வேலை வாய்ப்பு கிடைப்பதற்கு இல்லாமல் இருக்கிறார்கள். இதுமாதிரி 8-வது வரை படித்து விட்டுப் பல பேர்கள் கிராமங்களில் இருக் கிறார்கள். அவர்களுடைய இந்தக் குறையைப் போக்கவேண்டுமென்றால் அதற்கு ஒரு பாலிடெக்னிக் போன்ற ஒரு தொழிற்கல்வியை விஸ்தரித்து நடத்தலாம். அப்படி ஒரு பாலிடெக்னிக்கை ஏற்படுத்தி அதிலே இப்படி 8 முதல் 10 வரை படித்துள்ள மாணவர்களைச் சேர்த்து, அவர்களுக்கு ஓரளவு வேலை வாய்ப்பு கொடுக்கின்ற அளவிலே செய்தால், இன்னும் நன்றாக இருக்கும் என்பதைக் கனம் அமைச்சர் அவர்களுக்குச் சுட்டிக் காட்ட விரும்புகிறேன்.

அதோடு பள்ளிக்கூடங்களுக்கு அருகிலே ஏழை ஆசிரியர்களுக்காக வீடுகள் கட்டும்படி அரசாங்கம் சென்ற ஆண்டில் எங்களுடைய மதுரை ஜில்லாவில் 40,000 ரூபாய் ஒதுக்கியது. நாங்கள்கூட அதற்காக

[Srimathi A. S. Ponnammal] [22nd March 1961

நிலங்கள் கொடுத்தோம். அந்த ஊரிலே உள்ள ஜனங்கள் மகஜர் கொடுத்தும் அந்த நிலத்தை ரிஜிஸ்டர் செய்து கொடுத்தார்கள். அப்படி நிலத்தைக் கொடுத்து, ஒதுக்கப்பட்ட 40,000 ரூபாயைக் கட்டிடத்திற்குச் செலவு செய்யாமல், அது டீச்சிங் கிராண்டுக்காகக் கொடுக்கப்பட்டிருக்கிறது என்று கலெக்டர் அவர்கள் சொல்லிக்கொண்டிருக்கிறார். பள்ளிக்கூடத்திலே வேலை செய்யக் கூடியவர்கள் தாங்கள் தங்குவதற்கு இடமில்லாமல், ஓரிடத்தில் சாமானை வைத்துக்கொண்டும், ஓரிடத்தில் சமைத்துக்கொண்டும், ஒரு புறத்திலே மற்றவைகளை வைத்துக்கொண்டும், தங்கள் வீட்டைப் பள்ளிக்கூடத்திலே வைத்துக்கொள்ளக்கூடிய ஒரு நிலைமைதான் இப்போது எங்கு பார்த்தாலும் இருக்கிறது. இப்படி மிகவும் கஷ்டமான நிலைமையில் இருக்கக் கூடியதை அங்கே போய்ப் பார்க்கும்போது காணமுடிகிறது. ஆகவே ஆங்காங்கே பள்ளிக்கூடங்களிலே வேலை செய்யக்கூடிய ஆசிரியர்களுக்கு சர்க்கார் பணம் கொடுத்தாவது இல்லாவிட்டால் அந்தந்த கிராமங்களிலுள்ள பொது மக்கள் பணம் போட்டாவது அவர்களுக்கு வீடுகள் கட்டிக்கொடுக்கவேண்டியது மிகவும் அவசியமாகும். அப்போதுதான் அவர்கள் இன்னும் திறமையாக வேலை செய்ய முடியும். ஆகவே இதைக் கனம் அமைச்சர் அவர்கள் தீவிரமாக யோசித்து ஆவன செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

உதாரணமாக, ஏழை ஹரிஜன பெண் டீச்சராக இருந்தால் அவர்கள் மிகவும் கஷ்டப்பட வேண்டியிருக்கிறது. அவர்களை ஊரில் கிணற்றில் தண்ணீரைக்கூட எடுப்பதற்கு அனுமதிப்பதில்லை. ஆனால் என்னுடைய தொகுதியில் அப்படியில்லை. ஒன்றிரண்டு இடங்களில் அப்படி இருந்தது. அதைக்கூட சமரசம் செய்து வைத்துவிட்டோம். அப்படி இருந்தாலும் இப்படிப்பட்டவர்களுக்கு கிராமத்திலே தங்குவதற்கு வீடுகள்கூட கொடுக்க மாட்டார்கள். சில இடங்களில் ஜாதி இந்துக்கள் அவர்களை இன்னும் தீண்டக்கூட முடியாத நிலைமையில் இருக்கிறது. ஆகவே இதையெல்லாம் கனம் அமைச்சர் அவர்கள் நன்கு கவனித்து அவர்களுக்கு வீடு கட்டிக் கொடுக்கும் ஒரு நிலைமையை உருவாக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

இதைத் தவிர, இப்போது சிரமத்தோடுதான் பள்ளிக்கூடத்திற்குப் பக்கத்தில் நிலம் கிடைக்கிறது. ஒரு சில கிராமங்களிலே பூமிதானம் கேட்ட போது, நிலத்தைக் கொடுத்துவிட்டு, இப்போது அந்த நிலத்தைக் கொடுக்க முடியாது என்று சொல்கிறார்கள். அதேபோல்தான் பள்ளிக்கூடத்திற்காக நிலத்தைக் கொடுத்துவிட்டு, இப்போது அந்த நிலத்தைக் கொடுக்க முடியாது என்று சொல்கிறார்கள். நீங்கள் தானே கையெழுத்துப்போட்டு, பள்ளிக்கூடத்திற்காக என்று நிலத்தைக் கொடுத்தீர்கள் என்று கேட்டால், அப்போது ஏதோ கேட்டார்கள், கையெழுத்துப்போட்டோம், இப்போது கொடுக்க முடியாது என்று சொல்கிறார்கள். இப்படிப்பட்ட ஒரு நிலைமை ஒரு சில இடங்களில் இருந்துகொண்டு வருகிறது. இதிலே நாம் சரியாகக் கவனம் செலுத்தி, அந்த நிலங்களையெல்லாம் பள்ளிக்கூடங்களுக்கு வாங்கிக்கொடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

கடைசியாக ஒன்றைக் கூறிக்கொள்ள விரும்புகிறேன். இப்போது நிறைய ஹையர் கிரேடு டீச்சர்களை உற்பத்தி செய்து அவர்கள் வேலை இல்லாமல் மிகவும் கஷ்டப்படுகிறார்கள். இவர்களுடைய புரொடக்ஷன் அதிகமாகி விட்டதால், செகன்டரி கிரேடு டீச்சர்களை வேலைக்கு அமர்த்திக்கொள்வதால், இவர்கள் வேலை இல்லாமல் திண்டாடக்கூடிய நிலைமையில் இருக்கிறார்கள். இந்த நிலையைப் போக்க வேண்டுமென்றால், ஒன்று ஹையர் கிரேடு டீச்சர்கள் பயிற்சிப் பள்ளியை எடுத்துவிட்டு, அந்த இடத்தில் செகன்டரி கிரேடு பயிற்சிப் பள்ளியாக மாற்றவேண்டும், அதோடு அல்லாமல் புதிதாக நிறையப் பள்ளிக்கூடங்களை ஏற்படுத்தி, அதிலே இவர்களையெல்லாம் உடனடியாக வேலைக்கு அமர்த்திக்கொள்ள வேண்டும். இன்னும் எங்கெங்கே அதிகமாக பள்ளிக்கூடங்களை ஏற்படுத்த வேண்டுமோ, அங்கெல்லாம் பள்ளிக்கூடங்களை அதிகமாக ஏற்படுத்த வேண்டும். அமைச்சர் அவர்கள்கூட பதில் சொல்லும்போது, இந்தப் பயிற்சிப் பள்ளியிலே கிராமங்களிலே வசதி குறைவாக இருக்கின்ற காரணத்தினால் அதிகம் தேறுவதில்லை என்றும், நகரங்களிலே இதற்கு

22nd March 1961] [Srimathi A. S. Ponnammal]

வசதி அதிகமாக இருந்தும் மாணவர்களே வேறு துறையில் கவனம் செலுத்துவதால் சரியாகத் தேறுவதில்லை என்றும் கூறினார்கள். அதற்கு அவர்களை முன்னேற்றுகின்ற வகையிலே, அவர்கள் நன்கு கவனம் செலுத்திப் படிக்கக்கூடிய வகையிலே, கிராமங்களிலே ஹாஸ்டல் வசதிசெய்து கொடுத்தால், அவர்கள் அரசாங்கத் தேர்விலே அதிகமான அளவுக்குத் தேறுவார்கள் என்று கூறிக்கொண்டு, என்னுடைய வார்த்தைகளை முடித்து கொள்கிறேன்.

* **Sri V. SUBBIAH :** கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இன்றைய நிதி நிலை அறிக்கையைப் பற்றிக் குறிப்பிட வேண்டு மென்றால், இந்த ஆண்டின் நிதி நிலை அறிக்கையிலேயே இது மிக முக்கியமான இனம் என்று சொல்லக்கூடிய பெருமை இந்த மானியத் திற்கு இருக்கிறது என்று சொல்லலாம். இந்தப் பெரிய இனத்திற்கு 21 கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கிறது. நம்முடைய மாகாணத்தின் மொத்த வருமானத்திலே நான்கில் ஒரு பகுதியாக, ஒரு பெரும் பகுதியான தொகையை இந்த மானியத்திற்கு ஒதுக்கியது பெருமைபடக்கூடிய விஷய மேயாகும். இது வரவேற்கக் கூடியதுமாகும். ஆனால் இது எந்த அள வில் செயல்படுகிறது, அதனுடைய தன்மை என்ன என்று பார்க்கும் போது, பெரும்பாலும் மக்கள் குழப்பமான நிலையில்தான் இருக்கிறார்கள் என்ற காரணத்திற்காகத்தான், இந்த வெட்டுப் பிரேரணையை ஆதரித்துச் சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன்.

குறிப்பாக, இன்றைக்கு கிராமப் பகுதியிலே இதிலே ஒரே குழப்பம் தான். குழந்தைகளிடத்திலே காந்தியடிகளுடைய திட்டமான பேசிக் கல்வி முறையும், அன்று இந்த நாட்டை ஆண்ட அந்நியர் பிரிட்டிஷார் ஆண்ட காலத்தில் இருந்த கல்வித் திட்டமும் இருக்கிறது. இந்த இரண் டுக்கும் ஒரே குழப்பம். இந்த இரண்டிற்கிடையே சீனியர் பேசிக் பள்ளியில் படிப்பவர்களுக்குகிடையேயும், உயர் நிலைப் பள்ளிகளிலே படிப்பவர்களுக் கிடையேயும் ஒரே கஷ்டமும், குழப்பமும்தான். அவர்களுடைய தரத்தைப் பார்க்கும்போது பழைய நிலைமையிலே இருக்கக்கூடிய திண்ணைப் பள்ளிக்கூடத்திலே இருக்கக்கூடிய தரத்திற்கும் குறைவாக இருக்கிறது என்று சொல்லலாம். நான்கூட திண்ணைப் பள்ளிக்கூடத்தில் எண் சுவடி, குழிப்பெருக்கு முதலியவைகளைப் படித்தவன். கணக்கிலேயும், ஆங்கி லத்திலேயுங்கூட பார்ப்போமேயானால், இன்று தரம் மிகக் குறைந்த அளவில்தான் இருக்கிறது. பள்ளித் தரம் தான் குறைந்திருக்கிறது என்றால், ஒழுக்கத்திலும் அவர்களுடைய தரம் குறைந்திருப்பதை நினைக் கும்போது மிகவும் வருந்த வேண்டியிருக்கிறது. இந்த நிலை இன்றைக்கு எங்கு பார்த்தாலும் அநேகமாக இருக்கிறது. தொழிற் கல்வியைப் பற்றி ஒன்றும் சொல்வதற்கில்லை. ஆனால் இன்றுள்ள நிலையைப் பார்க்கும் போது, அது எங்கே கொண்டுபோய் விடுமோ என்றுதான் பயமாக இருக்கிறது. கலாசாலைகளிலும், தொழிற் கலாசாலைகளிலும் மாணவர் களைத் தேர்ந்தெடுக்கும் குழுவிலும் இப்படிப்பட்ட ஒரு நிலைமைதான் இருந்து கொண்டிருக்கிறது. அதிலும், கிராமப் பகுதிகளிலே இருந்து கலாசாலைக்கு வரும்போது, மாணவர்களுடைய தரம் எப்படி இருக்கிறது என்றால், மிகவும் குறைந்த அளவிலேதான் இருக்கிறது. அதனால் பெரும் பாலும் அவர்கள் புறக்கணிக்கப்படுகின்ற ஒரு நிலைமைதான் இன்று பரவலாக இருந்து கொண்டிருக்கிறது.

அது மட்டுமல்ல. இன்றைக்கு நாம் பார்ப்போமானால், பயிற்சிபெற்ற ஆசிரியர்கள் நிறைய பேர், ஆயிரக்கணக்கான பேர்கள் வேலையில்லாது இருக்கிறார்கள். கிராமப் பகுதிகளிலே சீனியர் பேசிக் பயிற்சி பெற்று விட்டு, நிறைய பேர்கள் தெருவிலேதான் நின்று கொண் டிருக்கிறார்கள். அவர்களையெல்லாம் என்ன செய்யப் போகின்றீர்கள் ? அவர்கள் எல்லாம் இன்றைக்குக் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிற நிலையைத் தான் பார்க்கிறோம். இது மாறவேண்டும். ஆனால் அரசாங்கம் ஒன்று சொல்ல முடியும். எதிர் காலத்திலே காந்தியார் கல்வி இந்த நாட்டிலே வரப்போகிறது, அப்போது இந்த நிலைமை இருக்காது என்று சொல்ல லாம். அப்போது வரும்போது பார்த்துக் கொள்ளலாம். இன்றைக்கு அவர்கள் இப்போது சும்மாத்தானே இருந்து கொண்டிருக்க வேண்டும்?

[Sri V. Subbiah] [22nd March 1961

இன்றைக்கு இந்த நிலைமைகளை யெல்லாம் பார்க்கும்போது கிராமத்திலே உள்ள மாணவர்கள், நகரத்திலே உள்ள கலாசாலை வகுப்புகளுக்குப் போகும்போது, அவர்களுடைய நிலை இன்றைக்கு ஒரே குழப்பமாகத்தான் இருக்கிறது. இன்றையக் கல்வித் திட்டமும், அரசாங்கத்தினுடைய நிலையுமே அத்தன்மையதாகத்தான் இருக்கிறது. மேலும், இப்போதுள்ள பெருவாரியான கலாசாலைகளில் பாஷை தமிழ் மொழியாக இருந்து கொண்டிருக்கிறது. இதிலேயும் பொது மக்களிடையே ஒரே குழப்பம் தான். அதேபோல் இந்த நயா பைசாவிலும், மெட்ரிக் எடையிலும் மக்களிடையே ஒரே குழப்பம்தான். கல்வித் துறையிலும் மாணவர்களிடையே ஒரே குழப்பம்தான். மேலும் கலாசாலைகளில் பாஷைக் குழப்பம். மக்களிடையே நடை முறையிலே இப்படி இருக்கக் கூடிய குழப்பத்தையும், சிக்கலையும் எந்த ரூபத்திலே தீர்க்க செயல்பட வேண்டுமென்பதை யோசிக்க வேண்டும். அது மட்டுமல்ல. தனியார் நடத்தக் கூடிய பள்ளிக் கூடங்களிலே, மனேஜ்மெண்டு பள்ளிக்கூடங்களிலே ஆசிரியர்களுக்குச் சரியாக சம்பளமே கொடுப்பதில்லை என்ற ஒரு குறை இருக்கிறது. பல நல்ல மானேஜ்மெண்டுகள் இருக்கலாம். சில இடங்களில் சில தவறுகள் இருக்கின்றன என்பதை மறக்கமுடியவில்லை.

12 noon. முதியோர் கல்வித் திட்டம் ஒரு நல்ல திட்டம். அதை கிராமப் பகுதிகளிலே வரவேற்கிறார்கள். அது இன்றைக்கு எப்படி இருக்கிறது ? எங்கேயாவது ஒழுங்காக நடக்கிறதா, நடைமுறையில் இருக்கிறதா என்று பார்த்தால், அது போய்விட்டது. முதியோர் கல்வித் திட்டமே பல கிராமங்களில் இல்லாத அளவுக்குப் போய்விட்டது. சில கிராமங்களிலே ஆரம்பித்து வந்தார்கள். அதற்குப் பின்னாலேயே மூடிவிட்டே போய்விட்டார்கள். அந்த நிலையில்தான் இருக்கிறது. நல்ல திட்டத்திற்கு செலவழிக்கக்கூடிய பணம் மக்களிடையே பிரயோசனமற்ற நிலையில், நல்ல முறையில் செயல் படாமல், போய்க்கொண்டிருக்கிறது. முதியோர் கல்வித் திட்டத்தை மேலே இருக்கக்கூடிய உத்தியோகஸ்தர்கள் நல்ல முறையில் கண்காணிக்கிறார்களா என்றால், இல்லை என்று சொல்லக்கூடிய அளவில்தான் இருக்கிறது. அது மட்டுமல்ல. கிராமங்களில் 300 ஜனத் தொகை இருந்தால் அங்கே ஒரு பள்ளிக் கூடம் வைக்கப் போகிறோம் என்று சொல்லுகிறார்கள். எத்தனை எத்தனையோ கிராமங்கள் எங்கள் பகுதியில் காட்ட முடியும் பள்ளிக்கூடம் இல்லாமல். அதற்குக் காரணம் ஒரு மைலில் வேறு பள்ளிக்கூடம் இருக்கக் கூடாது என்ற விதி நடைமுறையில் இருக்கிறது. அதுதான் இம்மாதிரி எல்லா கிராமங்களிலும் பள்ளிக்கூடம் ஏற்படுத்துவதைத் தடுக்கிறது. அம்மாதிரி இருக்கும் விதியை எடுத்துவிட்டு 300 ஜனத்தொகை உள்ள எல்லா கிராமங்களிலும் பள்ளிக்கூடங்கள் இருக்க வேண்டும் என்ற விதியை இயற்றவேண்டும்.

இம்மாதிரி பல குறைகள் இருக்கின்றன கிராமங்களில். கிரமங்களிலுள்ள ஆதாரப் பாடசாலைகளிலும், ஓராசிரியர் பள்ளிக்கூடங்களிலும் நல்ல வாசகசாலை இருக்கிறதா என்று பார்த்தால் கிடையாது. எங்கோ ரொம்பக் குறைவான சில புஸ்தகங்கள் வைக்கப்பட்டிருக்கின்றன. அர்த்தமற்ற தன்மையில், மக்களுக்கு, கிராமத்தார்களுக்கு, விவசாயிகளுக்கு பொருத்த மற்ற நிலைமையில் ஏதோ சில புஸ்தகங்கள் வைக்கப்பட்டிருக்கின்றனவே தவிர வேறு ஒன்றும் இல்லை. எல்லா கிராமங்களிலும் கண்டிப்பாக ஒரு வாசகசாலை இருக்க வேண்டும் என்ற நிலைமை ஏற்படுத்த வேண்டும். அப்படி அங்கே வாசகசாலை வைப்பதற்கு கட்டிடங்கள் இல்லாமல் இருக்கலாம். கிராமங்களிலே மாட்டுத் தொழுவத்தில்கூட பள்ளிக்கூடங்கள் நடக்கின்றன. நகரங்களில் பார்க்கும்பொழுது லட்சக்கணக்கான ரூபாய் கட்டிடங்களுக்காகச் செலவழிக்கப்படுகிறது. கட்டிடத்திற்காகக் கொடுக்கப்படும் மான்யங்களில், நகரங்களில் எவ்வளவு செலவழிக்கப்படுகிறது, கிராமங்களில் எவ்வளவு செலவழிக்கப்படுகிறது என்று பார்த்தால், கிராமப் பகுதிகளிலே மிகக் குறைவான அளவுக்குத்தான் பணம் செலவழிக்கப் பட்டிருக்கிறது. கிராமங்களுக்கு ஒதுக்கப்பட்ட பணத்தில் அதிகமாக செலவழிக்கப்படாமல் போய்விட்டது. ஆசிரியர்களுக்கு வீடுகள் கட்டிக் கொடுப்பது, பெண் ஆசிரியர்களுக்கு தனியாக வீடுகள் கட்டிக்கொடுப்பது என்ற விஷயத்திலும் குறைந்த அளவில் செயல்படக்கூடிய நிலைதான்

22nd March 1961] [Sri V. Subbiah]

இருந்து கொண்டிருக்கிறது. கிராமத்திலே அடித்ளமாக இருக்கக்கூடிய காந்தி அடிகளின் திட்டம் நிறைவேற்றப்படவேண்டும். பேஸிக்காக இருக்கக்கூடிய ஆதாரக் கல்வி இருக்கிறதே அதிலிருந்து காந்தியடிகள் கண்டுபிடித்த முறைப்படி செயல்பட்டு உயர் நிலைக்கு வந்தால்தான், ஒழுக்கம் இருக்க முடியும், எதிர்காலத்தில் அவர்கள் வாழ்க்கையிலே சந்தோஷம் இருக்க முடியும், நாட்டிற்கு அவர்கள் நல்ல முறையில் பணியாற்ற முடியும், எந்தத் துறையிலும் அவர்கள் சிறந்தவர்களாக பணியாற்ற முடியும். அந்த அடிப்படைத் திட்டத்தை ஏற்று நடத்தி வந்தால்தான் இந்த ரூ. 21 கோடியும் நல்ல முறையில் செலவானதாக நினைக்க முடியும் என்று கூறிக்கொண்டு, இத்துடன் என் உரையை முடித்துக்கொள்ளுகிறேன்.

DEPUTY SPEAKER : There are still seven or eight members who wish to speak. Therefore I reduce the time-limit for each hon. Member from ten minutes to five minutes. Sri Krishnasami Naidu may now speak.

*SRI R. KRISHNASAMI NAIDU : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, கல்வி அமைச்சர் அவர்களால் இங்கு சமர்ப்பிக்கப் பட்டிருக்கும் கல்வி மான்யக் கோரிக்கையை ஆதரித்து ஒரு சில வார்த்தைகள் கூற நான் முன்வருகிறேன். ஆதாரப் பள்ளிக்கூடங்களில் நூற்புத் திட்டம் சரிவர செயல்படாத நிலை சென்ற வருஷத்தில் சில மாதங்களில் ஏற்பட்டு இருந்தது. அதற்குப் பரிகாரம் காணும் வகையிலே காலா காலத்தில் அந்தப் பள்ளிக்கூடங்களுக்கு பஞ்சு கிடைக்கும்படி ஏற்பாடுகள் செய்ய வேண்டும். பரவலாகப் பார்க்கும்பொழுது சில பள்ளிக்கூடங்களுக்கு தேவைக்கு அதிகமாக கருவிகள் வழங்கப்பட்டிருக்கிறதோ என்று பார்ப்பவர்கள் மனதில் ஒரு சந்தேகம் ஏற்படுகிறது. தேவைக்கு அதிகமான கருவிகள் ஒரு பள்ளிக்கூடத்தில் இருந்தால், அவைகளை சரிவரப் பார்த்து வேறு பள்ளிக்கூடங்களுக்கு மாற்றுவதற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்ய வேண்டும். நூற்பு திட்டம் சரிவர இயங்க, நேரத்தை சற்றுக் குறைத்தால்கூட, அது சரிவர நடைபெற ஏற்பாடுகள் செய்வது மிகவும் அவசியம் என்று கருதுகிறேன். நூற்பு ஒரு தொழில் கல்வியாக அமைக்கப்பட்டால்கூட, அந்தந்தப் பகுதிகளிலுள்ள சந்தர்ப்பங்களுக்கேற்ப, சூழ்நிலைக்கு ஏற்ப, விவசாயத்தையும் முக்கியமான ஒரு தொழிற் கல்வியாகக்கூட அமைப்பது மிகவும் நல்லது. அதற்காக சில பள்ளிக் கூடங்களில் அவர்கள் தாங்களே வாங்கி வைத்திருக்கக்கூடிய நிலங்களை சீர்திருத்தி தக்க ஏற்பாடுகள் செய்வதற்கு, கிணறுகள் தோண்டுவதற்கு, பம்பு செட்டுகள் முதலிய சௌகரியங்கள் செய்து கொடுத்து அந்த நிலத்தை சீர்திருத்தி பண்படுத்துவதற்காகக்கூட அரசாங்கமே அதற்கு மான்யம் வழங்குவது மிகவும் நலம் என்று கருதுகிறேன். அதையும் கவனிக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

கிராமப்புறத்திலுள்ள உயர்நிலைப் பள்ளி சம்பந்தப்பட்டவரையில், 7-வது வகுப்பு வரையில் ஒரு பள்ளிக்கூடம் இருக்கிறது. அது உயர்தர ஆரம்பப் பள்ளிக்கூடம். அதற்குமேல் 8, 9, 10-வது வகுப்பிற்காக ஒரு உயர் நிலைப் பள்ளி அமைந்திருக்கிறது. இப்படி ஒரே இடத்தில் இப்படிப்பட்ட பள்ளிக்கூடங்கள் அமைந்திருப்பது அனுபவபூர்வமாக நாம் பார்க்கும் பொழுது அது அவ்வளவு பொருத்தம் அல்ல என்று நாங்கள் கருதுகிறோம். ஆகையினால் ஒரே ஊரிலே, 7-வது வகுப்பு வரையிலும் ஒரு பள்ளிக்கூடம் அதற்கு மேல் 3 வகுப்புகள் உள்ள ஒரு உயர்நிலைப் பள்ளிக்கூடம் என்ற நிலை மாறி, 6 முதல் 10-வது வகுப்புகள் வரையிலும் ஒரே உயர் நிலைப் பள்ளி அமைப்பது என்ற நிலை வந்தால், அங்கே படிப்பின் தரம் உயர்வதற்கும், நிர்வாகத்திற்கும் மிகவும் பொருத்தமாக அமையும் என்ற ஒரு அனுபவத்தை நாங்கள் காண்கிறோம். இதைக் கல்வி இலாகா இயக்குநர் அவர்களின் கவனத்திற்கும், அமைச்சர் அவர்களின் கவனத் திற்கும் கொண்டுவர விரும்புகிறேன். இந்தக் குறை பல ஆண்டுகளாக சொல்லப்பட்டு வருகிறது. இதை ஆராய்ந்து பார்த்து நிவர்த்திப்பதற்கு வேண்டுவன செய்யுமாறு நான் அரசாங்கத்தைக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

[Sri R. Krishnasami Naidu] [22nd March 1961

இவ்வாறு கிராமப்பகுதிகளிலே அமைந்துள்ள உயர்நிலைப் பள்ளிகளில் மூன்று வகுப்புகள் மட்டும் இருப்பதன் காரணமாக, மாணவர்களுடைய சங்கியை குறைவாக இருக்கிறது என்ற ஒரு நிலைமை ஏற்படுகிறது. இரண்டாவது, மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டங்களின் மூலமாக பள்ளிக்கூடங்களுக்கு கொடுக்கக்கூடிய சில கட்டிட கிராண்டுகள் பெற்று, "லாபரெட்டரி" முதலிய வசதிகளை செய்து கொள்ளுவதற்குக்கூட இது தடையாக இருக்கிறது. அந்தப் பள்ளிக்கூடங்களின் வளர்ச்சிக்கு அந்த அனுகூலத்தை உபயோகப்படுத்திக்கொள்ள இது தடையாக இருக்கிறது என்று நாங்கள் கருதுகிறோம். ஆகவே, ஏற்கனவே உள்ள ஆரம்பப் பள்ளிக்கூடம் 5-வது வகுப்பு வரையிலும் இருக்கவேண்டும். பிறகு ஹைஸ்கூல் இருக்கக்கூடிய இடங்களிலே 6 முதல் 10-வது வகுப்பு வரையில் அமையக்கூடிய வகையிலே இந்த ஆண்டிலேயே அதற்கான ஏற்பாடுகள் செய்யுமாறு நான் பணிவோடு கேட்டுக்கொள்ளுகிறேன்.

ஐந்தாவது வகுப்பு வரையிலும் உள்ள ஆரம்பப் பள்ளிக்கூடங்களில் குறைந்தபட்சம் 3-வது வகுப்பு வரையிலும் பெண் ஆசிரியர்கள்தான் இருக்கவேண்டும் என்ற ஒரு நிலைமையை ஏற்படுத்துவதற்கு, கல்வி அமைச்சர் அவர்கள் இதை தயவு செய்து மனதில் கொண்டு ஆவன செய்யவேண்டுமென்று நான் பணிவோடு கேட்டுக்கொள்ளுகிறேன். மூன்ருவது வகுப்பு வரையிலும், ஏன் நான்காவது வகுப்பு வரையிலும்கூட பெண் ஆசிரியர்களே இருந்தால், எதிர்காலம் மிகவும் நன்ருக இருக்கும். பெண்கள் அநேகமாக வேறு துறைகளிலே உத்தியோகத்திற்கு செல்லுவதை விடுத்து, இந்தத் துறையிலே அவர்களை பணியாற்றும்படிச் செய்வது நாட்டிற்கும், சமூதாயத்திற்கும் மிகவும் உபயோககரமாக இருக்கும் என்ற கருத்தைத் தெரிவித்துக் கொண்டு, என்னுடைய பேச்சை முடித்துக் கொள்கிறேன்.

* **Sri T. R. RAMAMIRTHA THONDAMAN**: கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்த மன்றத்தில் கொண்டு வரப்பட்டிருக்கும் கல்வி மான்யத்தை நான் ஆதரிக்கிறேன். கல்வித் துறையிலே நம் தமிழ் நாடு மற்றைய மாநிலங்களைவிட நல்ல முன்னேற்றம் கண்டிருக்கிறது என்பதை பல மெம்பர்கள் இங்கே எடுத்துப் பேசினர்கள். பாராளு மன்றத்திலும், இதர மாநிலங்களிலும் திட்டக் கமிஷன் முடிவுகளை நிறைவேற்றக்கூடிய ஒரே ஒரு சர்க்கார் நமது சர்க்கார் என்று சொன்னர்கள். பல விஷயங்களில் முன்னேற்றம் கண்டிருக்கிற நமது சர்க்கார் மாணவர்களுக்கு பயிற்சி அளிக்கக்கூடிய விஷயத்திலும் முன்னேற்றகரமான நல்ல திட்டத்தை நிறைவேற்றியிருக்கிறது என்பது குறித்து எல்லாப்பகுதியினரும் பாராட்டியிருக்கிறார்கள். அதற்காக நான் கல்வி அமைச்சர் அவர்களை மனமாற பாராட்டுகிறேன். அதே நிலையில் கல்வித் திட்டத்தை எந்த முறையில் நிறைவேற்றவேண்டுமென்பதற்காக ஆரம்பப் பள்ளிக்கூடம் முதல் உயர்நிலைப் பள்ளிக்கூடம் வரையில், ஏன் கல்லூரியில்கூட, இலவச உடை வழங்குவதற்கும், மதிய உணவு வழங்குவதற்கும், இன்னும் இது போன்ற காரியங்களில் உயர்ந்த ஆர்வம் பெற்றிருக்கும், நமது நாட்டிலுள்ள ஆசிரியர்கள் எல்லோரும் தங்களுடைய தளபதி என்று போற்றக்கூடிய அளவுக்கு ஆசிரியர்கள், மாணவர்கள், பெற்றோர்கள் மனதில் இடம் பெற்றுள்ள கல்வி இலாகா டைரக்டர் அவர்களை நான் மிகவும் பாராட்டக் கடமைப்பட்டிருக்கிறேன். அவருடைய நல்ல சேவையை பாராட்டி நிலையை அறிந்து அவர்களுக்கு சர்க்கார் "பத்மஸ்ரீ" என்ற பட்டம் கொடுத்திருக்கிறார்கள். அதற்காக இந்த சர்க்காரை நான் பாராட்டுகிறேன்.

ஆசிரியர்களுக்கும், அவர்களை உற்சாகப்படுத்தி கல்வி முறையில் முன்னேற்றம் காணவேண்டுமென்பதற்காக ஆசிரியர்களுக்கு பரிசு கொடுப்பது என்ற திட்டம் இருக்கிறது. அதைக் காட்டிலும், ஆசிரியர்களுக்கு அந்தந்த மாதச் சம்பளம் மாதம் முதல் தேதியன்றே கிடைக்கச் செய்தால், அவர்கள் பெரு மகிழ்ச்சியோடு பணியாற்றுவார்கள், அதையும் சர்க்கார் செய்யும் என்று எதிர்பார்க்கிறேன். ஆரம்பக் கல்வியை வளர்க்க இலவச உணவு, உடை கொடுக்கும் திட்டங்கள் 100-க்கு 100 ஏழைப் பிள்ளைகள் கல்வி

பயில வசதியாயிருக்கிறது. அவை, பாராட்டத் தக்கவை. அதே நேரத்தில் ஆரம்ப பாடசாலைகளிலிருந்து வரும் மாணவர்கள் தொடர்ந்து படிக்க வசதியாக அதற்கு வேண்டிய உயர்நிலைப் பள்ளிகளையும் ஆங்காங்கே ஏற்படுத்த வேண்டும். சர்க்கார் அதைச் செய்ய முயற்சி எடுத்து இருக்கிறார்கள். என் தொகுதியில் ஏழு ஆரம்பப்பாடசாலைகள் ஏற்பட்டு ஹைஸ்கூல் இல்லாக் குறையில் என்னுடைய ஜில்லாவில் சோழபுரம், திருப்பனந்தாள், பந்த நல்லூர் முதலிய இடங்களிலிருந்து ஜில்லா போர்டு மூலமும் தனியாக துரைமாராலும் ஹைஸ்கூல் கேட்டு விண்ணப்பங்கள் வந்திருக்கின்றன. அவற்றை அங்கீகரித்து அங்கு உயர்நிலைப் பள்ளிகள் இந்த வருஷ பள்ளி ஆண்டிலேயே ஏற்பட வழிவகை செய்ய வேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன். அதன் அங்கீகாரங்களை உடனடியாக செய்யக் கேட்டுக்கொள்கிறேன். அதே நேரத்தில் கல்லூரிகளும் போத வில்லை. திருப்பனந்தாள் மடத்து ஸ்ரீலஸ்ரீ அடிகளார் (காசிவாசி அருள் நந்தி) ஆடுதுறையில் குமரகுருபரன் கல்லூரி என்று ஒரு கல்லூரி ஏற்படுத்த முன் வந்திருக்கிறார்கள். அதற்காக 300 வேலி நிலமும் எழுதி வைத்திருக்கிறார்கள். அதைக் கூட ஆடுதுரை எம். என். சொக்க லிங்கம் செட்டியார் முன் வந்திருக்கிறார். அவர்தாம் எங்களை ஏற்றுக் கொண்டு, சர்க்கார் உதவியும் கொடுத்து அந்தக் கல்லூரியையும் ஆடுதுறை யில் ஏற்படுத்தி அதற்கு வேண்டிய இதர வசதி கொடுத்து நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

கல்வித் துறையில் பல முன்னேற்றங்களைக் கண்டு, பல நல்ல காரியங்களைச் செய்வதைக்கண்டு ஆசிரியர்கள் சந்தோஷமாக வேலை செய் கிறார்கள். அதே நேரத்தில் மதிய உணவுத் திட்டத்திலும், இலவச உடை வழங்கு திட்டத்திலும் அவர்கள் நிர்ப்பந்திக்கப்படுகிறார்கள் என்று சொல்லப்பட்டது. அந்த மாதிரி நிர்ப்பந்தம் எங்கும் இல்லை. ஆனால், உடை வழங்க கல்வி அதிகாரியை ஆசிரியர்கள் அழைத்தால், அவர்கள் போய் அந்தப் பணியைச் செய்ய மூன்று மாத காலம் தாமதம் ஏற்படு கிறது. கல்வி அதிகாரி 12 ஜில்லாக்களுக்கும் போய் வரவேண்டும். ஒரு ஜில்லாவிற்கு மாதத்திற்கு மூன்று நாளாவது போகவேண்டும். இவர்கள் எங்கள் ஜில்லாவிற்கு எத்தனை தரம் வந்திருக்கிறார்கள்? சென்னை யிலே இருக்க வேண்டுமென்பதைக் குறைத்து மக்கள் விரும்பும் போது, அவர்கள் எண்ணத்தை நிறைவேற்ற, ஆங்காங்கே அவர்கள் செல்ல வேண்டுமென்று அவர்களுக்கு சர்க்கார் அனுமதியளித்து, என் னுடைய ஜில்லாவிற்கு மாதம் மூன்று நாளாவது வரவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

SRI S. NAGARAJA MONIGAR: கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்தச் சந்தர்ப்பம் கொடுத்ததற்காக மகிழ்ச்சியடை கிறேன். இந்த கல்வி மானியத்தை ஆதரிக்கிறேன். மஞ்சக் காமாலையாக இருப்பவர்கள் வியாதி தீர ஆராய்ச்சி செய்து, மூலிகைகள் ஏதாவது இருந்தால் நல்லது என்று தோன்றுகிறது. ஏதோ ஒன்றுமே செய்ய வில்லை, நடக்கவில்லை என்று தங்கள் உள்ளம் அஞ்சாமல் பேசு கிறார்கள். வீடு கட்டுகிறவனுக்கு எதிராளியாக இருக்க வேண்டாம் என்று கேட்கத் தோன்றுகிறது. சுமார் 80 கோடியளவில் இருக்கும் பட்ஜட்டில் ஏறக்குறைய நாலில் ஒரு பங்கு செலவிடும் இந்த இலாகாவில் ஒன்றுமே நடக்கவில்லை என்கிறார்கள். இந்தத் தொகையைப் பார்க்கும்போது, மற்ற மந்திரிகள்கூட எப்படி இவ்வளவு பெரிய தொகைக்கு ஒத்துக்கொண்டார்கள் என்று ஆச்சரியப்படவேண்டிய நிலைதான் இருக்கிறது. தொழில் பள்ளி முதற்கொண்டு உபகாரப் பணம் பெறுகிறது. ஒன்றுமேயில்லை யென்றால்—ஆனால் இப்பொழுதெல்லாம் கொஞ்சம் குறைந்திருக்கிறது இரண்டு ஒன்று இருக்கிறது என்று ஒப்புக் கொள்ளுகிறார்கள். கொஞ்சம் ஞானக் கண் திறந்திருக்கிறது என்று நினைக்கிறேன். அவ்வளவு பெருமை யோடு நடக்கும் இந்த கல்வி சம்பந்தமான மானியத்தின் பேரில் எதிர்கட்சியின் கட்மோஷன் இல்லாமல் இருந்தால் நன்றாக இருக்கும். கட்மோஷனே வேண்டாம் என்று சொல்லவில்லை. எல்லாவற்றிற்கும் என்று வரும்போது, அது அவ்வளவு சரியாகப்படவில்லை. குறைகள் இருந்தால் அவற்றைச் சொல்ல வேண்டும் என்றால் கட்மோஷன் கொடுத்தால்தானா?

[Sri S. Nagaraja Monigar] [22nd March 1961

கொடுக்காமலேகூடத்தான் பேசலாம். அப்படிப்பட்ட பேச்சை வரவேற்கிறேன், பாராட்டுகிறேன். ஆகையினால், வேலே நுழைத்தது போல்—வள்ளுவர் உள்ளத்திலே தான் வேல் நுழைந்தது—செய்த நன்றியை மறக்கக்கூடாது. மேல் சபையிலே கூடச் சொன்னார்கள். . . .

**DEPUTY SPEAKER :** மேல் சபையில் பேசியதைபற்றி இங்கே பேச வேண்டாம்.

**SRI S. NAGARAJA MONIGAR :** செய்நன்றி மறப்பது சரியாகாது. செய்யும் காரியத்திற்கு இடைஞ்சல் இல்லாமல் இருந்தாலே போதும். செய்வதை கொஞ்சம் பாராட்டினால் செய்பவர்களுக்கும் அதிக உற்சாகம் இருக்கும்.

கல்வித்தரம் குறைந்துவிட்டது, ஆசிரியர்கள் நிர்ப்பந்திக்கப்படுகிறார்கள் என்று சொன்னார்கள். அவர்கள் போய் பெற்றோர்களின் மனதை மாற்றுவதில் ஈடுபடுகிறார்கள். அவ்வளவுதான். நல்ல சம்பளம் வாங்கும் உபாத்தியாயர்கள், வெயில் கால விடுமுறை, குளிர்கால விடுமுறை என்றெல்லாம் இரண்டு மூன்றுமாத லீவு அடைகிறார்கள். செக்ரெட்டேரியட்டில் பார்த்தால் ஊழியர்கள் மணிக்கணக்காக உழைக்கிறார்கள். ஆசிரியர்கள் எப்படா மணியடிக்கும் என்று பார்த்துக்கொண்டேயிருப்பதா ? உணவும் உடையும் கொடுத்து வரவழைக்கும் மாணவர்களுக்கு தக்க முறையில் போதிக்க வேண்டாமா? தரம் குறைகிறது என்கிறார்கள். எங்குதான் தரம் குறையவில்லை. சபையிலே கூடத்தான் இப்பொழுது தரம் குறைந்திருக்கிறது. . . . . .

**SRI A. GOVINDASAMI :** Sir, on a point of order. சபையில் தரம் குறைந்திருக்கிறது என்று சொல்லுகிறார்களே. . . .

**DEPUTY SPEAKER :** The hon. Member should not use such words.

**SRI S. NAGARAJA MONIGAR :** நான் சொல்வதைப் பூரா கேட்காமல் சொல்கிறார்கள். . . . . .

**DEPUTY SPEAKER :** The hon. Member's time is up. He should resume his seat.

**SRI T. KARIA GOUNDER :** சார், நல்லதைப் பேசினால் கோபம் வருகிறது. (குறுக்கீடு) நாங்கள் வம்பு பண்ணும் பழக்கம் இல்லாதவர்கள். . .

**DEPUTY SPEAKER :** டிமாண்டைப் பற்றிப்பேசுங்கள். ஐந்து நிமிஷம் தான் இருக்கிறது.

* **SRI T. KARIA GOUNDER :** கனம் நிதி அமைச்சர் அவர்கள் கொண்டு வந்திருக்கும் இந்த மானியத்தை நான் வாயார வாழ்த்தி மனதாரப் புகழ்ந்து ஒப்புக்கொண்டு, வெட்டுப் பிரேரணையை எதிர்த்து ஒரு சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். கனம் நிதியமைச்சர் அவர்கள் உலகிலேயே எங்குமில்லாத முறையில், முன்னேற்றப்பாதையை வகுத்துக்கொண்டு, நல்லதொரு திட்டத்தையும் அமைத்துக் கொண்டு, அவர்களும் இந்த இலாகா சம்பந்தப்பட்ட அதிகாரிகளும் செய்யும் நன்மைகளுக்கெல்லாம் நாம் நன்றி செலுத்தக் கடமைப்பட்டிருக்கிறோம்.

கல்வி சீர்திருத்த மாநாடுகள் பற்றிக் குறை கூறப்பட்டது. வேலூரில் ராஷ்ட்ரபதி திறந்து வைத்த சமயத்தில் இவர்கள் வந்து பார்த்திருக்க வேண்டும். பாத்திரக் கடைக்காரர்களிடம் போய் விளம்பரத்திற்காக வாங்கி வந்தார்கள் என்கிறார்கள். அந்தக் கூட்டத்தைப் பார்த்திருந்தால், அங்கே நிலவிய உற்சாகத்தைப் பார்த்திருந்தால் தெரியும் ; சரித்திரத்தில் என்றும் கண்டிராத அளவில் அது சிறப்பாக நடந்தது ; நான் கூட வசூல் செய்தேன். பணம் கொடுக்க மக்கள் முன் வருகிறார்கள், கட்டிடம் கட்டிக் கொடுக்க மக்கள் முன்வருகிறார்கள். எனது நண்பர் சொன்னதுபோல், தங்கள் ஊனக்கண்களை மறைத்து வைத்து விட்டு ஞானக் கண்ணோடு பார்க்க வேண்டுகிறேன், சர்க்கார் மக்களுக்காக என்னென்ன உதவிகள் செய்து வருகிறார்கள் என்பதை. எதற்கெடுத்தாலும், ஆசிரியர்களை அதற்காக உபயோகப்படுத்துகிறார்கள், இதற்காக உபயோகப்படுத்துகிறார்கள் என்று

22nd March 1961] [Sri T. Karia Gounder]

குற்றம் சொல்லிக்கொண்டேயிருப்பதில் பிரயோஜனம் இல்லை. எல்லோருக்கும் இலவசக் கல்வி கொடுக்க வேண்டுமென்ற திட்டத்தை, தாழ்ந்த ஜாதி, உயர்ந்த ஜாதி என்ற வித்தியாசம் இல்லாமல் பொருளாதார அடிப்படையில் ஏழை மாணவர்களுக்கு இலவசக்கல்வி அளிக்க முன் வந்திருக்கிறார்கள், சர்க்கார். நண்பர் சந்திரசேகரன் அவர்கள் கூறியது போல் நாட்டு மக்கள் எல்லோருக்குமே உயர்நிலைப் பள்ளி வரை இலவசக் கல்வி அளிப்பதற்கு கல்வியமைச்சர் அவர்கள் மீண்டும் புனராலோசனை செய்யுமாறு கேட்டுக்கொள்ளுகிறேன். மதிய உணவுத் திட்டத்தைப் பற்றி நான் ஒரு சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன். பள்ளிக்கூட நேரத்தில் ஆசிரியர்கள் போய் கேட்பதில்லை. ஆசிரியர்களுக்குள்ளேயே இப்பொழுது போட்டியிருக்கிறது. அதிலும் இப்பொழுது சம்பளக் கமிஷன் சிபாரிசு பிரகாரம் அவர்களுக்கு சம்பள உயர்வு கொடுத்திருப்பதில் அவர்கள் மிக்க மகிழ்ச்சி அடைந்திருக்கிறார்கள். நான் படிக்கும் காலத்தில் ஆரம்பப் பள்ளி ஆசிரியருக்கு 6 ரூபாய்தான் சம்பளம் இருந்தது. இப்பொழுது ஒரு ஆரம்பப் பள்ளி ஆசிரியர் கடைசியில் விலகிச் செல்கிறபோது 90 ரூபாய் பெறுகிறார். பள்ளி நேரத்தில் ஆசிரியர்கள் பிள்ளைகளின் பெற்றோர்களை அணுகுவதில்லை. அவர்களாகவே, உணர்ச்சியோடு செல்கிறார்கள். அதுவும் அடுத்த பள்ளியில் 50 பிள்ளைகளுக்கு இலவச உணவு கொடுக்கிறார்கள் என்றால் நாம் 100 பிள்ளைகளுக்காவது பகல் உணவு கொடுக்க வேண்டுமென்று நினைக்கக் கூடிய நிலையில்தான் இன்று ஆசிரியர்கள் இருக்கிறார்கள். மதிய உணவுத் திட்டம், உடை வழங்கும் திட்டம் இவைகளில் ஆசிரியர்கள் நல்ல மனப்பான்மையோடு உணர்ச்சி வசமாக உற்சாகமாக ஈடுபட்டிருப்பது போற்றத்தக்கது. பின்னர், கலா நிகழ்ச்சிகள் பற்றிச் சொன்னார்கள். கலா நிகழ்ச்சிகள் பற்றி எங்களுக்கு அனுபவம் இல்லை, பழக்கமில்லை. கலாநிகழ்ச்சிகள் நடத்தி நிதி திரட்ட எங்களுக்கு பழக்கமில்லை. பள்ளிக்கூடங்கள் திறந்தார்கள். உடனே மூடி விட்டார்கள், இந்த அவல நிலை இந்நாட்டில் இருப்பதாக பத்திரிகைகளில் பார்க்கிறோம் என்றெல்லாம் சொன்னார்கள். எங்கள் ஜில்லாவில் பள்ளிக்கூடம் இல்லாத கிராமமே கிடையாது. 300 உயர்நிலைப் பள்ளிகள் . . .

**DEPUTY SPEAKER** : The hon. Member will resume his seat.

SRI T. S. **RAMASWAMI** : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்த கல்வி இலாகா, மிகச் சிறந்த முறையில் நடக்கக்கூடிய ஒரு இலாகா என்பது நாம் மட்டுமல்ல இந்தியா தேசத்திலுள்ள எல்லோருமே ஒப்புக் கொள்ளக்கூடிய ஒன்றாகும். வருகிற ஆண்டு கல்வித் துறைக்காக 20·81 கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கிறது அரிய பெரிய திட்டங்களை நாம் வகுத்திருக்கிறோம். இலவசக் கல்வி பொறுத்த மட்டில் ஒரு "..பேஸ்ட் ப்ரோக்ராமாக" இரண்டாவது ஆண்டில் இருக்கிறோம், அடுத்த ஆண்டு மூன்றாவது ஆண்டுக்கு போகப்போகிறோம். செண்ட் பர்ஸண்ட்டும் பள்ளிக்குச் செல்லக்கூடிய அளவிற்கு அதற்கான திட்டங்களும், சட்டமும் நமக்கு தேவை என்பதை நான் எடுத்துச் சொல்ல ஆசைப்படுகிறேன். பதினொன்றாவது வகுப்பு வரை ஏழை மாணவர்களுக்கு இலவசக் கல்வி கொடுக்கப்போவதாக குறிப்பிடப்பட்டிருக்கிறது. அது, வரவேற்கத் தக்க விஷயமாகும். அதே நேரத்தில் எனக்கு முன்னால் பேசிய நண்பர்கள் குறிப்பிட்டபடி, 1,200 ரூபாய் என்று இருப்பதற்குப் பதிலாக எல்லோருக்குமே இலவசக் கல்வி கொடுப்பதென்றால், நிலக்கோட்டை அங்கத்தினர் அவர்கள் குறிப்பிட்டார்கள், 11 சதவிகிதம் பேர்கள்தான் இந்த 1,200 ரூபாய்க்கு மேற்பட்டு வருமானம் வரக் கூடியவர்களின் குழந்தைகள் இருப்பார்களென்று. ஆகவே, எல்லோருக்குமே இலவசக் கல்வி கொடுக்கக்கூடிய திட்டத்திற்கு அதிகச் செலவு ஆகப் போவதில்லை. கேரளாவை எடுத்துக் கொண்டால் அங்குள்ள ஜனத்தொகை ஏறக்குறைய இங்குள்ளதற்கு பாதி அளவு இருக்கும். 1½ கோடியிருக்கிறது. அங்கு பொருளாதார அடிப்படையில் இல்லாமல் எல்லோருக்குமே இலவசக் கல்வி கொடுத்துக் கொண்டு வருகிறார்கள். "போர்த் பாரம். பிப்த் பாரம்" என்று ஆகி விட்டது, அடுத்தவருடம் "ஸிக்ஸ்த்" வரை இலவசக் கல்வி என்று குறிப்பிட்டிருக்கிறார்கள், அங்கு. கல்விக்காக சென்ற ஆண்டு அவர்கள் 16 கோடி செலவழித்து, வருகிற ஆண்டு 18 கோடி செலவழிக்கிறார்கள் என்றால் நாம் 20 கோடி செலவழிப்ப

[Sri T. S. Ramaswami] [22nd March 1961]

தோடு கூடுதல் அதிகப்படியாக ஒரு 3 கோடி செலவழித்தால் எல்லோருக்குமே 11 வகுப்பு வரை இலவசக் கல்வி வசதி அளிக்க முடியும், அதோடு நம் மாநிலம் இந்தியாவில், பல துறைகளில் எடுத்துக்காட்டாக விளங்குவது போன்று கல்வித் துறையிலும் நாம் ஒரு எடுத்துக்காட்டாக இருக்க முடியும் என்று எடுத்துச் சொல்ல விரும்புகிறேன். மதிய உணவுத் திட்டத்தைப் பொறுத்த மட்டில், அது எவ்வாறு நடைபெறுகிறது என்பதை ஆராய ஒரு கமிட்டி வேலை செய்து கொண்டு வந்தது. அவர்கள் அறிக்கை சமர்பித்து விட்டார்கள் என்று கருதுகிறேன். அதில் பல ஊழல்கள் நடந்து கொண்டு வருகின்றன. அரசாங்கம் எவ்வளவு தூரம் நல்லெண்ணத்தோடு காரியங்கள் செய்து கொண்டு வருகிறார்களோ அந்தளவு நல்லெண்ணத்தோடு பலயிடங்களில் காரியங்கள் நடைபெறவில்லை. 150 மாணவர்களுக்கு பகல் உணவு கொடுக்க வேண்டுமென்றால், உண்மையில் கொடுப்பது 100 மாணவர்களுக்குத்தான் கொடுக்கப்படுகிறது என்ற குறை பல ஜில்லாக்களில் பலயிடங்களில் இருக்கின்றன. ஆனால் கன்னியாகுமரி ஜில்லாவைப் பொறுத்த மட்டில் அதற்கு நேர்மாறான முறைதான் இருக்கிறது. அங்கு 100 மாணவர்களுக்கு அலவன்ஸ் கொடுத்தால் 150 மாணவர்களுக்கு கொடுக்கப்படுகிறது. கமிட்டி அங்கத்தினர்கள் இதுபற்றி அறிவித்திருப்பார்கள் என்று நினைக்கிறேன். இதை அரசாங்கம் கவனித்து வேண்டியது செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அடுத்தபடியாக, கன்னியாகுமரி ஜில்லாவும், செங்கோட்டை தாலுகாவும் இதோடு இணைந்த பிறகு, இங்குள்ள பே ஸ்கெயில்லை அங்கும் விஸ்தரித்திருக்கிறார்கள். க்ராஜுவேட் டீச்சேர்ஸை எடுத்துக் கொண்டால் 4 ஆண்டுகள், 10 ஆண்டுகள் சர்வீஸ் ஆனவர்கள், சர்வீஸ் குறைவாகயிருந்தாலும் சரி அல்லது கூடுதலாக இருந்தாலும் சரி, அங்குள்ளவர்களுக்கும் இங்குள்ளவர்களுக்கும் அதாவது இரண்டு இடங்களிலும் ஒரேவித சர்வீஸ் போட்டிருந்தாலும், அங்குள்ளவர்களின் சம்பளம் இவர்களை விட குறைவாகயிருக்கிறது என்று அங்குள்ள க்ராஜுவேட் டீச்சர்ஸ் வருத்தப்படுகிறார்கள். கன்னியாகுமரி ஜில்லாவில் உபாத்தியாயராக இருப்பது எங்கள் குற்றமா என்று அவர்கள் கேட்கிறார்கள். அங்குள்ள ஒருவருக்கு நாலு வருடம் சர்வீஸாகிறது, இங்குள்ள ஒருவருக்கு நாலு வருடம் சர்வீஸாகிறதென்றால் இங்குள்ளவரை விட அங்குள்ளவருக்கு சம்பளத்தில் ஐந்து ரூபாய் குறைவாக வித்தியாசமிருக்கிறது. பத்து வருடம் சர்வீஸ் என்றால் பத்து ரூபாய், 15 வருடங்கள் சர்வீஸ் என்றால் 30 ரூபாய் குறைவு என்றிருக்கிறது நிலைமை. ஏன் இந்த வித்தியாசம்? ஆகவே, இதைக் கவனித்து அங்குள்ளவர்களின் குறையைக் தீர்ப்பதற்கு வேண்டிய நடவடிக்கைகள் எடுக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். பின்னர், லைப்ரரிஸ். எல்லா உயர் நிலைப் பள்ளியிலிருந்தும் மாணவர் ஒருவருக்கு ஒரு ரூபாய் வீதம் லைப்ரரி பீஸ் வாங்குகிறார்கள். எஸ். எல். பி. ஸ்கூல் என்பது கன்னியாகுமரி ஜில்லாவில் வைத்ததே பெரிய பள்ளிக் கூடம். அங்கு இரண்டு ஆண்டுகளாக லைப்ரரிக்கு புத்தகங்களே வாங்கவில்லை. ஆனால் வருடாவருடம் மாணவர்களிடமிருந்து ஆயிரக்கணக்கான ரூபாய் லைப்ரரி பீஸாக வாங்கப்படுகிறது. இதர ஜில்லாக்களில் அரசாங்கத்திலிருந்தே லைப்ரரி புத்தகங்கள் வாங்க அதிகமாக பணம் கொடுக்கிறார்கள். ஆனால் இங்கேயோ, மாணவர்கள் கொடுக்கக்கூடிய பணத்திலிருந்தாவது, அவர்களிடமிருந்து வசூலிக்கும் தொகையையாவது புத்தகங்கள் வாங்க உபயோகிக்க வேண்டும்., (மணி அடிக்கப்பட்டது). தமிழ் ஹயரைப் பற்றி ஒரு வார்த்தை. தமிழ் ஹயர் என்ற முறை அங்கு வழங்கி வந்தது. தமிழ் ஹயர் பாஸ் செய்தால், அதன் தரம் எஸ்.எஸ்.எல்.ஸி. தரத்திற்கு ஒப்பாகும் அது, ஆங்கிலம் தவிர. ஆங்கிலம் தவிர மற்றவைகளில் அதன் தரம் எஸ்.எஸ்.எல்.ஸி. யை விட உயர்ந்ததே. இன்று அப்படி ஹயர் பாஸ் செய்து விட்டு ஆசிரியர் வேலையில் இருக்கக் கூடியவர்களின் நிலை, செகண்டரி டீச்சர்ஷின் நிலையில்லாது ப்ரைமரி டீச்சர்ஷின் நிலையில்தான் அவர்கள் இருக்கிறார்கள். அதை புனர் பரிசீலனை செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அவர்களின் தரம் ஒருவிதத்திலும் குறைந்ததல்ல. தமிழில் எல்லாம் சொல்லிக் கொடுப்பதால் 11 வருடங்களில் படிக்க வேண்டியதை அவர்கள் 9 வருடத்தில் படித்து விடுகிறார்கள். அவர்களை செகண்டரி ஸ்கூல் டீச்சர் தரத்தில்தான் வைத்திருந்தார்கள். இதையும் புனர்பரிசீலனை செய்ய வேண்டும். . . . . . . . .

22nd March 1961]

*SRI M. S. SELVARAJAN : தலைவர் அவர்களே, கல்வித் துறை மான்யத்தை நான் ஆதரிக்கிறேன். அன்னிய ஆட்சி காலத்தில் 12-30 p.m. நமக்கு கிடைக்கின்ற கலால் வருமானத்தின் ஏற்றத்தாழ்வுக்குத் தக்கபடி மான்யம் பெற்று வந்த கல்வி இலாகாவானது கடந்த பத்துவருட காலத்தில் கவர்ச்சிகரமான முறையில் முன்னேறியிருக்கிறது. குறிப்பாக 11 ஆயிரம் பள்ளிக்கூடங்களை புதிதாக ஆரம்பித்ததுடன் இப்போது ராஜ்ய வருமானத்தில் நான்கில் ஒரு பங்கை கவரும் அளவிற்கு பணியாற்றி வருகிறார்கள் கல்வி இலாகாவினர். இந்த வருடம் புதிதாக நம்முடைய ராஜ்ய அரசாங்கம் ஏழை மாணவர்களுக்கு 11-வது வகுப்பு வரையிலும் கல்விச் சலுகை அளிக்க வேண்டும் என்று முடிவு செய்திருக்கிறது. இதை அமல் நடத்துவதில் மிகவும் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். முக்கிய மாக இப்போது இருக்கின்ற முறையில் பாக்வார்ட், மோஸ்ட் பேக் வார்ட் இனங்களுக்கு சலுகை வழங்கப்பட முதல் ஆண்டு மானேஜ்மெண்டு களுக்கு அட்வான்ஸ் கிரான்ட் கொடுக்கப்படாததின் காரணமாக சில மானேஜ்மென்ட்கள் தடுமாற நேர்ந்தது. ஆகவே இப்புதிய சலுகையை அமுல் நடத்துவதற்கு மானேஜ்மெண்டு பாடசாலைகளுக்கு ஆரம்ப காலத்தி லேயே கிராண்டை வழங்குவதற்கு வழிவகை செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். அதோடு ராஜ்ய அரசாங்க அதிகாரிகள் "பாவர்டி சர்டிபிக்கேட்" கொடுப்பதில் வருமானம் குறித்து மனுவுடன் ஒரு உறுதி மொழியையும் பெற்றோரிடம் வாங்க வேண்டும். அந்த உறுதிமொழி தவறாக இருக்கும் என்றால் அதற்கு பின்னால் அதன் மீது நடவடிக்கை எடுக்க வேறு சட்டதிட்டங்களைச் செய்து கொள்ளலாம். சில இடங்களில் பெரிய குடும்பமாக இருக்கலாம், அவர்களுக்கு விசேட சலுகை கொடுக்க வேண்டும். இவைகளை எல்லாம் நாம் கவனிக்க வேண்டும். இதில் நாம் எடுத்திருக்கக்கூடிய முயற்சி மிகவும் பெரிது. இதை மிகவும் தைரியத் தோடு நிறைவேற்றவேண்டும். இதை சரியான முறையில் நடத்தினால் தான் இந்தத் திட்டம் போற்றத்தக்கதாக இருக்கும். உணவு, இலவச உடை அளிக்கும் விஷயத்தில் "பேரன்ஸ் அஸோஸியேஷனையும்" சேர்த்து அவர்களின் பிரதிநிதிகளை பரிசீலனை கமிட்டியில் சேர்த்துக் கொள்ளவேண் டும். இதில் பெற்றோர்களின் பிரதிநிதிகளையும் நேரடியாக சேர்த்துக்கொள் வது தான் நல்லது என்று நான் அபிப்பிராயப்படுகிறேன். பாடசாலையில் உணவு வழங்கப்பட்ட விபரத்திற்கு வாராவாரம் பெற்றோர்களின் எழுத்து மூலமான அத்தாட்சி பெற வகை செய்யலாம்.

குறிப்பாக, செகண்டரி கல்வி, கல்லூரி கல்வி சம்பந்தமாக சென்னை சர்வகலாசாலை உப அத்யட்சகர் அவர்கள் ஒருவிதமாகவும் அரசாங்கத் தரப்பில் ஒரு விதமாகவும் கருத்துக்கள் வெளியிடப்பட்டு வருகின்றன. கல்வித்துறையில் கருத்து வேறுபாடுகள் இருப்பதாக மக்களிடத்தில் அதிலும் முக்கியமாக மாணவர்களிடத்தில் ஒரு எண்ணம் இருந்து கொண் டிருக்கிறது. இதன் காரணமாக பல சிக்கல்கள் ஏற்படுகின்றன. ஆகவே இதில் கவனம் செலுத்தி ஒரு நல்ல சூழ்நிலையை ஏற்படுத்தவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

கல்லூரிகளில் இருக்கின்ற இடங்கள் பூர்த்தியாவதை பொறுத்தவரை யில், எனக்குத் தெரிந்த வரையில் எங்கள் ஜில்லாவில் பாளையங்கோட்டை யிலுள்ள செண்ட் ஜான்ஸ் கல்லூரியில் மட்டும் தான் ஒதுக்கப்பட்ட இடங்கள் பூர்த்தியாகியிருக்கிறது என்றும் வேறுள்ள கல்லூரிகளில் சென்னை ராஜ்யத்தில் ஆர்ட்ஸ் காலேஜ் போன்ற கல்லூரிகளில் ஒதுக்கப்பட்ட இடங் கள் இன்னும் காலியாகவே இருக்கின்றன என்றும் என்னுடைய கவன த்திற்கு வந்திருக்கிறது. என்னுடைய கவனத்திற்கு இவ்வளவு தான் வந்திருக்கிறது என்றால் என்னுடைய கவனத்திற்கு வராமல் எத்தனை யோ இடங்கள் இதேபோன்று இருக்கலாம். ஆகவே இதற்குக் காரணம் என்ன என்பதை நன்றாக பரிசீலனை செய்து பார்த்து இவ்விதமான குறை கள் இல்லாதவாறு பார்த்துக் கொள்ளவேண்டும் என்று கேட்டுக்கொள்ளு கிறேன்.

அதோடு இப்போது இருக்கின்ற பாடசாலைகளை உயர் மட்ட, ஹையர் செக்கன்டரி பாடசாலைகளாக மாற்ற வேண்டும் என்றுள்ள திட்டத்தில் சில பாடசாலைகள் மாற்றப்படவிருக்கின்றன. ஆனால் இதே முறையில் போய்க்கொண்டிருந்தால் எல்லா பாடசாலைகளையும் மாற்றுவதற்கு

இன்னும் எத்தனை தலைமுறையாகுமோ என்றுள்ள பயம் ஏற்படுகிறது. இவைகளையெல்லாம் கவனிக்கிறபொழுது கல்வியமைப்பு முறையில் இன்னும் முடிவில்லாமல் குழப்பமிருப்பதாக தோன்றுகிறது. இதில் எதாவது சிக்கல்கள் இருக்கும் என்றால், இதற்கென்று தனியாக மீண்டும் ஒரு உயரிய கமிட்டியை அமைத்து அவசரமாக முடிவு எடுப்பது தான் நல்லது என்பதை தெரிவித்துக்கொள்ளுகிறேன். பஞ்சாயத்து யூனியன்களுக்கு கல்விப் பொறுப்புகளையும் வருங்காலத்தில் நாம் கொடுத்து விடப்போகிறோம். அதில் அதிக கவனம் தேவை. முக்கியமாக சில பள்ளிக்கூடங்களை பஞ்சாயத்து ஏரியாக்களில் பஞ்சாயத்துக்களே 30, 40 வருடங்களாக நடத்திக் கொண்டிருக்கிறார்கள். இம்மாதிரிப்பட்ட பள்ளிக்கூடங்களை அவர்களிடமே பிரைவேட் மானேஜ்மெண்ட்களை விட்டிருப்பதுபோல் விட்டு விட்டால் என்ன தவறு என்பதையும் நாம் ஆலோசித்துப் பார்க்கவேண்டும். அடுத்ததாக, பேஸிக் எஜுகேஷன் எந்த அடிப்படையில் நடந்து கொண்டிருக்கிறது, இதை இன்னும் நல்ல முறையில் எப்படி இயங்கச் செய்ய முடியும், என்பதைப்பற்றி ஆலோசிக்க வேண்டும். அதோடு இதில் ஆசிரியர்கள் கவர்ச்சிகரமான முறையில் எந்த அளவில் பணியாற்ற முடியும் என்பதைப் பற்றியும் பரிசீலனை செய்ய வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

பேசிக் முறை கல்விதான் கதிமோட்சம் என்றால் இரண்டாவது திட்டகாலத்தில் முதல் நான்கு ஆண்டுகளில் திட்ட இலக்குப்படி, பாடசாலைகள் பேசிக்காக மாற்றப்படவில்லை, ஆசிரியர்கள் பயிற்றுவிக்கப் படவில்லை. கடைசியாண்டில்தான் அவசர அவசரமாக நிறைவேற்றப்பட்டிருக்கின்றன. இவைகளுக்கெல்லாம் காரணமென்ன ?

மேலும், செக்கண்டரி கிரேட், டிக்ளயேர்ட் ஹயர் கிரேடு போஸ்டில் வேலை செய்யக்கூடியவர்கள் இருக்கிறார்கள். அவர்கள் செகண்டரி கிரேடு சம்பளம் பெறுகிறார்கள். ஆனால் அவர்களுக்குப் போதிய வெயிட்டேஜ் கொடுக்கப்பட்டிருப்பதாகத் தெரியவில்லை. ஆகவே அவர்களுடைய குறைகளையும் கவனிக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். ஆசிரியர் பயின்ற கல்விக்குத் தக்க ஊதியத்தைப் பெற்று உற்சாகமாய் பணியாற்றக் கூடிய அளவு வசதி செய்து கொடுக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

கடைசியாக நான் கேட்டுக்கொள்வது, திருநெல்வேலி ஜில்லாவில் சீக்கிரமாகவே ஒரு இன்சினியரிங் காலேஜ்-ஜை ஏற்படுத்த முயற்சிக்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டு என் பேச்சை முடித்துக்கொள்கிறேன்.

SRI A. GOVINDASAMI : கனம் சட்டமன்ற உதவித் தலைவர் அவர்களே, இங்கு கொண்டுவரப்பட்டிருக்கும் கல்வி மான்யத்தின் மீது கொடுக்கப்பட்டிருக்கும் வெட்டுப்பிரேரணையை ஆதரித்து பேசுகின்ற நேரத்தில், அரசியல் சட்டத்தில் கொடுக்கப்பட்டிருக்கும் உறுதிமொழியை நிறைவேற்ற நமது கல்வி அமைச்சர் அவர்கள் தவறிவிட்டார்கள் என்பதை சுட்டிக்காட்டவும் விரும்புகிறேன். கடந்த பத்து வருட காலமாக இதே அமைச்சர் அவர்கள் கல்வி அமைச்சராக இருந்தும், அரசியல் சட்டத்தில் எல்லோருக்கும் இலவச கட்டாயக் கல்வி அளிக்கப்பட வேண்டும் என்று சொல்லப்பட்டிருந்தும், அதை ராஜ்ய சர்க்கார் தாங்களும் நிறைவேற்ற முயற்சி எடுத்துக்கொண்டிருக்கிறோம் என்று சொன்னாலும் கூட, மூன்றாவது ஐந்தாண்டுத்திட்ட காலம் ஆரம்பமாகிற இந்த நேரத்திலும் சரியானபடி நிறைவேற்றப்படவில்லை, ஏன் இந்த அளவுக்கு காலதாமதம் ஆகிறது என்பதை கல்வி அமைச்சர் அவர்கள் விளக்க வேண்டும்.

THE HON. SRI C. SUBRAMANIAM : நீங்கள் எந்த உலகத்தில் இருந்து கொண்டு பேசுகிறீர்கள் என்று தெரியவில்லை.

SRI A. GOVINDASAMI : நான் இந்த உலகத்தில் இருந்து கொண்டு தான் பேசுகிறேன். அரசியல் சட்டத்தில் கொடுக்கப்பட்டிருக்கின்ற உறுதிமொழிப்படி நீங்கள் நடக்கவில்லை, அதைத்தான் நான் சுட்டிக்காட்டுகிறேன். மேலும் கிராமங்களில் பள்ளிக்கூடங்களை அமைப்

பதைப் பொறுத்தவரை 300 மக்கள் இருக்கக்கூடிய இடத்தில் கூட பள்ளிக்கூடம் ஏற்படுத்தப்படும் என்று சொல்லப்பட்டது. எங்களது தொகுதியில் 1,000 மக்கள் இருக்கக்கூடிய மூன்று கிராமங்களில் பள்ளிக்கூடம் ஏற்படுத்தவேண்டும் என்று கேட்டுக்கொண்டும் இதுவரை பள்ளிக்கூடங்கள் ஏற்படுத்தவில்லை, என் தொகுதியில் இருக்கின்ற பள்ளிச்சேரி, விப்புதூர், சேர்ந்தனூர் என்ற மூன்று கிராமங்களிலும் பள்ளிக்கூடங்கள் ஏற்படுத்த வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். ஒரு மைல் தூரத்திற்குள் பள்ளிக்கூடம் இருந்தால் அந்த இடத்தில் வேறு பள்ளிக்கூடம் ஏற்படுத்த முடியாது என்று இருக்கிற சட்டத்தின் அடிப்படையில் வேறு பள்ளிக்கூடம் அமைக்க முடியாது என்று சொல்லப்படுகிறது. **'within a radius of one mile'** என்கிற சட்டத்தின் அடிப்படையில் வேறு எங்காவது, ஒரு மைலுக்குள் பள்ளிக்கூடம் இருந்தாலும் அதை எடுத்து மாற்றக்கூடிய நிலைமை ஏற்படுகிறது என்பதை சுட்டிக்காட்ட விரும்புகிறேன். இதன் காரணமாக ஐந்தாறு வயதுள்ள குழந்தைகள் பள்ளிக்கூடத்திற்கு நடந்து போக கஷ்டப்படுகிறார்கள். அதோடு முக்கியமாக, அரசாங்க உதவி பெற்று வரும் பள்ளிகளில் சம்பளத்தில் 15 சதமானம் என்ற அடிப்படையில் மான்யம் கொடுக்கப்பட்டு வந்தது. இதன் காரணமாக இப்போது பல பள்ளிகள் பாதிக்கப்பட்டிருக்கின்றன. மேலும் இதன் மூலம் இப்போது கிடைக்கிற சலுகை $7\frac{1}{2}$ சதமானம் என்று அவர்கள் எடுத்துக்காட்டியிருக்கிறார்கள். இதைக்கொண்டு அவர்கள் நிர்வாகத்தை நடத்திக்கொண்டிருக்கிறார்கள். வாடகை 50 ரூபாய், 80 ரூபாய் என்று கொடுக்கவேண்டியிருக்கிறது. ஆகவே இதை உயர்த்தி 10 சதவிகிதம் என்ற அடிப்படையில் கொடுக்கவேண்டும், அப்படி கொடுத்தால் தான் இந்தப்பள்ளிகள் எல்லாம் நல்லமுறையில் இயங்க முடியும் என்பதையும் தெரிவித்துக்கொள்கிறேன்.

சென்னையில் சர்ச் பார்க் கான்வென்ட் என்கின்ற பள்ளியில், இந்தப்பள்ளி அரசாங்கத்தினுடைய உதவியைப் பெறவில்லை என்றிருந்தாலும் கூட, சர்க்காரினுடைய அனுமதியைப் பெற்றுத்தான் நடக்கிறது. இந்தப்பள்ளியில், ஒரு குழந்தைக்கு ஸ்டாலின் என்கிற பெயர் இருந்ததின் காரணமாக அந்தக்குழந்தைக்கு அந்தப்பள்ளியில் இடம் கொடுக்க மறுக்கப்பட்டது. இந்த நிலை ஏற்பட்டது வேறு யாருக்குமல்ல, ஸ்டாலின் என்ற பெயர் கொண்ட குழந்தை, நம்முடைய அங்கத்தினர் கருணாநிதி அவர்களின் புதல்வன் தான். அவர்களுக்குத்தான் இந்த நிலைமை ஏற்பட்டது.

(கனம் ஸ்ரீ சி. சுப்பிரமணியம் : திராவிட நாட்டிலுள்ளவர்களின் பெயரை கொடுக்காமல் ஏன் ரஷ்யாவிலுள்ளவர்களின் பெயரை கொடுத்திருக்கிறார்கள்!) பள்ளிகளில் மதிய உணவு, இலவச உடை இவைகள் கொடுத்து வருகிறார்கள். இதற்கான திட்டங்களை ஓரளவு நல்ல முறையில் நடத்தி வருகிறார்கள், அதற்காக திரு. சுந்தரவடிவேலு அவர்களை நான் பாராட்டுகிறேன். அதோடு இவர்களது முயற்சியைப் பின்பற்றி வேறு பல மாகாணங்களும் நடவடிக்கை எடுக்க முன் வந்திருக்கிறார்கள். உடை வழங்கும் விஷயத்தில் ஏழை ஆசிரியர்கள் வற்புறுத்தப்படுகிறார்கள் என்பதை இங்கு பல முறை எடுத்துக்காட்டியிருக்கிறோம். ஏற்கனவே இந்தக் குழந்தைகள் ஏழைகளாக இருப்பதினால்தான் அவர்கள் அரை நிர்வாணமாக பள்ளிக்கு வரக்கூடிய நிலைமை ஏற்படுகிறது. இந்த நிலையில் ஆசிரியர்கள் போய் பெற்றோர்களிடத்தில் போய் நிதி கேட்கும்போது, இதனால் ஏதாவது பாதகம் ஏற்பட்டுவிடுமோ என்று பயந்து கையில் பணம் இல்லாவிட்டாலும் கூட, ஏதாவது தட்டுமுட்டு சாமான்களை கொடுத்தாவது இதற்கு நிதி உதவுகிறார்கள். இந்த நிலையைப்பற்றி நானும் திரு. சுந்தரவடிவேலு அவர்களும் கலந்து கொண்ட விழுப்புரம் மகாநாட்டில் குறிப்பிட்டிருக்கிறேன். வேண்டுமென்றால் பணக்காரர்களிடத்தில் வாங்கி ஏழைகளுக்கு கொடுக்கட்டும், அதுவும் போதவில்லை என்றால் செலவில் 50 சத விகிதத்தை அரசாங்கமே ஏற்றுக் கொள்ளவேண்டும். இந்தபகல் உணவு ஆறு ந.பை.-க்கு கொடுக்கப்படுகிறது, காங்கிரஸ் சர்க்காரால் ஆறு ந.பை.-வுக்கு சோறு போடப்படுகிறது என்று காங்கிரஸ் பிரசாரம் வேண்டுமென்றால் செய்யலாமே தவிர, உண்மையிலேயே வயிறார ஒரு குழந்தைக்கு ஆறு ந.பை.-க்கு சோறு போட முடியுமா என்பதைப்பற்றி யோசித்துப்பார்க்கவேண்டும். ஆறு நயாபைசாவைக்கொண்டு எந்தக் குழந்தைக்கும் நிறைவை காட்டிவிட முடியாது.

[Sri A. Govindasami] [22nd March 1961

மேலும் கணவனும் மனைவியுமாக இருக்கின்ற இரண்டு ஆசிரியர்களை வெவ்வேறு இடங்களில் போடக்கூடாது. இவர்களை பிரிப்பதால் பள்ளிகளில் நல்ல முறையில் வேலை நடைபெறுது. அமைச்சர் அவர்கள் புன்னகை புரிகிறுர்,இதிலிருந்து நான் சொல்லுவதின் கருத்தை அவர்கள் புரிந்து கொண்டிருக்கிறுர்கள் என்று நம்புகிறேன்.

பள்ளிகளை பிரிப்பதில், ஒரே பிளாக்கின் கீழ் இருக்கின்ற பகுதிகளிலுள்ள பள்ளிகளை ஒன்றுகச் சேர்த்து பிரிக்கவேண்டும். அப்போது தான் நிர்வாகத்திற்கு சிரமமில்லாமல் இருக்கும் என்பதை தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். அமைச்சர் அவர்கள் இந்த விஷயத்தில் கவனம் செலுத்துவார்கள் என்றும் நம்புகிறேன்.

குறிப்பாக ஆசிரியர்களின் சம்பள உயர்வைப்பற்றி இங்கு சொல்லப்பட்டது. இப்போது ஏற்பட்டிருக்கும் விலைவாசி உயர்வின் காரணமாக தங்களுக்கு கிடைத்து வரும் சம்பளம் போதாது என்று ஆசிரியர்கள் சொல்லிக்கொண்டிருக்கிறுர்கள். டாக்டர் ஸ்ரீமாலி அவர்கள் பார்லிமென்டில் சொன்னதை வேறு விதமாக கன அங்கத்தினர் ஒருவர் கூறி எதிர்கட்சியில் இருந்து சொல்லப்பட கருத்துக்கள் அறியாமையினுல் சொன்னது என்ற முறையில் பேசினுர்கள். குறிப்பாக மயிலம், சிதம்பரம் கல்லூரிகளில் பயின்று இப்போதும் வேலை கிடைக்காமல் எத்தனையோ பேர்கள் இருந்து கொண்டிருக்கிறுர்கள். அவர்களுக்கு வேண்டுமென்றுல் உடனேயே இந்த அரசாங்கம் வேலை கொடுக்கட்டும் என்று குறிப்பிட விரும்புகிறேன். தொழில் கல்வியைப் பொறுத்தவரையில் இதில் பணியாற்றுகின்ற ஆசிரியர்கள் பலர் பாதி ஊதியம் பெற்றுவருகிறுர்கள். இவர்கள் பெற்றுவருகின்ற சம்பளம் குறைவு, அதோடு இவர்களுக்கு கொடுத்த சம்பள உயர்வும் போதாது.

* SRI S. RAMASAMI THEVAR : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்த வெட்டுப் பிரேரணையை ஆதரித்து சில வார்த்தைகளை நான் சொல்ல விரும்புகிறேன். நமது மாகாணம் கல்வித் துறையில் முன்னேற்றம் அடைந்திருக்கிறது என்றுலும், இருக்கக்கூடிய அறியாமையைப் போக்க நாம் இன்னும் பாடுபட்டாக வேண்டும் என்று சொல்லிக்கொள்கிறேன். இப்போது 100-க்கு 30 பேர்கள் தான் படித்திருக்கிறுர்கள் என்றுல் கூடிய விரைவில் எல்லோரையும் படித்தவர்களாக ஆக்குவது நமது கடமை. எங்கும் தொடக்கப் பள்ளிகள் தொடங்கப்பட்டிருக்கின்றன. கிராமங்களில் பள்ளிகள் அமைந்திருந்தாலும் படிப்பின் தரம் குறைவாக இருக்கிறது. இதற்கு பல காரணங்கள் இருக்கின்றன. 60—70 பிள்ளைகள் இருக்கக் கூடிய பள்ளிகளில் கூட ஒரு ஆசிரியர் தான் வேலை செய்கிறுர். இந்த நிலைமையைப் போக்கவேண்டும். ஆரம்பத்தில் பிள்ளைகளுக்கு நல்ல முறையில் கல்வி கற்றுக்கொடுக்கவேண்டும். இது மட்டும் வெட்டி வேலை அல்ல. அவ்வப்போதே பாடங்களைப் படித்தால் தான் கல்வியில் முன்னுக்கு வர ஏதுவாக இருக்கும். எல்லாவற்றையும் பின்னுல் சேர்த்துப் படித்துக்கொள்வதென்பது முடியாது. ஆகவே, இதில் சர்க்கார் கவனம் செலுத்த வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக அநேக பள்ளிகளுக்கு கட்டிட வசதிகள் இல்லாமல் இருக்கின்றன. இதையெல்லாம் கவனிக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

முக்கியமாக 6 வயதிலிருந்து 11 வயது வரையில் கட்டாயமாக பிள்ளைகளைச் சேர்க்க திட்டம் வேண்டும். அறியாமையைப் போக்க கட்டாயக் கல்வியை அவசியம் புகுத்தவேண்டும்.

பிள்ளைகள் பள்ளிகளுக்கு வருவதற்கு கவர்ச்சி இருக்கவேண்டும். தாங்களாகவே வரும் அளவில் பாடங்களை போதிக்கவேண்டும். கிராமங்களில் இப்போது பூங்கா, விளையாடுமிடங்கள் எல்லாம் ஏற்படுத்தப்படுகின்றன. இவைகளை பள்ளிகளுக்கு அருகாமையில் ஏற்படுத்தினுல் நன்றுக இருக்கும் என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

22nd March 1961] [Sri S. Ramasami Thevar]

அடுத்தபடியாக, மதிய உணவுத் திட்டத்தில் ஆசிரியர்களை அதில் சேர்த்து அப்படி அந்த வேலையை அவர்களுக்குக் கொடுக்காமல் இதை பஞ்சாயத்துக்கு விட்டுவிடுவது நல்லது என்று பல காரணங்களைக் கொண்டு சொல்லிக் கொள்கிறேன்.

அறந்தாங்கி எல்லா வகைகளிலும் பிற்போக்காக இருக்கிற மாதிரி கல்வியிலும் பிற்போக்காக இருக்கிறது. $1\frac{1}{4}$ லட்சத்திற்கு மேல் ஜனத்தொகை உள்ள தாலுகா. ஆனால் அங்கு இரண்டு உயர்நிலைப் பள்ளிகள் தான் இருக்கின்றன. ஒன்று ஒரு சத்திரத்தில் நடக்கிறது. மற்றொன்று அறந்தாங்கியில் நடக்கிறது. அதற்கு போதிய கட்டிடம் இல்லை. இப்போது தான் கட்டிடம் கட்டப்படுகிறது. இன்னும் அறந்தாங்கியை பிற்போக்கில் விடாமல் நல்ல பள்ளிகளை ஏற்படுத்தி நல்ல முறையில் கல்வியைப் பரப்ப வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, அமைச்சர் அவர்கள் அரும்பாடு பட்டு இந்த இலாகாவை நிர்வகித்து நல்ல தொகையை செலவழிக்கும் உயரிய நோக்கம் கொண்டிருக்கிறார். அதைப் பற்றி நாம் எல்லோரும் பாராட்ட வேண்டியதுதான். கல்விச் செல்வம்தான் மக்களுக்கு பெரும் செல்வம். ஆனால் இந்தத் துறையிலும் அரசியல் சேர்க்கை புகுந்து விடுவதால் தான் லட்சியம் நிறைவேறாது மாசுபடுகிறது. அரசியல் சேர்க்கை இல்லாமல் கவனிக்க வேண்டும் என்று கேட்டுக்கொண்டு முடித்துக்கொள்கிறேன்.

DEPUTY SPEAKER : Hon. Member Sri Anbazhagan may now speak. I allot fifteen minutes for him. I hope he will try to finish his speech within that time.

* Sri K. ANBAZHAGAN : சட்டமன்றத் துணைத் தலைவர் அவர்களே, இன்று கல்வி மான்யத்தை ஒட்டித் தரப்பட்டிருக்கிற வெட்டுத் தீர்மானங்கள் அனைத்தையும் அமைச்சர் அவர்கள் ஒரு முறை கூர்ந்து கவனிப்பார்களானால், இன்று நாங்கள் என்னென்ன கருத்துக்களைப் பேசவேண்டுமென்று கருதுகிறோமோ அவ்வளவு கருத்துக்களும் வெட்டுத் தீர்மானங்கள் வடிவத்தில் தரப்பட்டிருக்கிற காரணத்தினால் அவைகளைக்கொண்டே அவர் ஆலோசித்து கல்விநிலை குறித்து நல்ல பல முடிவுகளுக்கு வர முடியும் என்று நம்புகிறேன். ஏறத்தாழ 21 கோடி ரூபாய் இந்தக் கல்வித் துறைக்குச் செலவழிக்கும் நேரத்தில், இதில் பெரும் அளவுக்கு பொறுப்பு எடுத்துக்கொள்ளுபவர்—ஒருவர் அமைச்சர், இன்னொருவர் கல்வித் துறை இலாகா தலைவர். மற்றவர்களுக்கு அதிகப் பொறுப்பு இல்லை. நிதி அமைச்சரே கல்வித் துறைக்கும் சேர்த்து அமைச்சராக இருப்பதை விட அவரோடு ஒரு துணை அமைச்சர் கல்விக்கு என இருந்தால் நன்றாக இருக்கும். என்றாலும் நான் இப்படி சொல்லும் போது இது காலம் கடந்து விட்டதாகவே தோன்றும். ஆனால் கல்வித் துறையின் தலைவராக இருப்பவர் ஒருவராக இருப்பதால் இவ்வளவு பொறுப்பையும் ஏற்று அவரால் காலத்தில் நிறைவேற்ற முடிவதில்லை என்பதைக் கவனித்து தொடக்கக் கல்விக்கு தனி கல்வித் துறைத் தலைவர் என்ற முறையிலோ அல்லது கல்லூரிக் கல்விக்கு தனி கல்வித் துறைத் தலைவர் என்ற முறையிலோ வகுக்கப்பட்டு இத்துறை பிரிக்கப்படவேண்டும் என்ற கருத்தை நான் தெரிவித்துக்கொள்கிறேன்.

அதைக் கூறுவதற்கு மற்றொரு முக்கிய காரணம் உண்டு. கல்வித் துறையைப் பற்றி சென்ற ஆண்டில் நான் பேசுகிறபோது கல்வி இலாகாவின் அறிக்கை அவ்வப்போது நமக்குக் கிடைப்பதில்லை—காலம் தாழ்ந்தே கிடைக்கிறது—இரண்டு ஆண்டுகளுக்குப் பின் கிடைக்கிறது என்று தெரிவித்தேன். கடைசியாக 1957–58-ம் ஆண்டின் அறிக்கைதான் வந்திருக்கிறதே தவிர 1958–59, 1959–60 ஆகிய இரண்டு ஆண்டுகளின் அறிக்கைகள் கிடைத்திருக்கத்தக்கவை—ஏனோ கிடைக்கவில்லை. அப்படி கிடைக்கும் போது மிக விரிவாக, பெரிதாக, வெளியிடப்படுவதால், ஒவ்வொன்றும் 6 ரூபாய், 7 ரூபாய் விலை அளவுக்கு அரசாங்கத்தின் பணம் செலவழிக்கப்படுகிறது. கல்வித் துறையினருக்கு கல்வி அமைச்சர் மூலமாக நான்

[Sri K. Anbazhagan] [22nd March 1961

தெரிவித்துக்கொள்வேன், இந்த நிர்வாக அறிக்கை இரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறை வெளிவந்தாலே போதும், ஆனுல் ஒரு சுருக்கக் குறிப்பு 6 மாதங்களுக்கு ஒரு முறையோ அந்தந்த ஆண்டோ தரப்படுமானுல் அது சிறப்பாக இருக்கும்.

அடுத்து கல்வி பற்றி அரசாங்கத்தின் நோக்கத்தைக் குறித்து யாரும் ஐயுறவில்லை—அமைச்சருக்கு நல்லெண்ணம் இருக்கிறது என்பதையும் கல்வி வளரவேண்டும் என்று கருதுகிறுர் என்பதையும் குறித்து நானும் ஐயுறவில்லை—இந்த நோக்கம் கூட அமைச்சருக்கு இல்லை என்றுல், அவர் கள் அமைச்சர்களா என்று கேட்பேனே தவிர, அவருடைய நோக்க த்தை மறுக்கவில்லை. ஆனுல் அந்த நோக்கத்தை நிறைவேற்றும்போது ஏற்படுகிற சிக்கல்களைத்தான் எதிர் கட்சியைச் சார்ந்த உறுப்பினர்களும், ஆளும் கட்சியைச் சார்ந்த உறுப்பினர்களும் ஆளும் கட்சியைச் சேர்ந்த அம்மையாருங்கூட எடுத்துச் சொன்னுர்கள். அரசாங்கம், ஒரு வகுப்புக்கு ஏறத்தாழ 40 பிள்ளைகள் இருக்கவேண்டும், குறைந்தது 35 பேர்கள் இருந்தால்தான் ஒரு ஆசிரியரை அனுமதிப்போம் என்று சொல்லுமானுல் அதனுல் எந்த அளவு கல்வியின் தரம் தாழ் கிறது என்று அமைச்சர் அவர்கள் அருள் கூர்ந்து பரிசிலனை செய்து பார்க்க வேண்டும். கான்வென்ட் பள்ளிகளின் தரம் உயர்வாக இருக்கிறது என்றுல், ஒவ்வொரு வகுப்பிலும் பிள்ளைகளின் எண்ணிக்கையைக் குறை வாக வைத்திருப்பதுடன் ஆசிரியர்களுக்குப் பொறுப்பையும் பங்கிட்டுத் தருகின்றனர். நமது நிர்வாகத்தில் உள்ள பெரும்பாலான பள்ளிகளில் ஒரு ஆசிரியர் நியமிக்கப்பட்டுள்ளவற்றுள் அவரும் பள்ளியை மூடிவிட்டு நிதிவசூலுக்குப் போவதும் அல்லது இரண்டு ஆசிரியர்கள் நியமிக்கப்பட்டி ருந்தால் ஒரு ஆசிரியரிடத்தில் ஒப்படைத்துவிட்டு இன்னெருவர் வெளியே சென்று வசூல் செய்யப் போவதும் ஆக இப்படி ஒரு இக்கட்டான, சிக்கலான வருந்தத்தக்க நிலை நீடித்திருக்கிறது என்பதை உணர்ந்து, ஆராய்ந்து, அதை மாற்றுவதற்கான வழிகளைக் காணவேண்டும். அன்பழகன் எடுத்துச் சொல்கிற காரணத்திஞல் குற்றம் சாட்டுவதற்காகவே சொல்லுகிருன் என்று எண்ணுவதை விட்டு, நாட்டு மக்கள் என்ன நினைக்கிறுர்கள் என்பதைக் கேட் டறிந்தாவது நடவடிக்கை எடுக்கவேண்டும். பல்வேறு இடங்களில் இருந்து இப்படிப்பட்ட குறைகளை எதிர் கட்சியிலுள்ள எங்களுக்கு எழுதுகிறுர்கள், ஏதாவது ஒரு தடவை சட்ட மன்றத்தில் எடுத்துச் சொல்வார்கள் என்ற நினைப்போடு. அப்படி வந்தவற்றையே இங்கே குறிப்பிடுகிறேன். உண்மையிலேயே கோவை மாவட்டத்தில்—பவானி வட்டாரத்தில் என்று நான் நினைக்கிறேன்—ஆசிரியர்களும் மாணவர்களும் அரசாங்கம் விற்கும் பரிசுப்பத்திரங்களை குறைந்தது 15 ரூபாய் அளவுக்காவது வாங்க வேண்டும் என்று கட்டாயப்படுத்தப்பட்டிருக்கிறுர்கள். தென் ஆற்காடு மாவட்டத்திலிருந்தும் ஆசிரியர்கட்கு தரும் தொல்லைகளைப் பற்றி எழுதி யிருக்கிறுர்கள். ஆசிரியருக்கு ஏற்படும் இக்கட்டான நிலைமை எந்தக் காரணத்தினுல் ஏற்பட்டாலும் அதைத் தடுக்க முன்வரவேண்டும்.

மற்றென்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். 35 மாணவர்களுக்கு ஒரு ஆசிரியர் என்று கணக்கிடுவதைவிட, அந்த முறையில் ஊதியம் கணக்கிடுவதை விட ஒரு வகுப்புக்கு ஒரு ஆசிரியர்— வகுப்பில் 35 பேர்கள் வரையில் இருக்கலாம்—என்று ஏற்க வேண்டும். கல்விக்காக 21 கோடி ரூபாய் செலவழிக்கிறுர்கள். இதனுல் இன்னும் 2—3 கோடி ரூபாய் செலவு கூடுதலானுலும் அமைச்சர் அவர்கள் இதனை அருள்கூர்ந்து கவனிக்கவேண்டும்.

ஆதாரக் கல்வியைப்பற்றித் திரும்பத்திரும்பச் சொல்லுகிறேம். இதைப் பற்றிய தெளிவான விளக்கம் யாரும் தரவில்லை. இதற்கு ஆதரவாகப் பேசுகிறுர்களே தவிர, போற்றுகிறுர்களே தவிர, ஆதாரத்தோடு இதனுல் முன்னேற்றம் ஏற்பட்டிருக்கிறது என்று கூறுவாரில்லை. இதுகுறித்து நான் பல்வேறு ஆசிரியர்களைக் கலந்து பேசியிருக்கிறேன், இதனை ஆசிரியர்களே கேலி செய்கிறுர்கள். ஆதாரப் பயிற்சி பெறுபவர்கள் பயிற்சிப் பள்ளி யிலே அளிக்கப்படும் பயிற்சியையே கேலியாகச் சொல்லுகிறுர்கள், பள்ளி களில் உள்ள மாணவர்கள் என்ன பலன் பெறுகிறுர்கள் என்று எவரும் காட்ட முடியவில்லை.

22nd March 1961] [Sri K. Anbazhagan]

நமது நிதி அமைச்சர் அவர்கள் அண்மையில் மேல்நாடு சென்று வந்திருக்கிற காரணத்தினால் இந்த வகையான ஆதாரக் கல்வியை எந்தெந்த மேல் நாடுகளில் வைத்திருக்கிறார்கள் என்று கேட்க விரும்புகிறேன். மேற்கு ஜெர்மனி போன்ற நாடுகள் முன்னேறியது இந்த ஆதாரக் கல்வியினால்தான் என்று அவர் தெரிவிப்பாரேயானால் நானும் அதனை ஏற்றுக்கொள்ளத் தயாராக இருக்கிறேன் என்று சொல்லிக் கொள்ளுகிறேன்.

அடுத்து தொழில் கல்வி தேவை என்பதை நாட்டில் உள்ள எந்த நல்லறிவாளரும் மறுக்க மாட்டார்கள். படித்தவர்களிடம், நகத்தில் அழுக்குப் படாமல் வாழவேண்டும் என்றுள்ள மனப்பான்மையை மாற்ற வேண்டுமென்பதற்குத்தான் இந்தத் திட்டத்தைப் புகுத்துகிறோம் என்று சொல்லுபவர்கள் நம் நாட்டைப் பொறுத்த வரையில் மக்கள் தொழில் கிடைக்கவில்லை என்று கூறுகிறார்களே தவிர, தொழில் செய்யமாட்டோம் என்று கூறவில்லை என்பதை உணரவேண்டும். ஆனால் குழந்தைகட்கு தொழில்பயிற்சி பெற முடியாத வயதில், தேடமுடியாத பருவத்தில், ஆதாரக்கல்வி என்று திக்கினி தரப்படுகிறது. நம் நாட்டில் செல்வர்கள் வீட்டு மக்கள் வேண்டுமானால் தொழில் செய்யும் மனம் இல்லாமல் இருக்கலாம். ஆனால் ஏழை எளியவர்களாக இருக்கிறவர்கள் எல்லோரும் தொழில் செய்யும் ஆர்வத்தோடுதான் இருக்கிறார்கள்.

ஆகவே அந்த மனப்பான்மையுள்ள மக்களுக்கு எந்த வகையில் தொழிற் கல்வி பெறுவதற்கு வசதி செய்ய முடியுமோ அதற்கான தனி முயற்சிகளை மேற்கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

ஆதாரக் கல்வியை வளர்ப்பதற்காக, 1,500 ஆரம்பப் பள்ளிகளை இதற்கு மாற்றவேண்டுமென்று நினைத்தோம், ஆனால் அதன்படி தொடங்கி இன்று 2,100 பள்ளிகளை இப்படி மாற்றிவிட்டோம் என்று பெருமையாகச் சொல்லி இருக்கிறார்கள். ஆனால் நான் இதற்காகக் கவலைப்படுகிறேன். வரவிருக்கும் அடுத்த ஆண்டிலே இன்னும் 1,000 பள்ளிக்கூடங்களை இப்படி மாற்றப் போகிறோம் என்றும் தெரிவிக்கப்படுகிறது. அதற்காக 1,000 ஆசிரியர்களுக்கு பயிற்சி தந்திருக்கிறோம் என்றும் சொல்கிறார்கள். நான் சொல்கிறேன், ஆதாரப் பயிற்சி பெற்ற ஆசிரியர்களில் 10 பேரையும், சாதாரண முறையில் பயிற்சி பெற்ற ஆசிரியர்களில் 10 பேரையும் அழைத்து, இதைப் பற்றி அவர்களுடைய எண்ணம் என்ன, அவர்களுக்கும், இவர்களுக்கும் என்ன வேறுபாடு, என்ன சிறப்பு, ஏற்பட்டுள்ளது என்று பரிசீலனை செய்து பார்த்து, மனதுக்கு சரியென்று பட்டால்—நடைமுறைக்கு இது ஏற்றது என்று தோன்றினால் இதை வைத்துக் கொள்ளலாம். ஆனால் அதற்கு முன் ஆராய்ந்தறிவது அவசியம் என்பதை இந்தச் சமயத்திலே வற்புறுத்திக் கேட்டுக் கொள்கிறேன்.

அதேபோல, இன்றைக்கு 10-ம் வகுப்பு வரை ஆதாரக் கல்வி முறையில் பயிற்சி பெற்று கல்லூரிக்கு சேர வரும்போது அல்லது பொறியியற் கல்லூரியிலோ, அல்லது மருத்துவக் கல்லூரியிலோ சேரும்போது, ஆதாரக் கல்வி முறையிலே பெற்ற பயிற்சி அவர்களுடைய திறமையை எந்தவகையிலாவது அதிகப்படுத்த உதவுகிறதா? மற்ற மாணவர்களைவிட இவர்களுக்குத்தான் தொழிலில் ஆர்வம் அதிகம் இருக்கிறதா என்பதையாவது ஒரு புள்ளி விவரக் கணக்குச் சேகரித்து ஆராய்ந்து பார்க்கட்டும். அப்படிச் செய்யாது, இந்த ஆதாரப் பயிற்சியை 6, 7 வயது இளம் மாணவர்களுக்கு அளிப்பது என்பதை என்னால் ஏற்றுக்கொள்ள முடியாது. அவர்களை இந்தப் பயிற்சி எந்த விதத்திலும் உயர்த்திவிடாது. 11, 12 வயது நிறைந்த மாணவர்களுக்கு ஒரு தொழிலைச் சொல்லிக்கொடுப்பது என்று இருக்குமானால் 11-வது வகுப்பை முடிக்கும் வரை 4 ஆண்டு காலத்தில் ஏதாவது, ஒரு தொழில் பயிலும் அளவிலே இந்தப் பயிற்சி அவர்களுக்கு உதவியாக இருக்கலாம். இதை அமைச்சர் அவர்கள் எண்ணிப்பார்க்க வேண்டும் எண்ணிப்பார்த்தால் இந்த முறையையே ஏற்று நிறைவேற்றுவார்கள். என்று நம்புகிறேன்.

[Sri K. Anbazhagan] [22nd March 1961

‘பைபர்கேட்டட் கோர்ஸ்’ என்ற பிரிக்கப்பட்ட வகுப்பு முறையினைப் பரப்புவதற்கு ஒரு திட்டம் இருப்பதோடு அதன்படி 36 பள்ளிக்கூடங்களை கைத்தொழில் பள்ளிகளாக்கப்போவதாக தெரிவிக்கப்பட்டிருக்கிறது. கைத்தொழில் பயிற்சிக்கு 36 பள்ளிக்கூடங்களை மாற்றுவது போதாது. இன்றுள்ள உயர்நிலைப் பள்ளிக்கூடங்களில் பாதி அளவு அவ்வாறு மாற்றியமைக்கப்பட வேண்டும். அதற்கு எவ்வளவு கோடி செலவானாலும் அமைச்சர் முயற்சி எடுத்துக் கொண்டால், ஆதாரக் கல்வியைவிட இத்திட்டம் நல்ல முறையில் செயல்படும் என்பதை நான் தெரிவித்துக்கொள்கிறேன்.

சிறு குழந்தைகளுக்குத் தருகிற தொழில் பயிற்சி எந்த அளவிலும் அவர்களுக்குப் பயனளிக்கவில்லை. அதைச் சொல்லிக் கொடுக்கின்ற ஆசிரியர்களுக்கும் அதிலே ஊக்கம் உண்டாகவில்லை. அதற்கு நேர்மாறான நிலையையும் மனோபாவத்தையும் தான் வளரச்செய்கிறது. 10 வயதுக்குக் குறைந்தவர்களுக்கு இந்த மாறுபட்ட மனநிலைதான் ஏற்படும். எனவே 10 வயதிற்கு மேற்பட்டு 15, 16 வயதளவில் தொழில்கல்வி பயிற்றுவிக்கப்படுவதே பயன் தரும் என்று நான் கருதி வற்புறுத்துகிறேன். அதோடு 108 பள்ளிகளில் நூலக வசதிகளைப் பெருக்குவதற்குத் திட்டமிட்டு இருப்பதாகச் சொல்லப்படுகிறது. அதையும் இன்னும் விருத்தி செய்வது அவசியம் என்று நான் கருதுகிறேன்.

அதற்கடுத்து நான் ஒரு பொதுவான கருத்தைத் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். மாணவர்களை அரசியலுக்கு இழுக்கக்கூடாது, அவர்கள் அரசியலிலே பங்கு பெறக்கூடாது என்று பொதுவாக சொல்லப்படுகிறது. ஆனால், அவர்கள் அரசியலை அவசியம் அறிந்து கொள்ள வேண்டும். அவர்கள் அரசியலைப்பற்றிக்கூடப் பேசலாம், ஆனால் கட்சி அரசியலில்தான் பங்கு பெறக்கூடாது என்று கூறுவதே முறையாகும். திராவிட முன்னேற்றக் கழகத் தலைவர் அவர்களும், கல்வி அமைச்சர் நடத்திய மாநாட்டில் மாணவர்கள் கட்சி அரசியலில் இருக்கக் கூடாது என்ற பொதுக்கருத்தை ஒப்புக்கொண்டதற்கு பின்னால், மாணவர் இயக்க மாநாடுகளில் கட்சித் தலைவர்கள் கலந்துகொள்ளாத முறையை மேற்கொண்டிருக்கிறார்கள். ஆனால் என்ன காரணத்தாலோ அது அமைச்சர்களாலேயே மீறப்படுகிறது. முதல் அமைச்சரேசென்று அவர்களுக்கு அரசியல் பாடம் சொல்லிக்கொடுக்க கூடிய அளவில் செயலாற்றி வருகிறார். எங்களுக்கும் தெரியாததல்ல, மாணவர்களை எப்படி எங்கள் பக்கம் இழுப்பது என்பது. ஆனால் இப்படித்தான் இனி நடப்பது என்று தீர்மானித்து விட்டால் நாங்கள் சிறிதும் கஷ்டமின்றியே மாணவர்களைத் திருப்பிக்கொள்ள முடியும். ஆனால் அதைக் குறித்து இப்போதாவது நம் கல்வி மந்திரி அவர்கள் தக்கதொரு முடிவினை, அனைவருக்கும் பொதுவாக எடுத்துக்கூற வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்து, ஆசிரியர்களுக்குத் தரப்படுகின்ற ஊதியம் ஏராளம், அதைக் கண்டு நாங்கள்கூடப் பொருமைப் படுகிறோம் என்ற கருத்தை நண்பர் சர்தார் வேதரத்னம் அவர்கள் பேசும்போது தெரிவித்தார்கள். எந்த அடிப்படையில் சொன்னார்கள் என்பது எனக்கு ஆச்சரியமாக இருக்கிறது. சர்தார் அவர்கள் சட்டையில்லாமலே வாழக்கூடிய பழக்கமுடையவர், ஆனால் ஆசிரியர்கள் பாவம் சட்டை போடப்பழகிக் கொண்டவர்களாயிற்றே. அவர்களுக்குக் கொடுக்கப்படும் சம்பளம் காணவில்லை. வேண்டுமானால் நம்மால் இதற்குமேல் சம்பளம் கொடுக்க முடியவில்லை என்று சொல்லலாம். அதைத் தவிர, ஆசிரியர்களுடைய நிலை உயர்ந்துவிட்டது என்று பேசினால், நம்மை நாமே ஏமாற்றிக்கொள்பவர்களாக ஆவோமா என்றுதான் ஐயுற வேண்டியிருக்கிறது.

அதற்கடுத்து நான் தெரிவிக்க விரும்பும் கருத்து பாடமொழி பற்றியது. இந்தத் திட்டத்திலே நம்முடைய கல்வி மந்திரிக்கு நல்லதொரு நோக்கம் இருக்கிறதென்றே சொல்லலாம். ஆனால் செயலிலே அந்த அளவுக்கு வேகம் இல்லாமல் இருப்பதற்கு என்ன காரணம் என்பதை ஆராய்ந்தறிய வேண்டும். தமிழ்மொழியைக் கொண்டுதான் தமிழர் கல்வி அறிவைப்பெற வேண்டுமென்றால் தமிழ் பற்றுள்ள எவரும்,

22nd March 1961] [Sri K. Anbazhagan]

தமிழ் நாட்டிலுள்ள எவரும் மறுக்க மாட்டார்கள். ஒருவேளை தாங்கள் மேற்கொண்ட பழக்கத்தாலும், பயிற்சியாலும் ஆங்கிலத்திலேயே பயிற்சி இருக்கவேண்டுமென்று சிலர் கேட்கக்கூடும். ஆனால் நாட்டு மக்கள் அறிந்துள்ள தமிழ் மொழியில் பயிற்சி தரப்போகிறோம், அப்படிப்பட்ட பயிற்சிக்கான வழிவகைகள் நிறைவேறி வருகிறது, என்போர் அதற்காக 30 பாடப் புத்தகங்களைத் தமிழிலே வெளியிட்டிருக்கிறோம், இன்னும் 50 புத்தகங்களை எழுதிக்கொண்டிருக்கிறார்கள் என்று சொன்னால் மட்டும் போதாது. விஞ்ஞானக் கருத்துடைய பலப் பல நூல்கள், தொழிலிலே ஏற்படும் வளர்ச்சியை அறியக்கூடிய வகையில் வரக்கூடிய நூல்கள் ஆகியவைகளை வெளியிடுவதற்கு, அந்தந்த துறையிலே ஈடுபட்டுள்ள ஆசிரியர்களுக்கு ஊக்கம் அளித்து பல்வேறு நூல்களை வெளியிடத் தூண்ட வேண்டும். அமெரிக்காவிலிருந்தும், இங்கிலாந்திலிருந்தும் அந்தந்த மக்களின் தாய் மொழி வாயிலாக விஞ்ஞான நூல்கள் வெளிவருவதற்கு ஓரளவு நிதி உதவி செய்ய முன்வருவதாகக் கேள்விப்படுகிறேன். மத்திய சர்க்கார் கல்வி மந்திரி அவர்கள் இந்தியில் எத்தனை புத்தகங்கள் வெளிவந்தாலும் அத்தனையும் வெளியிடுவதற்கு உதவி செய்யப்படும் என்பதை எடுத்துச் சொல்லிவிட்டு, பிற வட்டார மொழிகளுக்கும்கூட உதவிகேட்டால் கொடுக்கப்படும் என்று தெரிவித்திருக்கிறார்கள். நிதி மந்திரி அவர்கள் இதில் தனது முழு செல்வாக்கையும் பயன்படுத்திக் கொள்ள வேண்டும். ஒரு வகுப்புப் பாடத்திட்டத்துக்கு 18 புத்தகங்கள்தான் தேவை என்ற அளவிலே மட்டும் இருக்கக்கூடாது. இதைத் தவிர பல நூல்கள் தேவைப்படுகின்றன. இதனால் ஒவ்வொரு துறையிலும் இப்போது பாடத்திட்டத்தை ஒட்டி வெளிவரும் நூல்களைத் தவிர்த்து, பொதுக்கருத்தை வளர்த்தி ஜெனரலைசேஷன் முறையில் பல்வேறு விஞ்ஞான நூல்கள் வெளியிட நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

பல்கலைக் கழகத்திலும், கல்லூரிகளிலும் பயிலும் மாணவர்கள் எல்லோரும் நிதி வசதியோடு படிக்கவில்லை. அவர்களில் பெரும்பாலோர் ஏழைகளாக இருக்கிறார்கள். வாழ்வுக்கே மிகவும் கஷ்டப்படும் குடும்பத்தினர். அப்படிப்பட்ட மாணவர்கட்கு உதவ வட நாட்டுக் கல்லூரிகள் சிலவற்றுடன் இணைத்து பல இன்டஸ்ட்ரியல் எஸ்டேட்டுகள் ஆரம்பித்து, ஓய்வு நேரங்களில் ஏழை மாணவர்கள் தொழில் செய்து ஊதியம் பெறுவதற்கு வழிவகை செய்யப்போவதாக இரண்டு நாட்களுக்கு முன்னே மத்திய சர்க்கார் கல்வி மந்திரி அவர்கள் பேசியிருக்கிறார். அப்படிப்பட்ட திட்டம் நம்முடைய தமிழ் நாட்டிற்கும் மிகவும் அவசியமாகும். நம்முடைய மாணவர்கட்கும் அந்த வாய்ப்புக் கிடைக்க தமிழ் நாட்டிலும் ஓரிரு கல்லூரிகளிலாவது இன்டஸ்ட்ரியல் எஸ்டேட்டை நிறுவுவதற்கான நடவடிக்கைகளை எடுத்துக்கொள்ளும்படிக் கேட்டுக்கொள்ளுகிறேன். கல்லூரியுடன் தொழில் பேட்டை இணைவது மாணவர்கட்கு பேருதவியாகும்.

இன்றையதினம், ஆசிரியர்கள் தமிழையே பாட மொழியாகக்கொண்டு திறமையான முறையிலே ஆர்வத்துடனும் பயிற்றுவிக்க வேண்டுமென்றால், பயிற்சிக் கல்லூரிகள் தமிழிலேயே நடக்க உற்சாகமும், ஊக்கமும் அளிக்க வேண்டும். சைதை ஆசிரியர் பயிற்சிப் பள்ளியினரும், அதன் முதல்வரும் தமிழ் மொழியிலே பயிற்சிக்குரிய பல்வேறு நூல்களை இயற்றுவதில் ஊக்கமுடன் செயல்பட்டு வருகிறார்கள் என்று அறிவதால் அவர்களுக்கு என் உளமார்ந்த பாராட்டுதல்களை கனம் அமைச்சர் அவர்கள் மூலமாக தெரிவித்துக்கொள்ளுகிறேன். அக் கல்லூரி இத்துறையில் செயல்படுவதற்கு மேலும் ஊக்குவிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

கல்வித் துறை நிர்வாகத்தில் சில பள்ளிகளுக்கு நியாயமான அனுமதிகூட மறுக்கப்படுகிறது என்று நான் முன்னரே தெரிவித்திருக்கிறேன். பல குறிப்புகளை நான் சென்ற ஆண்டில் பேசுகின்ற போது இந்தச் சட்ட மன்றத்திலேயே கொடுத்திருக்கிறேன். அதோடு பள்ளிக்கு தரப்படவேண்டிய உதவித் தொகையும் தரப்படுவதில்லை. இப்போது உதாரணத்திற்கு ஒன்று சொல்லுவேன். செங்கல்பட்டு மாவட்டத்தில் உத்திர மேரூருக்குப் பக்கத்தில் மானாமதி இருக்கிறது. அங்குள்ள உயர் தொடக்க நிலைப்பள்ளியில் சுமார் 800 மாணவர்கள் படிக்கிறார்கள்.

[Sri K. Anbazhagan] [22nd March 1961

அவர்கள் அத்தொடக்கநிலைப் பள்ளியை உயர்நிலைப் பள்ளியாக்க வேண்டுமென்று கேட்டும் எனோ அனுமதி மறுக்கப்படுகிறது. அதற்காக மாவட்டக் கல்வி அதிகாரி ஆணையின்படி 5,000 ரூபாய் செலுத்தி, இரண்டு ஆண்டுகள் ஆகியும் அதற்கு இன்னும் அனுமதி மறுக்கப்பட்டு வருகிறது. கல்வி இலாகாவிலே இவ்வளவு தாமதம் இருக்கிறது. மாணவர்கள் நல்ல முறையிலே ஆண்டுதோறும் படித்து 'பாஸாக' வேண்டுமென்கிற கல்வி இலாகாவினர், ஆண்டுதோறும் தங்கள் கடமையிலே 'பெயிலாகிக்' கொண்டு வருகிறார்கள். இதனைக் கல்வி இலாகாவையோ அல்லது கல்வி டைரக்டர் அவர்களையோ குற்றம் சொல்ல வேண்டுமென்பதற்காகச் சொல்லவில்லை. கல்வி இலாகா டைரக்டர் எனது நெருங்கிய நண்பர், ஓர் வகையில் உறவினரும்கூட. அவருடைய இலாகாவிலே இப்படியெல்லாம் குறை ஏற்படுகிறது என்பதைத்தான் இந்த நேரத்திலே சுட்டிக்காட்ட விரும்புகிறேன்.

இதைத் தவிர, பள்ளிக்கூடங்களை புதிதாக அமைப்பதில் ஒரு சிலருக்கு சலுகைகள் காட்டப்பட்டு வருகிறது. கல்வி இலாகா டைரக்டரின் சொந்த ஊராகிய நெய்யாடிப்பாக்கத்தில் ஒரு உயர்நிலைப் பள்ளிக்கூடம் அண்மையில் தோன்றியதால் அதற்குப் பக்கத்தில் 3 மைல் வட்டாரத்திலுள்ள ஆரப்பாக்கத்தில் இருந்துவரும் பள்ளியின் மாணவர் தொகையையும் வளர்ச்சியையும் அது கெடுத்திருக்கிறது. கல்வி இலாகாவின் டைரக்டரின் சொந்த ஊரில் ஒரு தனிக் கல்லூரியே ஏற்பட வேண்டுமென்பதில் ஆசை இருக்க வேண்டியதுதான். எனக்கும் அவ்வித ஆசையில் வெறுப்பில்லை. ஆனால், அதே நேரத்தில் பக்கத்து ஊரிலே உள்ள எல்லாப் பள்ளிக் கூடங்களும் வளர வேண்டுமென்பதையும் கவனத்தில் வைத்துக்கொண்டு, எதையும் படிப்படியாக உயர்வடையச் செய்ய வேண்டும். மேலும், கல்வித் துறை நிர்வாகத்தில் அடிக்கடி சில அரசியல் வாதிகளின் குறுக்கீடுகளும் இருந்து வருகிறது. இதை எல்லாம் கல்வித் துறை நிர்வாகத்தில் உள்ளவர்கள் எண்ணிப் பார்க்க வேண்டும்.

அடுத்து தெரிவிக்க விரும்புவது முக்கியமானது. தனியார் பள்ளிக் கூடங்கள் சம்பளம் வசூலிப்பதாக இருந்தாலும், 15 சத விகிதம் அளவுக்கு நிர்வாகச் செலவை அரசாங்கம் ஏற்றுக்கொள்ளுமென்று சொன்னார்கள். ஆனால், அதனால் செலவு அதிகமாகிறது என்ற காரணத்தாலோ என்னவோ, அது மீறப்பட்டு பல தனியார் பள்ளிகள் அரசாங்கத்தின் உதவித் தொகை கிடைக்காமல் திண்டாடிக்கொண்டிருக்கின்றன. நண்பர் திரு. ஏ. கோவிந்தசாமி அவர்கள்கூட இதைப்பற்றி எடுத்துச் சொன்னார்கள். அப்படிப்பட்ட பள்ளிக்கூடங்களுக்கு தாங்கள் தருவதாகச் சொன்ன சிறு தொகையையாவது முறைப்படி கொடுங்கள் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். உதவித் தொகைக்குப் பதிலாக 5–வது வகுப்பு வரை மாணவர்களிடம் சம்பளம் வாங்கிக்கொள்ளலாம் என்று சொல்லுகிறார்கள். அப்படி மாணவர்களிடத்திலே சம்பளம் வாங்குவது காரணமாக ஆசிரியர்களுக்கு முறைப்படி நியாயமான சம்பளம் கொடுக்க முடியாமல் பாதிச் சம்பளம், மூன்றில் ஒரு பங்கு சம்பளமும், முக்கால் சம்பளமும் கொடுக்கக்கூடிய நிலைமையில் தனியார் பள்ளிகள் இருக்கின்றன என்பதை கனம் அமைச்சர் அவர்களுக்கு சுட்டிக்காட்ட விரும்புகிறேன். ஆகவே, ஒன்று இப்படிப்பட்ட எந்தப் பள்ளிக்கூடத்திலும் 5–வது வகுப்பு வரை மாணவரிடம் சம்பளம் வாங்கக்கூடாது என்ற நியதி இருக்கவேண்டும். அப்படி இசையாத பள்ளிகளை சர்க்கார் ஏற்றுக்கொண்டு நடத்த முன்வர வேண்டும். இல்லாவிட்டால் அதன் ஆசிரியர்கட்கு அரசாங்கத்திலிருந்தே நேரடியாக சம்பளம் அளித்திட வேண்டும். இந்த இரண்டுமற்ற நிலையில், இன்று ஆசிரியர்கள் தான் மிகவும் திண்டாடுகிறார்கள். இதை கனம் அமைச்சர் அவர்கள் ஆழ்ந்து சிந்தித்து முடிவு செய்வார்களென்று நம்புகிறேன்.

1 p.m. கடைசியாக ஏழை மாணவர்கட்கு சம்பளச் சலுகை அளித்திருக்கின்ற நோக்கத்தை வரவேற்கிறேன். ஆனால், ரூ. 100 அளவு மாத ஊதியம் பெறுகிறவர்களுக்கு அவர்களுடைய குழந்தைகளே ஏழைப் பிள்ளைகள் என் கருதப்பட்டு அவர்கட்கு மட்டும் சம்பளச் சலுகை வழங்கப் பட்டுள்ளது என்.ஜி.ஓ. வினருக்கு ரூ. 300 அளவு ஊதியம் இருந்தாலும்

22nd March 1961] [Sri K. Anbazhagan]

கல்விச் சலுகை தரக்கூடிய நேரத்தில்—அரசாங்க ஊழியர் என்ற காரணத்தினால், அவர்களுக்கு அச்சலுகை கொடுப்பது முறைதான் என்று சொன்னாலும், மற்றவர்களுக்கும் ரூ. 200 அளவிற்காவது, ஆண்டு ஒன்றுக்கு ஊதியம் ரூ. 2,400 அளவு வரையிலாவது 11–வது வகுப்பு வரையில் சம்பளச் சலுகை தர வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். உயர்நிலைப் பள்ளிகளில் 11–வது வகுப்பு துவங்குவதற்கு முன்வரும்போது அதன் 'தரம்' குறையாமலும், கவனித்துக் கொள்ளவேண்டும். 11–வது வகுப்பினைப் பள்ளியில் ஏற்படுத்தவும், ஒப்புக்கொண்டு, பிரியூனிவர்ஸிடி என்னும் புகுமுக வகுப்பு நீங்கலாக—மூன்றாண்டுகளில் பட்டப் படிப்பு பெறுவது மாணவர் கல்விதரத்தைக் குறைத்துவிடும் என்ற கருத்தையும், அமைச்சர் வெளியிட்டிருப்பதால்,—ஒரு இக்கட்டான நிலைமையை உண்டாக்கியிருக்கிறார். எம்முறையை அமைச்சர் முழு மனதுடன் ஆதரிக்கிறார் என்று எண்ணிப் பார்க்கும் எனக்கும் அது இக்கட்டான நிலைமையாகத்தான் தோன்றுகிறது. காரணம் கல்வித் தரம் எங்கு குறைந்துவிடுமோ என்ற கவலை. அது பற்றி பல்வேறு நிபுணர்களைக்கொண்டு தக்கபடி ஆராய்ச்சி செய்து செயல்பட வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

தொழில் பள்ளிக்கூடங்கள் அனைத்தையும் ஒரே இலாகாவிடம் ஒப்படைக்க வேண்டுமென்று முன்னமேயே தெரிவித்திருக்கிறேன். இண்டஸ்ட்ரியல் ஸ்கூல்ஸ் 'பாலி டெக்னிக்ஸ்' இரண்டையும் சேர்த்து, ஒரே நிர்வாகத்தின்கீழ் கொண்டு வரவேண்டும். இளஞ்சிறார் தொழிற் பயிற்சிக் கல்லூரி என்று பெயர் வைத்திருக்கிறார்கள். இவைகளெல்லாம் ஒரே நிர்வாகத்தில் வருவதற்கு வழிவகை காணவேண்டும். அமைச்சர் அவர்கள் இவற்றைக் கவனித்து தக்க விடை தருவார்கள் என்று கருதி, என்னுடைய உரையை முடிக்கிறேன். வணக்கம்.

*** THE HON. SRI C. SUBRAMANIAM**: கனம் உதவி சபா நாயகர் அவர்களே, இந்த மானியத்தில் பேசி பொதுவாக கல்வித் துறை ஆற்றி வருகிற பணியை வரவேற்றுப் பாராட்டியதற்காக எல்லா அங்கத்தினர்களுக்கும் என்னுடைய நன்றியைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். இந்த மானியத்திற்கு ரூ. 20 கோடிக்கு மேல் ஒதுக்கப்பட்டிருக்கிறது என்பதைப் பற்றி எல்லோரும் பாராட்டிப் பேசினார்கள். அந்த அளவுக்கு நிதி ஒதுக்கியிருக்கிற காரணத்தினாலே இதை நிறைவேற்றுகிற இலாகாவிற்கு அதிகப்பொறுப்பு ஏற்படுகிறது என்பதையும் நாம் மனதில் கொள்ள வேண்டும். ஏதோ 2 கோடி, 3 கோடி என்று சொன்னால், அதில் தவறு ஏற்பட்டுவிட்டாலும்கூட பரவாயில்லை என்று விட்டுவிடலாம். ஆனால், இவ்வளவு பெரிய அளவிலே தொகையை செலவழிக்கிறபொழுது, அதற்கு நல்ல பலன் ஏற்பட வேண்டும் என்பதை நாம் எல்லோரும் எதிர்பார்க்கிறோம். ஆகையினால்தான் கனம் அங்கத்தினர்கள் ஆங்காங்கு நடைபெறுகின்ற குறைகளைப்பற்றி எடுத்துச் சொல்வார்களேயானால், ஏதோ குறை சொல்லுவதற்காக அப்படிச் சொல்லுகிறார்கள் என்று நான் எடுத்துக் கொள்ளவில்லை. அந்தக் குறைகள் திருந்த வேண்டும். ரூ. 20 கோடி செலவழிப்பதற்கு நல்ல பலன் ஏற்பட வேண்டுமென்கிற முறையிலே ஒவ்வொருவரும் நல்லெண்ணத்தோடு அந்தக் குறைகளை எடுத்துச் சொன்னார்கள் என்றுதான் நான் எடுத்துக்கொள்ளுகிறேன். குறை சொன்னது சரியா, இல்லையா என்பது ஒரு புறம் இருக்க, அவர்களுடைய நல்லெண்ணத்தை நான் ஏற்றுக்கொள்ளுகிறேன் என்பதை முதலில் நான் சொல்லிக்கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக, இன்றைக்குக் கல்வியினுடைய முக்கியத்துவத்தை இந்தச் சபை அறிந்திருப்பது மட்டுமல்ல. மக்களும் நல்ல முறையிலே அதை உணர்ந்திருக்கக்கூடிய காரணத்தினால்தான் கல்வித் துறையிலே இவ்வளவு விரிவாக பணியாற்ற முடிகிறது என்பதையும் நான் தெரிவித்து கொள்ளவிரும்புகிறேன். மக்களிடையே கல்விக்கான ஆர்வம் இல்லாமல் இருக்குமானால், எத்தனை கோடிக்கணக்கான ரூபாய் செலவழித்தாலும் கூட, இந்த அளவிற்கு நாம் கல்வியை விரிவாக பரப்பி இருக்க முடியாது என்பதை நாம் எல்லோரும் உணர வேண்டும். அவ்வாறு சமுதாயத்தில் ஏற்பட்டிருக்கக் கூடிய மாறுதல் பெரிய புரட்சிகரமான மன மாறுதல் என்பதை நான் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். அத்துடன் இன்றைக்கு நாட்டிலே புதியதோர் சமுதாயம் அமைந்து

[Sri C. Subramaniam] [22nd March 1961

நாட்டில் இருக்கக்கூடிய குறைகளை எல்லாம் தீர்க்கக் கூடிய முறையிலே பல்வேறு துறைகளிலே முன்னேற்றம் காண வேண்டும் என்று கூறுகிற பொழுது, அதில் அடிப்படையாக இருக்கக் கூடியது கல்வி என்பதை இன்றைக்கு எல்லோரும் உணர்ந்து வருகிறார்கள். சமீபத்தில் பேராசிரியர் கால்ப்ரைத்.—'இப்பொழுது அமெரிக்க தூதுவராக இந்தியாவுக்கு வர இருப்பவர் ஒரு அரிய கருத்தை வெளியிட்டிருந்ததை அங்கத்தினர்கள் கவனித்திருப்பார்கள் என்று நினைக்கிறேன். ஒரு பின்னடைந்திருக்கக் கூடிய நாட்டில் முன்னேற்றம் அடைய வேண்டும் என்று சொன்னால், அதற்கான சூழ்நிலை அந்த சமுதாயத்தில் இருந்தால்தான் முன்னேற்றம் அடைய முடியும். முன்னேற்றம் அடைவதற்கான சூழ்நிலையிலே முதல் இடம் பெறக்கூடியது கல்வி. எந்த அளவுக்கு கல்வி வளர்ச்சி இருக்கிறதோ, அந்த அளவுக்குத்தான் எந்தத் துறையாக இருந்தாலும் சரி, அதில் முன்னேற்றம் காண முடியும். இன்றைக்குப் பொருளாதாரத் துறையில் முன்னேற்றம் காண்கிறோம் என்று சொன்னால், அதற்குக் காரணம் தொழில் துறையிலே பணியாற்றிவருபவர்கள், தொழில் துறையிலே ஈடுபட்டிருப்பவர்கள் கல்வி பெற்றிருக்கிறார்கள், பயிற்சி பெற்றிருக்கிறார்கள். அந்தக் காரணத்தினால்தான் தொழில் துறையிலே ஓரளவு நல்ல வெற்றி காண முடிந்திருக்கிறது. இன்றைக்கு விவசாயத் துறையிலே நாம் குறிப்பிட்ட அளவு முன்னேற்றம் காண முடியவில்லை. அதற்கு அடிப்படையான காரணம் அதில் ஈடுபட்டிருக்கக் கூடிய பலர் எழுதப் படிக்கவும்கூடத் தெரியாத ஒரு கீழான நிலையில் இருக்கிறார்கள் என்பதுதான். அதனால்தான் விவசாயத் துறையில் நாம் எதிர்பார்த்த அளவுக்கு முன்னேற்றம் காண்பது கஷ்டமாக இருக்கிறது. அந்த முன்னேற்றத்திற்கான சூழ்நிலை ஏற்படுத்துவதற்கு கல்வி கற்பிப்பது மிகவும் அவசியம் என்ற கருத்தை மிகவும் வலியுறுத்தியிருக்கிறார்கள். அந்த அடிப்படையில் நாம் பார்க்கிறபொழுது, நாட்டில் இருக்கக்கூடிய எல்லா மக்களுக்கும், ஜாதி வித்தியாசம் இல்லாமல், மத வித்தியாசம் இல்லாமல் எந்த விதமான வித்தியாசமும் இல்லாமல் எல்லோரும் கல்வி பெறுவதற்கான ஒரு வாய்ப்பை ஏற்படுத்த வேண்டும் என்கின்ற முறையில் தான் இன்றைக்கு அரசியல் சட்டத்தில் கூட 45–வது விதியிலே எல்லோருக்கும் 6 வயதிலிருந்து 14–வது வயது வரையில் இருக்கக்கூடிய எல்லோருக்கும், அதிலும் இந்தச் சட்டம் ஆரம்பித்த 10 வருஷங்களுக்காக எல்லோருக்கும் கல்வி கொடுத்தாக வேண்டும் என்று அதில் விதிக்கப்பட்டிருக்கிறது. திடீரென்று 'கனம் கோவிந்தசாமி அவர்கள் பேசும்பொழுது இது ஏன் நிறைவேற்றப்படவில்லை என்பதற்கு கல்வி மந்திரி சமாதானம்கூற வேண்டும் என்று சொன்னார்கள். உண்மையிலேயே நான் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். அவர் தவறாக எடுத்துக்கொள்ளக் கூடாது. திராவிட முன்னேற்றக் கழகத்தினர் நோக்கமே, அவர்கள் பார்வையே இந்த அடிப்படையில் அமைந்திருக்கிறது என்பதைத் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். ஏனென்று சொன்னால், 45–வது விதியில் இப்படி போட்டிருந்தால் கூட, அதை நாம் நிறைவேற்ற முடியுமா, அதிலே இருக்கக்கூடிய கஷ்டங்கள் என்ன என்பதைப் பற்றி இன்றைக்கு இல்லை, 4 வருஷங்களாக நாம் பேசிக்கொண்டு வருகிறோம். அப்படிப் பேசிக்கொண்டு வருவது மட்டுமல்ல. ஏதோ தனித்து வேறு எங்கேயோ பேசுவது என்பதில்லை. இங்கே பேசி, இங்கே இருக்கக் கூடிய தலைவர்களையும் கலந்து ஆலோசித்து, இன்றைக்கு இருக்கக்கூடிய நிலைமையில் 6 வயதிலிருந்து 14 வயது வரையில் உள்ள எல்லோருக்கும் கல்வி கொடுப்பது என்பது முடியாத காரியம்; ஆகையினால் இந்த இலக்கை மாற்றி அமைத்துக் கொள்ள வேண்டும்; 6 வயதிலிருந்து 11–வயது வரை இருக்கக் கூடிய எல்லோருக்கும் மூன்றாவது ஐந்தாண்டு திட்ட காலத்திற்குள் கல்வி கொடுப்பது என்பதே முடிந்தால் மிகப் பெரிய காரியமாக இருக்கும் என்பதை நாம் எல்லாத் தலைவர்களும் கூடி முடிவு செய்த அடிப்படையில் தான். இன்றைக்கு அகில இந்தியாவிலும் இதைப் பற்றிப் புனராலோசனை செய்ய வேண்டும் என்பதை ஒப்புக்கொண்டிருக்கிறோம். இன்றைக்கு 6–லிருந்து 11–வது வரையிலுள்ளவர்களுக்கு மூன்றாவது ஐந்தாண்டு திட்ட காலத்திற்குள் கல்வி புகட்டுவது என்ற இலக்கை அமைத்துக் கொண்டால் போதும் என்று அவர்கள் ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். அவ்வாறு இருக்கும்பொழுது, திடீரென்று இதற்குச் சமாதானம் சொல்ல

22nd March 1961] [Sri C. Subramaniam]

வேண்டும் என்று கேட்டபொழுது, எனக்குக் கேள்வி கேட்கக் தோன்றிற்று, கனம் கோவிந்தசுவாமி அவர்கள் எந்த உலகத்தில் இருக்கிறார்கள் என்று. அதன் காரணமாகத்தான் எனக்கு அம்மாதிரி கேட்கத் தோன்றிற்று. என்ன காரணம் என்று கேட்டார்கள். கேட்டதற்கு அதை நான் விளக்கினேன்.

அதோடு மட்டுமல்ல. இன்றைக்குக் கல்வி பரவலாக கொடுக்ககூடிய காலத்திலே, அதே சமயத்திலே தரம் குறையாமல் பார்த்துக்கொள்ள வேண்டும் என்பதைப் பற்றி எல்லோரும் வலியுறுத்தினார்கள். அது மிகவும் வரவேற்கக் கூடியது. ஏனென்றால், கல்வி பெரும் அளவுக்குப் பரவலாக இருந்து, தரம் குறைவாக இருக்குமானால் அதன் காரணமாக நமக்கு நல்ல பலன் ஏற்படாது. ஒரு அறிவாளிக்குப் பதிலாக, 1,000 அரை அறிவாளிகள் இருந்தால்கூட, அதற்குச் சமமாகச் சொல்ல முடியாது. 1,000–த்துக்கு அரை 500 என்று கணக்கு போட்டு விட முடியாது. இன்றைக்குக் கல்வி நல்லமுறையில் நமக்கு ஏற்படவேண்டும் என்பதைப் பற்றி யாரிடத்திலும் கருத்து வேற்றுமை இருக்க முடியாது. அதை எப்படிச் சாதிப்பது என்பதுதான் இன்றைக்கு நம் முன்னால் இருக்கக்கூடிய முக்கியமான பிரச்னை. இதில் ஆசிரியர்கள் பொறுப்பு எவ்வளவு இருக்கிறது என்பதை நாம் எல்லோரும் உணர்கிறோம். ஆசிரியர்களுடைய தரம் ஒரு புறம் இருக்க, அவர்கள் எந்த அளவு படித்திருக்கிறார்கள் என்பது ஒரு புறம் இருக்க, அவர்களுடைய மனோநிலையும் அதற்கு உதவியாக இருக்க வேண்டியது அவசியமாக இருக்கிறது. எவ்வளவு தரம் உள்ளவர்களாக, எவ்வளவு திறமை உள்ளவர்களாக இருந்தாலும், அவர்களுக்கு மனக் குறை இருந்துகொண்டிருக்குமேயானால், மனச் சோர்வு இருந்து கொண்டிருக்குமேயானால், இந்த ஆசிரியர் பணியை நல்ல முறையில் நடத்த முடியாது. அந்தச்சோர்வு நம் நாட்டிலே தொடர்ந்து ஆசிரியர்கள் மத்தியிலே இருந்து வந்திருக்கிறது. அதை நாங்கள் உணராமலில்லை. அதைத் தீர்க்க ஐந்து, ஆறு, வருட காலமாக நடவடிக்கைகள் எடுக்கப் பட்டு வந்திருக்கிறது. கடைசியாக சம்பள விகிதத்தை மாற்றி அமைத் திருக்கும் முறையிலே பல அங்கத்தினர்கள் போதாது என்று சொன்னார் கள். பல இடங்களிலே நான் இதை எடுத்துச் சொல்லியிருக்கிறேன். நாம் இன்றைக்குக் கொடுத்திருக்கும் சம்பள உயர்வு நிர்ணயித்திருப்பது ஒரு ஆரம்பம்; அது இதோடு நின்றுவிடக் கூடாது. அவர்களுடைய ஊதி யத்தை உயர்த்த, அந்தஸ்தை உயர்த்தத் தொடர்ந்து முயற்சிகள் எடுக்க வேண்டும் என்ற கருத்தை வலியுறுத்தி வந்திருக்கிறேன். கொடுத்திருப் பது போதாது; ஆனாலும் கொஞ்சம் மனக் குறை நீங்கியிருக்கிறது. ஆனால், அந்த மனக் குறை குறையக் கூடாது, அது வளர வேண்டும் என்று செய் தால், நாம் இத்தனை செலவழிப்பதற்கு முழுப் பலன் இல்லாமல் போய் விடும் என்பதைத்தான் திராவிட முன்னேற்றக் கழக அங்கத்தினர் களுக்குச் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். அவர்கள் குறையை உணர்ந்துதான் கொடுத்திருக்கிறோம். சம்பள விகிதத்தைப் பற்றி ஸ்ரீ மாலி பார்லிமென்டில் பேசி இருப்பதாகச் சொன்னார்கள். எதைப் பற்றிப் பேசியிருக்கிறார்கள், எந்தக் கட்டத்தில் பேசியிருக்கிறார்கள் என்று புரிந்து கொள்ளாமல் பேசுகிறார்கள். "சம்பள உயர்வு போதாது; விலைவாசி உயர்ந்திருக்கும் அளவில் போதாது என்று சொல்லியிருக்கிறார்கள்" என்று சொன்னார்கள். அவர்கள் சொன்னது என்ன? தமிழ் நாட்டிலே கொடுத்திருக்கும் சம்பள விகிதத்தை மற்ற ராஜ்யங்களோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது—டில்லி போன்ற சிறு சிறு பகுதிகளை விட்டுவிட்டு—தமிழ் நாட்டிலேதான் சம்பளம் உயர்ந்திருக்கிறது; மற்ற ராஜ்யங்களோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது இங்கேதான் உயர்ந்திருக்கிறது; மற்ற ராஜ்யங்களையும் மத்திய சர்க்காரில் இருக்கும் மந்திரி அவர்கள் எல்லா ராஜ்யங்களையும் அம்மாதிரி உயர்த்த வேண்டும் என்று சொல்லியிருக்கிறார்கள். ஒவ் வொரு இடத்தில் கொடுத்திருக்கும் இரண்டு ரூபாய், மூன்று ரூபாய் ஐந்து ரூபாய் இதெல்லாம் இன்றைக்கு இருக்கும் நிலையில் போதாது என்று சொல்லியிருக்கிறார்கள். அதை வைத்துக்கொண்டு, மற்ற ராஜ்யங் களின் நிலைமையை வைத்துக்கொண்டு நாம் கொடுத்திருப்பதும் போதாது என்று சொல்லுவது சரியாகாது. எந்த உயர்வு கொடுத்தாலும் போதாது தான். ஆயிரம் ரூபாய் வாங்குகிறவர்களுக்கும் போதாது என்ற நிலைமை

[Sri C. Subramaniam] [22nd March 1961

இருக்கிறது. ஆகவே, நமக்கு இருக்கும் வசதிகளைக்கொண்டு, எந்த அளவுக்குக் கொடுக்க முடியும் என்று பார்க்க வேண்டும். கடைசியாக ஒவ்வொரு ஆசிரியர்களுக்கும் 250 ரூபாய் சம்பளம் கொடுக்க வேண்டும் என்றால், அது தத்துவ ரீதியாக மறுக்க முடியாது. ஆனால், அது கனவு, நனவில் ஆகக்கூடிய விஷயம் அல்ல என்று மறுத்துச் சொல்ல வேண்டியிருக்கிறது. ஆகவே எந்த அளவில் ஆசிரியர்கள் ஊதியத்தை உயர்த்தி அவர்களைத் திருப்தி செய்யலாம் என்ற முறையில் செய்யப்பட்டிருக்கிறது. இப்போதைக்கு திருப்தியடைந்திருந்தாலும், அவர்கள் வாழ்க்கைத்தரத்தை உயர்த்த முயற்சி தொடர்ந்து எடுக்க வேண்டும். அந்த அடிப்படையில் ஆசிரியர்களுக்கு இருக்கக்கூடிய மனக்குறையை நீக்கிவிட்டு, போதிய உற்சாகத்தைக் கொடுத்தால்தான் அவர்கள் கல்விப்பணியில் வெற்றியடைய முடியும். இன்றைக்கு நல்லதொரு சூழ்நிலை ஏற்பட்டிருக்கிறது, ஆசிரியர்கள் மத்தியில். அதை நான் சென்ற இடங்களிலெல்லாம் கவனிக்கிறேன்; நான் கவனிப்பது மட்டுமல்ல, இதிலே சம்மந்தம் இல்லாதவர்களும் ஆராய்ந்து வந்து சொல்லும்போது, "ஆம்; நல்லதொரு சூழ்நிலை இருக்கிறது" என்று எண்ணம் உண்டாகிறது; அப்படி யிருக்கும் சூழ்நிலையைக் கெடுக்க, எந்த விதத்திலானாலும் சரி, அது அரசியல் நோக்கமாக இருந்தாலும் சரி அல்லது என்னைக் குற்றம் சாட்டும் முறையானாலும் சரி அல்லது கல்வி இலாகா இயக்குநரைக் குற்றம் சாட்டுவதாக இருந்தாலும் சரி, எந்த அடிப்படையிலானாலும் சரி, வேறு எந்த நோக்கமானாலும் சரி, அந்த நல்ல சூழ்நிலையைக் கெடுக்காமல் இருக்கவேண்டும் என்ற கோரிக்கையை அடிபணிந்து சமர்ப்பிக்கிறேன்.

அடுத்தபடியாக, இன்றைக்குக் கல்வித் தரம் உயர வேண்டும் என்றால், 35 மாணவர்களுக்கு ஒரு ஆசிரியர் என்றிருக்கிறதை எப்படி மாற்றி அமைக்க வேண்டும் என்று பார்க்க வேண்டும் என்று திரு அன்பழகன் எடுத்துச் சொன்னார். இதுவும் நானாக எடுத்த தீர்மானம் இல்லை. கல்விக்காக ஒரு குழு அமைத்து, அந்தக் குழு ஒவ்வொரு பிரச்னையையும் ஒவ்வொன்றாகப் பரிசிலனை செய்து, கடைசியாக ஏற்றுக்கொண்ட முடிவு என்பதை திரு அன்பழகனுக்குத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். (குறுக்கீடு) அவர்கள் இல்லாமல் செய்த முடிவுகள் என்கிறார்கள். அப்படி என்றால், அவர்கள் இல்லாவிட்டால், இந்தக் குழு செய்தது என்பதை அவர்கள் சிந்தித்துப் பார்க்க வேண்டும். எந்த அடிப்படையில் 35 என்று நிர்ணயிக்கப்பட்டது என்று யோசிக்க வேண்டும். எந்த நாட்டிலும், முன்னேற்றம் அடைந்திருக்கும் நாட்டிலும் கூட, அப்படிச் செய்திருக்கிறார்கள். வேறு நாடுகளை எடுத்துக் காட்டுங்கள் என்று சொன்னார்கள். இன்றைக்கு இங்கிலாந்தில் 50, 60 குழந்தைகளுக்கு ஒரு ஆசிரியர் சொல்லிக்கொடுக்கும் நிலைதான் இருக்கிறது. இன்றைக்கு அங்கு சென்று பாருங்கள். இன்றைகது அங்கு இருக்கும் நிலைமையைப் பார்த்தால், சட்ட ரீதியாக 35 இருந்தாலும், நடைமுறையில் 45, 50 என்றுதான் இருக்கிறது. நான் அங்கிருக்கும் கல்வி அமைச்சரோடு இதை விவாதித்தேன். சட்ட ரீதியாக 35 தானே என்று கேட்டபோது, அம்மாதிரிச் செய்ய முயற்சி எடுக்க வேண்டும், அதைத்தான் செய்கிறேன் என்றார்கள். அங்கே 15 வயது வரைக் கட்டாயக் கல்வி கொடுக்கப்படுகிறது. அதை இன்றைக்கு 16 வயது வரை என்று ஆக்க வேண்டுமென்றால், அமைச்சர் முதலிலே 40, 45 மாணவர்கள் பல இடங்களிலே இருப்பதை—எல்லா இடங்களிலும் இல்லை—சட்ட ரீதியாகக் குறைக்க முதலிடம் கொடுக்க வேண்டும், அதற்கு முயற்சி எடுத்து வருவதாக வெளியிட்டார்கள். இன்றைக்கு நம் தமிழ் நாட்டிலே மட்டுமல்ல, இந்தியாவிலே மட்டுமல்ல, உலகத்திலேயே எல்லோருக்கும் படிப்பு கொடுக்க வேண்டுமென்று ஒரு புதிதாக நடவடிக்கை எடுக்கும்போது, இந்த மாதிரி அடிப்படையில்தான் செய்ய முடிகிறது. அதனால்தான் பரிசீலனை செய்து பார்த்து, 35-ஆ, 40-ஆ, 45-ஆ, 30-ஆ அல்லது 25-ஆ எப்படி வைக்க முடியும் என்று பரிசீலனை செய்து பார்த்து நம்மிடமுள்ள வசதிகளையும் வைத்துக்கொண்டு 6 வயது முதல் 11 வயது வரை கொடுப்பதாக இருந்தால், 35 என்று இருந்தால் நலம் என்று முடிவு செய்யப்பட்டது. இதையே 30 என்றாலும் ஒன்றும் தவறு இல்லை. ஆனால் இன்றைக்கு 35 என்று முடிவு எடுக்கப்பட்டது. அது இன்றைக்கு நடைமுறையிலே இருக்கிறது. இது இப்படியே 35-ல்

22nd March 1961] [Sri C. Subramaniam]

நின்றுவிடும் என்று யாரும் நினைக்க வேண்டாம். இன்றைக்கு 6 முதல் 11 வயது வரை என்கும்போது இப்படிச் செய்திருக்கிறோம். பிற்பாடு பள்ளிக்கூடத்தில் 14 வயது வரை எல்லோருக்கும் படிப்புக் கொடுக்க வேண்டும் என்று வரும்போது, படிப்படியாக அது 30 குழந்தைகளுக்கு ஒரு ஆசிரியர் என்று மாற்றலாம்; ஏன், 25 அல்லது 20 என்றுகூட மாற்றலாம். அதே சமயத்தில் கல்வித் தரம் உயர்ந்துகொண்டே போகும் அளவில் நடவடிக்கைகளை எடுத்து அவற்றை ஏற்றுக்கொண்டு பணியாற்ற வேண்டும் என்ற கருத்தைச் சொல்ல விரும்புகிறேன்.

**Sri K. ANBAZHAGAN:** கனம் அமைச்சரவர்கள் சொல்லும் ஏற்பாட்டில், 35-க்கு மேல் குழந்தைகள் இருந்தால் வேறு வகுப்பு வைத்துக்கொள்ள அனுமதி கொடுக்கிறார்களா இன்றைக்கு ஒரு ஆசிரியர் இரண்டு, மூன்று வகுப்புக்களைச் சேர்த்து நடத்தும் அந்தத் தொல்லையைத் தவிர்க்க அமைச்சர் என்ன செய்ய போகிறார்கள்?

**The Hon. Sri C. SUBRAMANIAM:** 35-க்கு மேல் ஒரு மாணவன் இருந்தாலும் வேறு இன்னொரு ஆசிரியரை நியமித்துக்கொள்ளலாம். 36-க்கு இரண்டு ஆசிரியர்கள் இருக்கலாம். அப்படியே 70-க்கு இரண்டு ஆசிரியர்கள், 71-க்கு மூன்று ஆசிரியர்கள் என்ற முறையிலே செய்து கொள்ளலாம் என்று ஆணை பிறப்பிக்கப்பட்டிருக்கிறது. அந்த அடிப்படையில் நடக்கிறது என்று தெரிவிக்கிறேன். அந்த ஆணை ஒரு வருஷத்திற்கு முன்பே பிறப்பிக்கப்பட்டிருக்கிறது. அந்த அடிப்படையில் புது ஆசிரியர்கள் நியமிக்கப்பட்டு வருகிறார்கள்.

பல வகுப்புக்களுக்கு ஒரு ஆசிரியர் இருப்பதைப் பற்றிச் சொல்லும்போது, அது பள்ளிக்கூடங்கள் எப்படி அமைகிறது என்பதைப் பொறுத்து இருக்கிறது. ஒரு மைல் என்ற விதியை வைத்துக்கொண்டு, 300 ஜனத் தொகை கொண்ட இடத்தில் ஒரு பள்ளிக்கூடம் ஏற்படுத்த விடமாட்டேன் என்கிறார்கள் என்று குறிப்பிட்டார்கள். இன்றைக்கு நாம் எடுத்திருக்கும் முயற்சி, எங்கே இருந்தாலும் ஒரு குழந்தை 5, 6 வயது முதல் 11 வயது வரை ஒரு மைலுக்கு மேல் நடந்து செல்லக்கூடிய நிலைமை இருக்கக் கூடாது என்பது. அந்த அடிப்படையில் பள்ளிக்கூடம் ஏற்பட்டிருக்கிறதா என்று பார்க்க வேண்டும். ஒரு மைலுக்கு மேலானால், எந்த அளவுக்கு இன்னொரு பள்ளிக்கூடம் ஏற்படுத்த வேண்டும் என்று பார்க்க வேண்டும்.

முன்னூறு பேர்கள் உள்ள இடங்களிலெல்லாம் பள்ளிக்கூடங்களை நிறைய ஏற்படுத்திவிட்டால் என்ன என்று கேட்கலாம். 300 என்று இருக்கும்போது எவ்வளவு குழந்தைகள் அங்கு இருக்க முடியும், 30 குழந்தைகள் இருக்க முடியும், அதற்கு நாலு வகுப்புகள் வைக்க வேண்டியிருக்கிறது. கனம் அன்பழகன் அவர்கள் யோசனையை ஏற்றுக் கொண்டால் ஒவ்வொரு ஊருக்கும் நாலு ஆசிரியர்களை போட்டாக வேண்டும். அப்பொழுது ஏழு மாணவர்களுக்கு ஒரு ஆசிரியர் என்ற நிலை வருகிறது. பள்ளிக்கூடங்கள் பெரியதாக அமையும்போது அங்கு அதிகப்படி மாணவர்கள் வருகிறார்கள். ஒவ்வொரு வகுப்பிலும் 35 மாணவர்கள் என்று சொல்லும்போது ஒவ்வொரு வகுப்பிற்கும் ஒவ்வொரு ஆசிரியர் என்ற நிலை ஏற்படுகிறது. ஆக, பள்ளிகளை அமைப்பதில் ஜாக்கிரதையாக இருக்க வேண்டியிருக்கிறது. 300 ஜனத் தொகைக்கு ஒரு பள்ளிக்கூடம் வையுங்கள் என்றால் இரண்டு பர்லாங்கில் ஒரு பள்ளிக்கூடம் இருந்தாலும், எங்கள் கிராமத்தில் வையுங்கள், எங்கள் பகுதியில் வையுங்கள் என்று கேட்கக் கூடும். அதனால் நமது நோக்கமும் நிறைவேறாது. பின்னர், ஆதாரக் கல்வியைப் பற்றிச் சொன்னார்கள். கொஞ்சம் காரசாரமாகவே கனம் அன்பழகன் அவர்கள் பேசினார், வெளிநாடுகளில் இருக்கிறதா என்பது பற்றி. இதே அமைப்பில் இல்லாது வேறு வித அமைப்பில் அதை ஏற்றுக்கொண்டிருக்கிறார்கள். புத்தக ரூபமாக படிப்பு பெறுவதைவிட அனுபவ ரூபமாக படிப்புப் பெறுவதினால் நல்ல பலன் ஏற்படுகிறது என்பதை நிபுணர்கள் ஒப்புக்கொள்ளுகிறார்கள். ஆங்காங்கு அவர்களுக்குத் தக்கபடி, அங்குள்ள சூழ்நிலைக்கேற்ப இதை அமைத்துக்கொண்டிருக்கிறார்கள். நம் நாட்டுச் சூழ்நிலைக்குத் தகுந்தபடி அந்தத் தத்துவத்தை

[Sri C. Subramaniam] [22nd March 1961

நாம் எப்படி பயன்படுத்தலாம் என்று பார்த்து ஒரு திட்டம் கொடுத்திருக்கிறார்கள் மஹாத்மா காந்தியடிகள். அப்போதைய சூழ்நிலைக்கேற்ப ஒரு திட்டம் கொடுத்தார்கள். ஆனால் நம் சமுதாயத்தில் மாறுதல்கள் ஏற்பட ஏற்பட இந்த ஆதாரக் கல்வி முறையை, இந்தத் தத்துவத்தை நிறைவேற்றும்போது, சூழ்நிலைக்கேற்ப அதை மாற்றி அமைத்துக் கொண்டுதான் போகவேண்டும். மஹாத்மா காந்தி ஒரு காலத்தில் அப்படிச் சொன்னார்கள் என்பதற்காக அப்பொழுது சொன்னதை அதையே பிடித்துக்கொண்டு இருக்க வேண்டுமென்று நினைத்தால் கல்வி வளர்ச்சி அடையாது, தேங்கிப்போகும் நிலைதான் ஏற்படும். ஆதாரக் கல்வி பற்றித் தீவிரமாக சொல்லுகிற தீவிர வாதிகளுக்கு நான் இதைச் சொல்ல விரும்புகிறேன். மாறுதல்கள் ஏற்படும்போது, ஆதாரக் கல்வியே அழிந்து போய்விட்டது என்று சொன்னால் மாறி வருகிற சமுதாய அமைப்பிற்கேற்ப அதை மாற்றி அமைக்காவிடில் அது உதவாமலேயே போய்விடும். மாறி வருகிற சமுதாயத்திற்கு ஏற்ற முறையில், அனுபவ அடிப்படையில் அறிவு பெற வேண்டுமென்ற தத்துவத்தை சூழ்நிலைக்கேற்ப மாற்றி அமைத்துக்கொள்ள வேண்டும். நிபுணர்கள் ஆலோசனைக்கேற்ப, அவர்கள் வழி காட்ட வேண்டுமென்ற அடிப்படையில், சந்தர்ப்ப சூழ்நிலைக்கேற்ப மாற்றிக்கொள்ள வேண்டும். அப்படி மாறுதல்கள் செய்யும்போது அதை எதிர்ப்பார்களேயானால், ஆதாரக் கல்வியை ஆதரிப்பவர்கள்தான் அதை எதிர்ப்பவர்களாவார்கள். மாறுதல்கள் ஏற்படும்போது அதை விரும்பாதவர்கள், அதை எதிர்ப்பவர்களை விட, இவர்கள் தான் அதற்கு பாதகம் விளைவிக்கும் நிலையை ஏற்படுத்திவிடுகிறார்கள் என்று சொல்லிக்கொள்வது மிகவும் அவசியமாக இருக்கிறது. உயர் நிலைப் பள்ளி, கல்லூரிகள் இவைகளில் கல்வித் தாம் உயர வேண்டுமென்பது குறித்து நாம் எல்லோரும் ஆவல் கொண்டிருக்கிறோம். அப்படிக் கல்வித் தரத்தை உயர்த்துவதற்கு என்னென்ன நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ள வேண்டுமோ அவைகளை எடுத்துக்கொண்டு வருகிறோம். பின் பாட புத்தகங்கள் பற்றி கனம் பழனிஸ்வாமி அவர்கள் குறிப்பிட்டார். கனம் கருணாநிதி அவர்களும் குறிப்பிட்டார் என்று நம்புகிறேன். இன்றைய நிலையில், பாடப் புத்தகங்கள் குழந்தைகளுக்கு நன்கு உதவக் கூடிய அளவிற்கு, அந்த முறையில் அமையவில்லை என்ற கருத்தை வெளியிட்டிருக்கிறேன். ஆம், அக்கருத்தை மாற்றிக் கொள்வதற்குள்ள ஏது இதுவரையில் ஏற்படவில்லை. நல்ல புத்தகங்களை எந்த முறையில் தயாரிக்க முடியும், எப்படி நல்ல முறையில் அச்சிட வேண்டுமென்பதைப் பற்றி சர்க்கார் வேண்டிய நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ள வேண்டுமென்று அடிப்படையில் நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ளப்பட்டு வருகிறது. அதற்கான தனி அச்சு இயந்திரங்கள் தருவிக்கப்பட்டு ஆரம்ப பள்ளிகளுக்கு உள்ள பாடப் புத்தங்களை சர்க்காரே தயார் செய்ய வேண்டுமென்று சொல்லும்போது சர்க்கார் அதிகாரிகளே புத்தகங்களை எழுத வேண்டுமென்ற அடிப்படையில் அல்ல. தக்க நூலாசிரியர்களைக் கொண்டு நிபுணர்களைக் கொண்டு, திறமையுள்ளவர்களைக் கொண்டு ஆராய்ந்து அந்த அடிப்படையில் புத்தகங்கள் எழுதப்பட வேண்டுமென்று சொல்கிறோமே தவிர, வேண்டுமானால் போட்டி வைத்து அதில் வெற்றி பெறுகிற புத்தகத்தை அச்சிடும் பொறுப்பைத்தான் சர்க்கார் எடுத்துக் கொள்ளப்போகிறதே தவிர, சர்க்காரே புத்தகங்கள் தயாரிக்கப் போகிறதாம் என்று பல பத்திரிகைகள் தலையங்கங்கள் கூட எழுதி விட்டன. நான் எழுதப் போகும் புத்தகம் அல்ல, இயக்குனர் எழுதப் போவதில்லை, அல்லது வேறு அதிகாரிகள் எழுதப் போவதில்லை, நிபுணர்கள் எழுதும் புத்தகங்கள் தான். தனிப்பட்டவர்கள் போட்டி போட்டுக் கொண்டு ஏன் எழுதக் கூடாது, அவற்றை ஏன் போடக்கூடாது ? என்று கேட்கலாம். குறைந்த செலவில் குறைந்த தரமுள்ள புத்தகங்கள் தயார் செய்ய முடியும், மோசமான காகிதத்தில் மோசமாக வெளிவிடலாம், ஆக லாப அடிப்படையில்தான் நோக்கம் செல்கிறதே தவிர குழந்தைகளுக்கு இது எந்தளவு பயன்படும், எந்தளவு உபயோகமாக இருக்கும்' எந்தளவி அறிவு வளரும், என்று பார்த்து வெளியிடக் கூடிய புத்தகங்களைப் பார்ப்பது அரிதாகயிருக்கிறது. ஆங்காங்கு சில சில புத்தகங்கள் இருக்கலாமோ என்னவோ. ஆக, நல்ல புத்தகங்கள் வெளி வரவேண்டும். இப்படி பல்வேறு விதங்களில் கல்வித் தரத்தை உயர்த்த முயற்சி செய்து வருகிறோம். பின்னர்

22nd March 1961] [Sri C. Subramaniam]

மத்திய உணவுத் திட்டத்தை நிறைவேற்றி வருகிறோம். குழந்தைகள் நல்ல உடை அணிந்து வந்தால் நல்ல சூழ்நிலை ஏற்படும் என்பதற்காக உடை வழங்கும் திட்டம் இருக்கிறது. பின், பள்ளிச் சீரமைப்பு வேலை களில், ஆசிரியர்கள் பங்கு கொள்ளலாமா என்பது பற்றி பலவித கருத் துக்கள் தெரிவிக்கப்பட்டன. ஆசிரியர்கள் காலம் வீணாகப் போகிறதே என்றெல்லாம் கூறப்பட்டன. படிப்பு சொல்லிக்கொடுக்கக்கூடிய காலத் தில் இந்தப் பணிகளில் ஈடுபடக்கூடாது என்று வற்புறுத்தப்பட்டிருக்கிறது. இதை மீறிச் செய்கிறார்கள் என்றால், சொல்வதை மீறி பல்வேறு செயல் களில் ஈடுபடுகிறவர்கள் இல்லை என்றில்லை. வேறு இயக்கங்களில் ஈடு பட்டிருப்பது, ஆசிரியர்கள் ஈடுபட்டிருப்பது நமக்குத் தெரியாதா? அப் பொழுது ஒன்றும் கூறாமல், இப்பொழுது இதற்கு வந்து பள்ளிக்கூடமே கெட்டுப் போய் விட்டது, எல்லாம் மோசமாக நடக்கிறது என்று ஆசிரியர் களுக்கு பரிந்து சொல்கிறார்கள். ஒன்று நான் இங்கு தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். சட்டம் இருந்தால், இன்னபடி செய்யவேண்டும் இல்லையெனில் வேலையை விட்டு நீக்கி விடுவோம் என்று சொல்லலாம். மந்திரியாக இருந்தாலும் சரி, இயக்குனராகயிருந்தாலும் சரி, வேறு எந்த ஜில்லா அதிகாரியாகயிருந்தாலும் சரி, இந்தக் காலத்தில் யாரையும் நிர் பந்தப்படுத்தி விதிகளுக்கு மீறி அதிகப்படியாக வேலை செய்ய வேண்டு மென்று, அவர்கள் இஷ்டம் இல்லாமல் வேலை செய்ய வேண்டுமென்று நிலையை ஏற்படுத்துவது என்றால் அந்நிலையை ஏற்படுத்த முடியும் என்று என் அனுபவம் சொல்லவில்லை, மற்றவர்களுக்கு அந்த அனுபவம் இருந் தால் நான் பாராட்டுகிறேன். ஆகவே, யாரையும் நிர்பந்தப் படுத்துவது என்பதில்லை. முன்பு நான் கூறியதுபோல் நல்லதொரு சூழ்நிலை ஏற் பட்டிருக்கிறது. நல்ல ஆர்வம் மக்களிடையே ஏற்பட்டிருக்கிறது. ஆக, ஆர்வத்துடன் இத்தகைய நல்ல காரியங்களில் ஈடுபட்டிருக்கும் ஆசிரியர் களுக்கு நாம் பாராட்டுதல் கூறவேண்டும். அவர்கள் இப்படிப்பட்ட பணி களில் ஈடுபடுவது பற்றி அவர்களை ஊக்குவிக்க வேண்டுமென்று நான் பணிவுடன் ஆனால் உறுதியுடன் முக்கியமாக திராவிட முன்னேற்றக்கழக அங்கத்தினர்களுக்கும், அவர்களது உப தலைவர் அவர்களிடமும் விண் ணப்பித்துக்கொள்ள விரும்புகிறேன்.

அடுத்தபடியாக, ஆசிரியர்களுக்கு வீடு கட்டிக் கொடுக்கும் திட்டத்தைப் பற்றி பலர் குறிப்பிட்டார்கள். இதில் அங்கத்தினர்கள் அக்கரை கொண் டிருப்பதைப்பற்றி நான் வரவேற்கிறேன். உடனடியாக இதை செய்து கொடுக்க வேண்டியதுதான். பல ஆசிரியர்களுக்கும் பள்ளி இருக்கும் 1-30 இடத்தின் பக்கத்தில் குடியிருக்க வீடுகள் இல்லை என்றால் p.m. பிரயோசனம் இல்லை, அதிலும் பக்கத்தில் இருக்க வேண்டும். பள்ளிகூடம் ஒரு பக்கமும், குடியிருக்கும் இடம் இன்னொரு பக்கத்திலும் இருந்தால் பல விதமான கஷ்டங்கள் ஏற்படுகின்றன. ஆகவே இன்றைக்கு ஆசிரியர் களுக்கு உடனடியாக நிறைவேற்றி வைக்க வேண்டிய திட்டம் என்கின்ற அளவில் இதை எடுத்து நடத்த வேண்டியது மிகவும் அவசியம். அதிலும் குறிப்பாக கிராமப்புறங்களில் பரவலாக இந்த வீடு கட்டும் திட்டத்தை நிறைவேற்றி வைப்பதின் மூலமாகத்தான் பள்ளிகளில் நல்ல முறையில் கல்வி உயருவதற்கும் அடிப்படையாக அமையும் என்பதை குறிப்பிட விரும்புகிறேன். இல்லையென்றால் வீடுகளுக்குச் செல்வதற்காக பஸ்களை எதிர்பார்த்துக்கொண்டும், கடிகாரத்தை எதிர்பார்த்துக் கொண்டும் இருக்க வேண்டிய நிலைதான் ஏற்படுகிறது. பக்கத்தில் வீடுகள் இல்லையென்றால் எப்போது வீடுகளுக்குப் போவது என்று பார்க்க வேண்டியது அவசிய மாகிறது. இன்றைக்கு போலீஸ் அதிகாரிகள் எல்லோருக்கும் வீடுகள் கட்டிக் கொடுக்க வேண்டும் என்றுள்ள திட்டத்தின் அடிப்படையில் மூன்று நான்கு வருடங்களுக்குள் இந்தத் திட்டத்தை நிறைவேற்றி, குறைந்து 100-க்கு 80 பேர்கள் இந்த வாய்ப்பைப் பெறக்கூடிய அளவுக்கு இந்தத் திட்டத்தை நிறைவேற்றி வைக்க வேண்டும் என்கின்ற எண்ணத்தில்தான் நாம் இப்போது வேலை செய்து கொண்டிருக்கிறோம். ஆசிரியர்கள் விஷ யத்தில் இதைவிட இன்னும் தீவிரமாக வீடு கட்டும் திட்டத்தை எடுத்துக் கொள்ள வேண்டும் என்று சொல்லுகின்ற கருத்தை நான் ஏற்றுக் கொள்கிறேன். இதில் என்னால் இயன்ற வரை முயற்சி எடுத்துக்கொள் வேன் என்கின்ற உறுதியைத்தான் இப்போது உங்கள் முன்னால் என்னால் சொல்லிக்கொள்ள முடியும்.

[22nd March 1961

DEPUTY SPEAKER : I think the House has no objection to sit till the Hon. Minister finishes his speech.

THE HON. SRI C. SUBRAMANIAM : கல்விச் சலுகை அளிக்கின்ற விஷயத்தைப் பொறுத்தவரை, இப்போது 11-வது வகுப்பு வரையிலும் எல்லோருக்கும் கல்வி பெற வாய்ப்பு கொடுக்க வேண்டும் என்ற அடிப்படையில் நாம் திட்டங்களை வகுத்திருக்கிறோம். இதில் திராவிட முன்னேற்றக் கழகத்தைச் சேர்ந்த கனம் சத்தியவாணிமுத்து அம்மையார் அவர்கள் இதன் காரணமாக பின்தங்கிய மக்கள் பழி வாங்கப்படமாட்டார்கள் என்று உறுதிமொழி தர வேண்டும் என்று சொன்னார்கள். இதில் ஏன் இப்பேர்ப்பட்ட வார்த்தைகளை உபயோகிக்க வேண்டும் என்று தெரியவில்லை. தயவு செய்து இப்பேர்ப்பட்ட வார்த்தைகளை இதற்காக உபயோகிக்க வேண்டாம் என்று கேட்டுக்கொள்கிறேன். பிற்பட்ட மக்களுக்கு பாதகம் விளைவிக்க வேண்டும் என்றோ, அல்லது அவர்களை பழி வாங்க வேண்டும் என்றோ யாரும் நினைக்கமாட்டார்கள், அவ்விதம் நினைத்திருப்பார்கள் என்று எண்ணியிருந்தால், மனதில் இருக்கின்ற அந்த எண்ணத்தை நீக்கிவிட வேண்டும் என்று மிகவும் பணிவுடன் வற்புறுத்திக் கேட்டுக்கொள்கிறேன். இன்றைக்கு சமூகத்தில் பிற்பட்ட நிலையில் இருக்கின்ற பின்தங்கிய மக்களை முன்னுக்குக் கொண்டுவர வேண்டும் என்கின்ற எண்ணம்தான் எல்லோருக்கும் இருக்கிறது, குறிப்பாக இந்த சர்க்காருடைய கொள்கையும் அதுதான்—வேண்டுமென்றால் அதற்கான முயற்சிகள் போதாது என்று சொல்லுங்கள், அதை ஒத்துக்கொள்கிறேன், ஆனால் அதற்காக பின்தங்கிய மக்கள் பழிவாங்கப்படுவார்கள் என்றெல்லாம், கருத்துக்களை சொல்லுவது அவ்வளவு நல்லதல்ல என்பதை தெரிவித்துக் கொள்கிறேன், அவர்கள் எதை நினைத்துக்கொண்டு இவ்விதம் சொன்னார்களோ தெரியவில்லை, அல்லது அவர்களுடைய பேச்சினுடைய பழக்கம் தான் இவ்வாறு அமைந்து விட்டதோ என்று நினைக்க வேண்டியிருக்கிறது, ஆகவே இது போன்ற வார்த்தைகளை விட்டு விடுங்கள் என்று கேட்டுக் கொள்கிறேன். இன்றைக்கு மற்றவர்களுக்கு புதுச் சலுகைகள் கொடுப்பதின் காரணமாக பிற்பட்டவர்களுக்கு கொடுக்கப்பட்டுவரும் சலுகைகள் போய்விடும் என்று யாரும் நினைக்க வேண்டாம். இன்றைக்குப் பிற்பட்ட சமூகத்தினர்களுக்கு குறிப்பாக அரிஜனங்களுக்கு கொடுக்கப்பட்டுவரும் எந்த சலுகையும் இப்போது மற்றவர்களுக்கு கொடுக்கப்பட்டு வரும் சலுகைகளில் ஒரு சிறிய அளவு கூட குறையாது என்பதை தெரிவித்துக் கொள்கிறேன், இதில் யாரும் சந்தேகப்பட வேண்டிய அவசியம் இல்லை என்பதையும் தெரிவித்துக்கொள்கிறேன். (ஆரவாரம்) சமூகத்தில் இருக்கின்ற மற்ற ஏழைகளுக்கு சலுகை அளிக்க வேண்டும் என்று சொல்லும் போது பிற்பட்ட மக்களுக்கு கொடுக்கப்பட்டு வரும் சலுகைகளை குறைத்து விட்டு அதன் மூலம் இவர்களுக்கு சலுகை கொடுக்க வேண்டும் என்ற அடிப்படையில் எந்தவிதமான நடவடிக்கையும் எடுக்கப்படவில்லை, எடுக்கப் போவதும் இல்லை, யாரும் அவ்விதம் எடுக்கவும் மாட்டார்கள் என்று நம்புகிறேன். பிற்பட்ட மக்கள் எந்த அளவுக்கு சமூகத்தில் உயர்ந்து வருகிறார்களோ, அந்த அளவுக்கு நாட்டில் சோஷியலிச சமுதாயத்தை அமைக்க முடியும், அது மட்டுமல்ல, அடித்தளத்திலிருக்கின்ற மக்கள் எந்த அளவுக்கு உயருகின்றார்களோ அந்த அளவுக்கு நாட்டில் பொது மக்களுடைய வாழ்க்கைத் தரத்தை நல்ல முறையில் அமைக்க முடியும் என்கின்ற கொள்கையை காங்கிரஸ் கட்சி தன்னுடைய தனிப்பட்ட கொள்கையாக ஏற்றுக்கொண்டிருக்கிறது. ஆகவே இதில் கனம் சத்தியவாணிமுத்து அம்மையார் அவர்கள் சந்தேகப்பட வேண்டிய அவசியமே யில்லை, காங்கிரஸ் கட்சியினுடைய ஆட்சியில் என்றைக்கும் அரிஜனங்களுக்கு நியாயம் வழங்கப்படும், அதுமட்டுமல்ல, நியாயத்திற்கு மேலாகவும் சலுகைகள் அளிக்கப்படும் என்பதை தெரிவித்துக்கொள்கிறேன். (ஆரவாரம்): . . .

SRI M. KARUNANITHI : கான்பூர் மகாநாட்டில் பேசிய கனம் அமைச்சர் அவர்கள் பின்தங்கிய பிள்ளைகளுக்கு தனியாக ஆசிரியர்களை அமர்த்தி அதிக நேரம் பாடங்கள் சொல்லித்தரப்படும் என்ற கருத்தை தெரிவித்திருந்தார்கள், அதற்கு சர்க்கார் செய்திருக்கும் முடிவு என்ன என்பதை விளக்க வேண்டுகிறேன்.

22nd March 1961]

THE HON. SRI C. SUBRAMANIAM : ஆம், அதற்கான பணியும் இப்போது நடந்து கொண்டுதான் இருக்கிறது என்பதை கனம் கருணாநிதி அவர்களுக்கு மகிழ்வுடன் தெரிவித்துக் கொள்கிறேன். இப்போது இருக்கக்கூடிய நேரத்திற்குப் பின்னால் கூடுதலாக இன்னொரு மணி நேரம் பாடம் சொல்லிக்கொடுக்க வேண்டும் என்று ஆசிரியர்களை கேட்டுக் கொள்ளும்போது, அவர்களும் அதை ஏற்றுக்கொள்ளும்போது, இதே திராவிட முன்னேற்றக் கழக அங்கத்தினர்கள், பார்த்தீர்களா, இப்போதுள்ள வேலை போதாது என்று இன்னும் கூடுதலாக வேலை செய்யச் சொல்லுகிறார்கள், இது நியாயமா என்றெல்லாம் ஆசிரியர்கள் மனதில் துவேஷத்தை வளர்க்கக்கூடிய விதத்தில் பிரசாரம் பண்ண ஆரம்பித்து விடுவார்கள். இந்த விதத்தில் துவேஷம்தான் வளருமே ஒழிய பிற்பட்ட பிள்ளைகளுக்கு இதனால் என்ன நன்மை கிடைக்கிறது என்பதைப் பார்க்க மறந்து விடுகிறார்கள். ஆகவே இனிமேல் யாரும் இம்மாதிரியான துவேஷத்தை வளர்க்கின்ற முறையில் எந்த விதமான பிரசாரத்தையும் செய்ய வேண்டாம், அதன் மூலம் எந்த விதமான நன்மையும் ஏற்படாது என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன். இன்றைக்கு இதற்காக திட்டம் வகுக்கப்பட்டு, பல பள்ளிகளிலும் தனிப்பட்ட முறையில் பாடம் சொல்லிக் கொடுப்பதற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. இதையும் ஒரு குறையாக, மதிய உணவுத் திட்டத்தில் ஆசிரியர்களை உபயோகிக்கிறார்கள், சீரமைப்புக்கு ஆசிரியர்களை உபயோகிக்கிறார்கள், இவர்களுக்கு தங்கள் பிள்ளைகளுடைய முகத்தைப் பார்க்க நேரம் வேண்டாமா, பெண்சாதியை பார்க்க நேரம் வேண்டாமா என்றெல்லாம் பேச ஆரம்பித்து சர்க்காரை குறை சொல்ல ஆரம்பித்து விடுகிறார்கள், இதில் அவர்களாகவே விரும்பி வந்து வேலை செய்ய முன்வந்தாலும்கூட, அவர்களாகவே போட்டி போட்டுக் கொண்டு வேலை செய்ய முன் வந்தாலும், அவர்கள் கட்டாயமாக வேலை செய்ய வேண்டியிருக்கிறது என்று அழகாக பேசி குறைகளை சொல்லும் போதுதான் இம்மாதிரியான முயற்சிகளில் ஈடுபட்டிருக்கின்ற நம்முடைய மனமும் தளர்ந்து போகின்றது என்பதை சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். அடுத்ததாக . . .

SRI A. GOVINDASAMI : 11-வது வகுப்பு வரையில் சலுகைகள் அளித்திருப்பதற்கு மகிழ்ச்சி தெரிவிக்கும் நேரத்தில் பின்தங்கிய மக்கள் என்ற இனத்தில் இருக்கின்றவர்களுக்கு 'most backward and backward communities' எந்த விதமான பாதகமும் ஏற்படாது என்கின்ற உறுதியை அமைச்சர் அவர்கள் தர வேண்டும். அப்போதுதான் அமைச்சர் அவர்களுடைய நல்லெண்ணத்தில் நம்பிக்கை ஏற்பட முடியும்.

THE HON. SRI C. SUBRAMANIAM : நான் முன்னால் தெரிவித்தது, முன்னால் கொடுத்த வாக்குறுதி பொதுவான வாக்குறுதிதான். இன்றைக்கு சமூகத்தில் யார் சலுகை பெறுபவர்களாக இருந்தாலும், அவர்களுக்கு அந்தச் சலுகைகள் கிடைப்பதில் எந்த விதமான பாதகமும் ஏற்படாது என்ற பொதுவான வாக்குறுதியை கொடுத்தேன். கனம் சத்தியவாணிமுத்து அம்மையார் அவர்கள் அரிஜனங்களைப்பற்றி குறிப்பாக சொன்னதின் காரணமாக, அதைத் தனியாக சொன்னேனே தவிர வேறு ஒன்றுமில்லை. மற்றவர்களுக்கு சலுகை கிடைப்பதால் இப்போது சலுகை கிடைத்துக் கொண்டிருப்பவர்களுக்கு இப்போது கிடைத்துக்கொண்டிருக்கக் கூடிய சலுகைகள் குறைக்கப்பட்டுவிடும் என்று யாரும் எடுத்துக்கொள்ள வேண்டியதில்லை. இதில் குறிப்பிடப்பட்டிருக்கும் சலுகைகள் எல்லாம் கல்வி பெறுவதற்குரிய சலுகைகளே தவிர உத்தியோகம் கிடைப்பதிலோ அல்லது வேறு எந்த விஷயத்திலும் அல்ல என்பதையும் தெரிவித்துக் கொள்கிறேன். அரிஜனங்களுக்கும் பிற்பட்ட வகுப்பாருக்கும் அதிக அளவில் சலுகைகள் கொடுக்க வேண்டும் என்று அரசியல் சட்டத்திலே சொல்லப்பட்டிருக்கிறது. ஆகவே இப்போது சலுகைகள் பெற்றுக்கொண்டிருப்பவர்கள் யாராக இருந்தாலும்சரி அவர்களுக்கு தாங்கள் பெறக்கூடிய சலுகைகள் எந்த விதத்திலும் குறைக்கப்பட மாட்டாது என்கின்ற உறுதியை கூறிக்கொள்கிறேன்.

[22nd March 1961

(SRI K. SATTANATHA KARAYALAR : The English School-Leaving Certificate is also there.)

THE HON. SRI C. SUBRAMANIAM : அடுத்ததாக, கன்னியாகுமரி ஜில்லாவைப் பொறுத்தவரை, ஆசிரியர்களுக்கு இருந்து வரும் சில வேறுபாடுகளைப்பற்றி இங்கு சொன்னார்கள். இதில் இருக்கின்ற சிக்கலை முதலாவது புரிந்து கொள்ள வேண்டியது மிகவும் அவசியம். கன்னியாகுமரி ஜில்லாவில் கல்வி நடப்பது மட்டுமல்ல, அங்குள்ள முறைகளில் பல வேறு விதமாக இருந்துவருகின்றன. ஷிப்ட் முறை ஸிஸ்டம் எல்லாம் அங்கே நடந்து கொண்டிருந்தது. ஆசிரியர்களுடைய படிப்பைப் பொறுத்த மட்டிலும் இங்குள்ள ஆசிரியர்களுக்கும், அங்கேயுள்ள ஆசிரியர்களுக்கும் பெருத்த வித்தியாசம் இருந்து வந்திருக்கிறது. அங்குள்ள ஆசிரியர்களின் பயிற்சி காலம் ஒரு வருடம். நம்முடைய ராஜ்யத்தில் இருந்து வருவது இரண்டு வருடங்கள். இதையும் நாம் நன்றாக யோசித்துப் பார்க்க வேண்டும். இங்கு தமிழ்நாட்டில், எஸ்.எஸ்.எல்.ஸி. படிப்பு ஆங்கிலத்தோடு சேர்த்து படித்து, இரண்டு வருடங்கள் ஆசிரியர் பயிற்சி பெற்ற பிறகு தேறி வருகிறவர்களை நாம் செகண்டரி கிரேட் ஆசிரியர்கள் என்று குறிப்பிடுகிறோம். அதே நேரத்தில், ஆங்கிலத்தில் எல்லா பாடங்களும் இல்லாமல், ஒன்பது வருடங்கள் படித்துவிட்டு, ஒரு வருடம் ஆசிரியர் பயிற்சி பெற்று தேறி வருகின்றவர்களையும் ஒன்றாக எடுத்துக்கொள்ள முடியுமா என்பதைப்பற்றி நாம் ஆலோசனை செய்து பார்க்க வேண்டும். பதினொரு வருடம் படித்து விட்டு இரண்டு வருடம் ஆசிரியர் பயிற்சியும் முடித்தவர்களும், ஒன்பது வருடங்கள் படித்து விட்டு ஒரு வருடம் ஆசிரியர் பயிற்சியும் முடித்தவர்களும் ஒன்றாக வைத்துக்கொள்ள வேண்டும் என்று அங்குள்ளவர்கள் சொல்லுகின்றார்கள். அப்படியென்றால் இது இங்குள்ளவர்களுக்கு நியாயம் வழங்குவதாக இருக்குமா என்பதைப்பற்றியும் நாம் ஆலோசிக்க வேண்டும். ஆகவே இரண்டு பேர்களையும் பாகுபாடு செய்யத்தான் வேண்டியிருக்கிறது. பின்னால் அவர்களுக்கு வேறு விதியே இல்லையா என்றால் அதற்கும் வழி செய்யப்பட்டிருக்கிறது, அதாவது 10 வருடம் பணியாற்றியிருப்பவர்கள் ஒரு வருடம் ஆசிரியர் பயிற்சி பெற்றிருந்தாலும்கூட, அவர்களும் செக்கண்டரி கிரேட் ஆசிரியர்களாக எடுத்துக்கொள்ளப்படுவார்கள் என்கின்ற அடிப்படையில் முடிவு செய்யப்பட்டிருக்கிறது. இந்த முடிவு சர்க்காராலேயே எடுக்கப்பட்ட முடிவு அல்ல, அங்குள்ள எல்லா எம்.எல்.ஏ.-க்களையும் அங்குள்ள ஆசிரியர்களின் குழாத்தையும் கலந்து எடுக்கப்பட்ட முடிவு. ஆகவே இதற்கு மேலாக இந்தப் பிரச்னையை கிளப்பிக்கொண்டிருந்தால் அது இப்போது இருக்கக் கூடிய நல்ல சூழ்நிலையை கெடுக்கக் கூடியதாகவே இருக்கும் என்பதை தெரிவித்துக் கொள்கிறேன். அதே போன்றுதான் எல்.டி. ஆசிரியர்களைப் பற்றியும் குறிப்பிட்டார்கள். எல்.டி. ஆசிரியர்களுக்கு அங்கு கொடுக்கப்பட்டு வந்தது 40 ரூபாயோ, 50 ரூபாயோ தான். இங்கு நாம் இப்போது 150 ரூபாய் என்று ஏற்படுத்தியிருக்கிறோம். முன்பு அவர்கள் எவ்வளவு குறைவாக சம்பளம் வாங்கியிருந்தாலும்கூட, நம்முடன் சேர்ந்த பின்னால் இங்கேயிருக்கக்கூடிய சம்பளத்தை அவர்களுக்கும் கொடுத்தாக வேண்டும் என்று நாம் சொல்லுகிறோம். இப்போது 50 ரூபாய் வாங்கினாலும் 100 ரூபாய் வாங்கினாலும் 100 ரூபாயில் ஆரம்பிக்கலாம் என்பதுதான் திட்டம். இதற்கு முன்னால் நான்கு வருஷம் வேலை செய்துகொண்டிருந்தோம், அந்த நான்கு வருஷத்திற்கும் சேர்த்து நான்கு வருஷ உயர்வு கொடுக்க வேண்டும் என்று கேட்கிறார்கள். அதுதான் அங்குள்ள நிலைமை. பரிசீலனை செய்து குறைவான சம்பளத்தை உயர்த்தும்போது திட்டப் பிரகாரம், விதிப் பிரகாரம் மிகக் குறைவான சம்பளம் இருந்தால் அந்த அளவுக்கு உயர்த்த வேண்டும் என்று உயர்த்த முடியுமே தவிர இதற்கு முன் பணியாற்றிய வருஷங்களுக்கு சேர்த்து அந்த அளவுக்கு உயர்த்திக் கொடுக்க வேண்டுமென்று சொன்னால், இப்படி ஏற்றுக் கொள்ளும் விதி இல்லை. இவர்களுக்கு இப்போது எந்த விதத்திலும் குறைவு கிடையாது. இப்போது ஒவ்வொருவரும் ரூ. 30—40 அதிகமாக வாங்கும் நிலை ஏற்பட்டிருக்கிறதே தவிர ஒன்றும் குறைவு கிடையாது. தயவு செய்து அவர்கள் மனதிலே ஆசையைக் கிளப்பி சூழ்நிலை கெடக்கூடிய நிலைமையை ஏற்படுத்த வேண்டாம். எல்லோருக்கும் கொடுக்கப்பட்டுள்ள சலுகைகள்

22nd March 1961] [Sri C. Subramaniam]

அவர்களுக்கும் கொடுக்கப்பட்டுள்ளன. இனிமேல் 1956-லிருந்து சேர்கிற வர்களுக்கு இந்தப் பிரச்னே வராது. ஏனென்ருல் இந்த மாதிரி பயிற்சி பெற வேண்டும் என்று வைத்து விட்டோம். அதனுல் அவர்களுக்கும் உடனடியாக இந்த சம்பளம் கொடுத்துவிடுகிருேம். இத்தகைய சூழ் நிலையில், நம்மிடத்தில் வந்து சேரும் சூழ்நிலையில் சில சங்கடங்கள் ஏற்பட்டுத்தான் தீரும். ஆக இதனை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

Sri M. WILLIAM : On a point of clarification, Sir. For the graduate teachers in Kanyakumari district, a gradation list has been prepared and approved by Government. But we find that those who are juniors are getting more salary than those who are seniors to them as per gradation list. Will the Government be pleased to give at least the salary of the junior to the senior?

The Hon. Sri C. SUBRAMANIAM : இதிலே திடீரென்று கேள்வி கேட்டால் பதில் சொல்ல முடியாது. இதைப்பற்றி குறிப்பாக எழுதிக் கொடுத்தால் பரிசீலனை செய்து யாருக்காவது நியாயம் வழங்கப் படாமல் இருந்தால் நியாயம் வழங்க ஏற்பாடு செய்ய முடியும் என்று தெரிவித்துக்கொள்கிறேன்.

இன்ஞெரு விஷயத்தை இங்கே முக்கியமாக விவாதத்தில் வந்ததைப் பற்றி குறிப்பிட விரும்புகிறேன். இங்கே தனிப்பட்டவர்களைப்பற்றி பேசுவது சரியல்ல. நான் மத்தியில் எழுந்து பேச வேண்டாமென்று இருந்து விட்டேன். ஒருவர் ஒரு டீ.இ.ஓ. பற்றிப் பேசிஞர். இன்ஞெருவர் யாரையோ பற்றி பேசிஞர். (குறுக்கீடு) திராவிட முன்னேற்றக் கழகத்தைச் சேர்ந்தவரும் பேசிஞர். தனிப்பட்டவர்களைப் பற்றிப் பேசுவது—அதிலும் குற்றம் குறை கூறுவது தவறு என்று தெரிவித்துக்கொள்ள விரும்பு கிறேன். டீ.இ.ஓ. பற்றி சில கருத்துக்களை கனம் சிதம்பரநாத நாடார் அவர்கள் தெரிவித்தார்கள். அவர்கள் சொன்னது சரியாக இருக்கலாம்—சரியாக இல்லாமலும் இருக்கலாம். ஒரு தனிப்பட்ட கருத்தை பொதுச் சபையில் சொல்லி தனது கருத்துக்கு வலிவு தேட முயற்சிப்பது தவறு என்று தெரிவித்துக் கொள்கிறேன். இன்ஞென்று இப்போது ஞாபகத் திற்கு வருகிறது. கனம் சத்தியவாணிமுத்து அம்மையார் அவர்கள் தான் தனிப்பட்ட ஒரு பெண்ணின் விஷயத்தைப்பற்றி, சர்ட்டிபிகேட் பற்றி குறிப்பிட்டார். அந்த பெண் என்ன சொன்ஞள் என்பதுதான் அவர்களுக்குத் தெரியும். இதில் இருக்கக்கூடிய குறைகள் என்ன, என்ன காரணத்தினுல் இது மறுக்கப்பட்டது என்ற பூரா விஷயமும் அவருக்குத் தெரிந்திருக்க முடியாது. அவர்கள் சொன்னதையும் வைத்துக்கொண்டு உண்மையாக என்ன நடந்தது என்று பரிசீலனை செய்துதான் முடிவு எடுக்கப்படுகிறது. ஆகையால்தான் தனிப்பட்ட கருத்துக்களை இங்கு எடுத்துச் சொல்வதன் மூலமாக ஒரு கட்சியை எடுத்துச் சொல்லுகிருர்களே தவிர—இப்போது உடனடியாக என்ஞல் இதைப்பற்றி எடுத்துச் சொல்ல முடியாது. பத்திரிக்கையில் வரும் போது ஏதோ பெரிய தவறு நடந்துவிட்டது என்ற எண்ணம் ஏற்படலாம், அந்த முறையில் உண்மையான நிலைமை என்ன என்பது தெரியாமல் போகிறது. தனிப்பட்டவர்களுக்கு நியாயம் வழங்கப் படவில்லை என்ருல் எழுதிக் கொடுக்கலாம். பரிசீலனை செய்கிருேம். பரிசீலனை செய்து வேறு மாதிரி முடிவு இருந்தால், நாம் நினைப்பது நடக்கவில்லை என்ருல் நியாயம் வழங்கப்படவில்லை என்று சொல்லக் கூடாது. எல்லாவற்றையும் பார்த்துத்தான் முடிவு எடுக்கப்படுகிறது என்று தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன்.

கடைசியாக, இந்த 100 ரூபாய் மாதத்திற்குக் குறைவாக வரும்படி உள்ளவர்களை ஏழைகள் என்று வைத்திருப்பதிலே அதை 150 ஆக உயர்த்த வேண்டுமென்று சிலர் சொன்ஞர்கள், 200 ஆக உயர்த்த வேண்டு மென்று சிலர் சொன்ஞர்கள், 300 ஆக உயர்த்த வேண்டும் என்று சிலர் சொன்ஞர்கள், சிலர் எந்த விதமான வரம்பும் வேண்டாமென்று சொன் ஞர்கள். நான் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன், இது ஒரு ஆரம்பம்.

இப்போது 100 ரூபாயில் ஆரம்பிக்கிறோம். பிறகு 150, பிறகு 200, பிறகு 250, பிறகு 300 என்று படிப்படியாகச் செல்லும்போது பணக்காரர், ஏழை என்ற வித்தியாசம் இல்லாமல் தகுதி இருந்தால் எவ்வளவு வேண்டுமானாலும் படிக்கலாம் என்று ஏற்படுத்தி விட்டால் நாம் ஒரு லட்சியத்தை அடைந்ததாகக் கருதலாம். இதன் மூலமாகக் குறிப்பிடும் போது, 11 வயது வரையில் எந்த வித வித்தியாசமும் இல்லாமல் சம்பளச் சலுகை கொடுக்கப்படுகிறது என்று சொல்லும்போது இதை நான் முதற்படியாகத்தான் சொன்னேன். நாம் இன்னும் பல படிகளைத் தாண்ட வேண்டியிருக்கிறது. நூறு என்று வைத்திருப்பது சரி என்று சொல்லவில்லை. இன்றைக்கு இருக்கும் வரவு செலவுத் திட்டத்தை வைத்துக்கொண்டு இதற்கு மேல் போவதானால் அதிகமான அளவுக்குத் துண்டு விழும், இன்னும் பல சிக்கல்கள் வரும். அதனால்தான் இப்போது 100 என்று வைத்திருக்கிறோம். தொடர்ச்சியாகப் பரிசீலனை செய்து, கொஞ்சம் கொஞ்சமாக உயர்த்தி, கடைசியாக தகுதியுள்ளவர்கள் யாராக இருந்தாலும், பணக்காரர்கள் என்ற காரணத்தினால் தகுதி இல்லாதவர்கள் எத்தனை வருஷம் வேண்டுமானாலும் படிக்கலாம் என்ற நிலை நீங்கி, தகுதியுள்ளவர்கள் எந்த அளவு வேண்டுமானாலும் படிக்க அத்தகைய ஒரு லட்சியத்தை அடைவதற்கு அந்தப்படியில் மேலே ஏற முயற்சித்துக் கொண்டிருக்கிறோம். அதில் ஏறுவது சுலபமல்ல. இதற்கு இந்தச் சபையின் முழு ஒத்துழைப்பும் மக்களுடைய முழு ஒத்துழைப்பும் கிடைக்கும் என்ற நம்பிக்கையைத் தெரிவித்துக்கொண்டு இந்த மான்யத்தை . . .

**SRI M. KARUNANITHI** : திருவாரூர் பற்றி . . .

**THE HON. SRI C. SUBRAMANIAM** : திருவாரூர் விஷயத்தைப்பற்றிச் சொல்லுகிறேன். தனிப்பட்டவர்களுக்கு கொடுத்துவிட்டதாகச் சொன்னார்கள். தனிப்பட்டவர்களுக்குக் கொடுக்கவில்லை. ரிஜிஸ்டர் செய்யப்பட்ட சொஸைட்டிக்கு கொடுக்க முடிவு செய்யப்பட்டிருக்கிறது. என்னென்ன அபிவிருத்திகள் செய்ய வேண்டும், என்னென்ன காரியங்கள் செய்ய வேண்டும் என்ற கண்டிஷன்கள் பேரில் கொடுக்கப்பட்டிருக்கிறது. அபிவிருத்திகள் நடக்குமானால் தனிப்பட்ட சொஸைட்டிக்கு, ரிஜிஸ்டர்ட் சொஸைட்டிக்கு கொடுப்பது தவறல்ல என்று முடிவு செய்யப்பட்டிருக்கிறது. கனம் அங்கத்தினர் கருணாநிதிக்கு ஒருவர் பெயர்தான் தெரிகிறது. அதை வைத்துக்கொண்டு தனிப்பட்டவர்களுக்கு கொடுக்கப்பட்டதாக நினைக்கிறார். ரிஜிஸ்டர் செய்யப்பட்ட சொஸைட்டிகளுக்கு கொடுக்கப்பட்டு, நிபந்தனைகள் போட்டு, நடவடிக்கைகள் எடுக்கப்பட வேண்டும். அபிவிருத்திகள் செய்யப்பட வேண்டும், செய்தால்தான் அவர்களிடத்தில் இருக்கும் இல்லையென்றால் எந்த விதமான நஷ்ட ஈடும் இல்லாமல் எடுக்கப்படும் என்ற நிபந்தனையின் பேரில் சொஸைட்டிக்குக் கொடுக்கப்படுகிறது என்று சொல்லிக்கொண்டு . . .

**SRI A. GOVINDASAMI** : எய்டெட் ஸ்கூல்பற்றி . . .

**THE HON. SRI C. SUBRAMANIAM** : ஆம். எய்டெட் ஸ்கூல் பற்றிச் சொன்னார்கள். பதினைந்து சத விகிதம் இருந்ததை 10 சத விகிதம் ஆக்கியதைப்பற்றி கனம் அங்கத்தினர்கள் கோவிந்தசாமி அவர்களும், லட்சுமிகாந்தம் அம்மாள் அவர்களும் குறிப்பிட்டார்கள். பதினைந்து சத விகிதம் கொடுக்கப்பட்டு வந்தபோது என்னவென்றால் அடிப்படை சம்பளம் என்ன கொடுக்கப்பட்டு வந்ததோ அதில் 15 சத விகிதம் கொடுக்கப்பட்டது. இப்போது சம்பளத்தை உயர்த்தியிருக்கிறோம். பஞ்சப்படியை சம்பளத்தோடு சேர்த்திருக்கிறோம். இப்போதைய சம்பள விகிதத்தில் 10 சத விகிதம் ஆனது முன்னாலே இருந்த சம்பள வீதத்தில் 15 சத விகிதத்தை விட அதிகமாக இருக்கிறது என்று கணக்கிடப்பட்டு நிரூபித்துக் காண்பிக்கப்பட்டிருக்கிறது. பதினைந்து, பத்து என்று மட்டும் பார்த்துக்கொண்டு சொல்ல வேண்டாம், மேலாலேயே பார்த்துக்கொண்டு பேச வேண்டாமென்று திராவிட முன்னேற்றக் கழகத்தைச் சேர்ந்தவர்களை கேட்டுக் கொள்கிறேன். (குறுக்கீடு) உங்கள் வாடை அங்கும் அடித்து விட்டது போல இருக்கிறது. சாவகாச தோஷம். ஆக, இதைப் பார்த்தால் 10 சத விகிதம் என்பதானது முன்பு கொடுத்ததைவிட அதிகத் தொகை

22nd March 1961] [Sri C. Subramaniam]

என்பதை உணர்வார்கள். யாருக்கும் கஷ்டம் ஏற்படுத்த வேண்டும் என்று சர்க்காருடைய கொள்கை இல்லை. கல்வித் திட்டம் முழுதும் வெற்றி அடைய வேண்டும் என்று ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

இத்தனை பேசியதற்குப் பிற்பாடாவது, கல்வித் துறையிலாவது வெட்டுப் பிரேரணை வேண்டாம், அதற்கு கனம் அங்கத்தினர் அன்பழகன் மற்றவர் களுக்கு வழிகாட்டியாக இருப்பார்கள் என்று தெரிவித்துக் கொண்டு முடித்துக் கொள்கிறேன்.

SRIMATHI T. N. ANANDANAYAKI : On a point of clarification, Sir. Certain schools are levying very high fees. High fees are collected from students in some schools in North Madras. A student of I standard has to pay Rs. 3 as fees. It is not as if only rich people are sending their children to schools. I would like the Hon. Minister . . . .

THE HON. SRI C. SUBRAMANIAM : இதிலே சம்பளம் வாங்கும் பள்ளிகளுக்குப் போக வேண்டும் என்று யாரையும் நிர்ப்பந்தம் செய்வது கிடையாது ; பக்கத்தில் சம்பளம் இல்லாமல் சொல்லிக் கொடுக் கும் பள்ளிகளை விட்டு விட்டு, இதற்குத்தான் போக வேண்டுமென்று சொன்னால் அவர்கள் சொல்லுகிற சம்பளத்தைக் கொடுத்துத்தான் ஆக வேண்டும்.

DEPUTY SPEAKER : Is the hon. Member Sri Anbazhagan pressing his cut-motion.

SRI K. ANBAZHAGAN : Yes, Sir.

DEPUTY SPEAKER : The question is—

" That the allotment of Rs. 21,00,87,200 under Demand XV —Education be reduced by Rs. 100. "

The cut-motion was put and lost.

DEPUTY SPEAKER : The question is—

" That the Government be granted a sum not exceeding Rs. 21,00,87,200 under Demand XV—Education."

The motion was put and carried and the Grant was made.

DEPUTY SPEAKER : The House will now adjourn and meet again at 8-30 a.m. tomorrow. 1-4 p.m.

The House then adjourned.

VII.—PAPERS LAID ON THE TABLE OF THE HOUSE.

*A.—Statutory Rules and Orders.*

*Nil.*

*B.—Reports, Notifications and other papers.*

† 113. *Note on Demand V—Motor Vehicles Acts—Administration.*

114. *Introductory Memorandum to the Statement of Demands for Grants for Excess Expenditure in the year* 1957–58.

115. *Notice of Demands for grants for excess expenditure in the year* 1957–58.

116. *Demands for Grants for Further Expenditure and Detailed Supplementary Estimates thereof for the year* 1960–61.

117. *Notice of Demands for Grants for further Expenditure in the year* 1960–61.

118. *Speech of Hon. Minister for Finance, presenting the Statement of Demands for Grants for Excess Expenditure in the year* 1957–58 *to the Madras Legislative Assembly on the* 21*st March* 1961.

119. *Speech of Hon. Minister for Finance, presenting the Third Supplementary Estimates for* 1960–61 *to the Madras Legislative Assembly on the* 21*st March* 1961.

## APPENDIX.

[Vide answer to the starred question No. 999 asked by Sri A. A. Rasheed, Sri T. S. Ramaswamy and Sri N. R. Thiagarajan at the meeting of the Legislative Assembly held on 22nd March 1961, page 293 supra.]

**A.—A report on the visit of the Chief Minister and Finance Minister to the Steel factories at Jamshedpur, Rourkela and Bhilai.**

**The programme included a visit to the Tata Iron and Steel Works on December 7th, Rourkela on December 8th and Bhilai on December 9th, 1960.**

2. The programme at Tatanagar started off with a visit to the Tata Locomotive and Engineering Company (TELCO) which turns out annually 100 metre-gauge locomotives and 12,000 Mercedez-Benz trucks. It is significant that the indigenous content of the locomotives produced at TELCO is as high as 98·5 per cent. The excellent performance of TELCO is based on a completely mechanized foundry which can cast up to 500 tons a month, a modern machine shop and a well-equipped tool-room.

3. This was followed by a visit to the Indian Tube Company, a joint venture started in 1956 by Tatas and Stewarts Lloyds. This firm manufactures steel tubes of various sizes by three different processes, viz.,

(1) The Fretz-Moon process in which the tube is formed by welding ;

(2) the Electrical Resistance Welding Process in which the tube is formed by injecting a high frequency electric current and jointing the two ends of the tube ; and

(3) the seamless process in which the tube is formed by piercing heated steel billets.

4. The programme was rounded off with a visit to one of the steel-melting shops of the Tata Iron and Steel Company (TISCO) where pig iron is converted into steel which is cast into ingots, a blooming mill in which ingots are cogged into blooms of different sizes and the Medium Structural Mill which rolls angles, channels, beams, rounds and other structurals. These units were symbols of the recently completed expansion programme under which the annual capacity of TISCO was doubled from one million tons to 2 million tons of steel ingots.

5. While at Jamshedpur, the Ministers were also shown round the National Metallurgical Laboratory by its Director Dr. B. R. Nijhawan. Of special interest at the National Metallurgical Laboratory is the Pilot Low Shaft Furnace which has been in operation for nearly two years. Set up with the assistance of the West German firm, Demag, the furnace has a rated output of 15 tons of pig iron per day and involved an investment of Rs. 27 lakhs. Pig iron has been produced in this furnace using 100 per cent non-coking coal. Tests will shortly be carried out in the

[22nd March 1961

Pilot Low Shaft Furnace using the magnetite ores of Salem, for which purpose 2,000 tons of Salem ore and 2,000 tons of limestone, also from Salem, are being sent to the National Metallurgical Laboratory. During the visit to the National Metallurgical Laboratory, attention was specially drawn to the valuable work done at the Laboratory on the beneficiation and sintering of Salem magnetite ores and the production of substitute alloys like nickel-free stainless steel.

6. On December 8th, the Ministers visited the Rourkela Steel Project, one of the three steel projects undertaken by the Government of India during the Second Five-year Plan. The Technical Consultants of the project are the West German Firms, Krupps and Demag. The steel plant has an installed capacity of 1 million tons of ingot steel per annum and is served by Rolling Mills producing exclusively flat products like plates, strips, tin-plates, etc. The most distinctive feature of Rourkela is that, for making 75 per cent of the steel output of the plant, viz., 750,000 tons per annum, three L.D. converters are employed. The L.D. process is an Austrian process for steel making and significantly bears the names of two Austrian industrial centres Linz and Donawitz. The characteristic feature of this process is that oxygen of 99·5 per cent purity is used for the production of steel. Its superiority over the conventional processes of steel-making consists in its relatively lower capital and processing costs. Besides, it is a fast process and one ton of L.D. steel can be produced per minute.

7. The Ministers were shown round the Bhilai Steel Project on December 9th, 1960. This has been established with Soviet assistance and has an installed capacity of one million tons of ingot steel. Bhilai concentrates mainly on the production of rails and structurals. One lakh and fifty thousand tons of billets are also produced annually for supply to re-rollers. The two distinctive features of this Project are—

(1) High top pressure is employed in the blast furnace, which results in a higher output of pig-iron per ton of coke ; and

(2) a sintering plant has been set up to render iron-ore fines which are too small for use in the blast furnace suitable for reduction in the furnace by forming them into large size lumps.

